மலர் மணம்

புது வாழ்வு தொடங்கப் புகும் இளையோரும், அவரை வாழவைக்கும் பொறுப்புடைய பெரியோரும், ஒருசேரப் படித்துப் பயன்பெற வேண்டும் என்னும் நோக்குடன், இந்த வாழ்வியல் விளக்க நெடுங்கதை நூல் அளிக்கப்பெறுகிறது.

ஏற்றருள்க!

பதிப்பாசிரியர்
சிங்காரகுமரேசன்

மே, 1961

விலை ரூ. 6-00

இந்நூற் கதையினை எவரும் களவாடக்கூடாது. ஆசிரியரின் ஒப்புதல் பெற்று, இக்கதையினை நாடகமாக அமைக்கவோ, நடிக்கவோ செய்யலாம்.


**பைந்தமிழ்ப் பதிப்பகம்,**

*புதுச்சேரி.*

மேலுறை உட்பட அச்சிட்டவர்கள் : முத்தமிழ்ச் செல்வி அச்சகம், 1/65, பிராட்வே, சென்னை-1.

# மலர் மணம்

ஆசிரியர் :

புலவர் சுந்தர சண்முகனார்

*மலர் மணம் : ஆசிரியரின் 36-ஆவது வெளியீடு !*

ஆசிரியரின்

## ஏனைய வெளியீடுகளுட் சில :

வாழ்வியல்

- வீடும் விளக்கும்
- வாழ்க்கை ஓவியம்
- வள்ளுவர் கண்ட மனையறம்

செய்யுள்

- செந்தமிழ் ஆற்றுப்படை
- தமிழ் அர்ச்சனை
- பொங்கல் புது வாழ்த்து
- குழந்தைப் பாட்டு
- சிறுவர் செய்யுட் சோலை

இலக்கியம்

- திருக்குறள் தெளிவுரை
  (*முதல் மூன்று பாடங்களுக்கு*)
- திருக்குறள்—பாயிரவியல்—உரை

இலக்கணம்

- எழுத்தாளர் துணைவன்

கதை

- ஆத்திசூடி அமிழ்தம்

வரலாறு

- காந்தியின் நாகரிகம்

ஆராய்ச்சி

- தெவிட்டாத திருக்குறள்

## கொளு :

*பெரியவர்கள் தங்கள் சொந்த விருப்பு வெறுப்பை மட்டும் அடிப்படையாகக் கொண்டு, பிள்ளைகளின் வாழ்வை வலிந்து அமைக்க முயலக்கூடாது; பிள்ளைகளின் இயல்பையும் உணர்ந்து—விருப்பத்தையும் மதித்து, இயன்றவரையும் அவர்கட்கு ஏற்றாற்போல் ஒத்து ஒழுகியே அவர்தம் வாழ்வைச் செம்மை செய்யவேண்டும் —என்பது உளநூல் உண்மை. பெற்றோரைப் பேணுதலை விட, பிள்ளைகட்குப் பெரிய கடமை வேறு இருக்க முடியாது; பெற்றோருக்காக, காதல் என்று என்ன— உடல் பொருள் உயிர் அனைத்தையுமே விட்டுக் கொடுக்கலாம்—என்பது அறநூல் அமைதி. எனவே, பெற்றோர்கள் விட்டுக்கொடுக்க வேண்டுமா?—பிள்ளைகள் விட்டுக்கொடுக்க வேண்டுமா? கதைக்குள் செல்லலாமே!*

**சு, ச,**

## குறள்கள்:

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

# 1

“ **திருமண மக்கள் நீடூழி வாழ்க!** இந்நாள் போலவே எந்நாளும் நன்னாள் ஆகுக! எல்லா நலங் களும் பெற்று இனிது திகழ்க!”

என்று வாழ்த்திய குரல் ஒன்று, தாலிகட்டும் வேளையில் என்காதுக்கு எட்டியது. ஆம்! “திருமண மக்கள் நீண்டகாலம் வாழவேண்டும். அவர்கள் இப் பொழுது மகிழ்ச்சியாய் இருப்பதுபோலவே, எப் பொழுதும் மகிழ்ச்சியுடன் இணைபிரியாது வாழவேண் டும். அவர்களுக்கு எல்லா நலங்களும் வளங்களும்

இனிது பெருகவேண்டும்!" என்று நான் என் மனத்திற்குள் வாழ்த்திக்கொண்டிருந்தபோது, அதே கருத்துடைய அந்த வாழ்த்துக்குரல் அதேநேரத்தில் என் காதில் விழுந்தது. இருவர் வாழ்த்துக்களிலும் எவ்வளவு ஒற்றுமை! இருவருக்கும் எவ்வளவு ஆர்வம்—எவ்வளவு அக்கரை! எத்துணை பரிவு—எத்துணை பற்று!

அந்த வாழ்த்துக் குரல் யாருடையது என்று திரும்பிப் பார்த்தேன்—தெரியவில்லை. குரல்வந்த திக்கு நோக்கிச் சென்றேன்—தெரியவே இல்லை. பெண்கள் நின்றுகொண்டிருக்கும் பகுதியிலிருந்துதான் அந்தக் குரல் வந்திருக்கிறது—என்பது மட்டும் நன்ருகத் தெரிகிறது. அது ஒரு பெண்ணின் குரல்தான்—என்பதும் தெளிவாகப் புரிகிறது. யார் அந்தப் பெண்? என் நினைவு அலைகள் அடுக்கடுக்காக எங்கெங்கோ ஓடித் திரும்பின.

  

ஆம், இருபது ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள்.........

  

## 2

"அழகன்—அழகன்—" என்று அழைக்கும் ஒலி, ஒருநாள் எங்கள் கல்லூரி விடுதியில் எதிரொலித்தது. அன்று ஞாயிறு விடுமுறைநாள். முதல்நாள் இரவு கல்லூரி நாடகத்திற்காகக் கண் விழித்திருந்ததினுல், விடுமுறை நாளாயிருந்தும் வெளியே செல்லாது, பட்டப் பகலில் படுக்கையில் படுத்துப் புரண்டுகொண்டிருந்தேன். அழகன் என்ற அழைப்பு எந்த மாணவரின் குரலாகவும் தென்படவில்லை. முன்பின் கேட்டறியாத புத்தொலியாகவே புலப்பட்டது. உடனே விழுந்தடித்துக் கொண்டு என் அறைக்கு வெளியே சென்றேன். தாழ்வாரத்தில் அஞ்சலகத்து ஆள் ஒருவர், நின்றுகொண்டிருந்தார். அவர் என்னைக் கண்டதும், 'நீங்கள்தான் அழகனு'? என்று கேட்டார். ஆம், என்ன செய்தி? என்று வினவினேன் நான். என்னிடம் கையெழுத்து வாங்கிக்கொண்டு ஒரு கடிதத்தைத் தந்து மறைந்தார் அவர்.

யான் கையெழுத்திட்டேனே தவிர, கடிதத்தைக் கையில் பெற்றேனே தவிர, என் நெஞ்சம் ஒரு நிலையில்

நிற்கவில்லை. என்னென்னவோ எண்ணியெண்ணி, அலை கடல் நடுவண் அகப்பட்ட துரும்பென அலைந்து தவித்தது. ஏன்? அன்று ஞாயிற்றுக்கிழமை; அஞ்சலகத்துக்கு விடுமுறைநாள். எவரும் கடிதம் பெறவியலாது. சனிக்கிழமை அனுப்பப்படும் எக்கடிதமும் ஞாயிறு கடந்தபின் திங்கட்கிழமைதான் உரியவரை அடைய முடியும். சனிக்கிழமை யனுப்பும் கடிதம் ஞாயிறே கிடைக்க வேண்டுமாயின், வழக்கத்துக்குமேல் இரண்டணா அஞ்சல் தலை கூடுதலாக உறைமேல் ஒட்ட வேண்டும். செய்தி விரைவில் சேரவேண்டும் என்னும் குறியுடையோரே இவ்விதம் செய்தல் வழக்கம். இதனை ஆங்கிலத்தில் எக்ஸ்பிரஸ் டெலிவரி (Express Delivery) என்பர். எனக்கு அன்றைய ஞாயிறில் கிடைத்த கடிதம் இத்தகையதே. இதுதான் என் மனத்தடுமாற்றத்தின் காரணமாகும்.

பொங்கல் விடுமுறைக்கு ஊருக்குச் சென்றிருந்த நான், பெரும்பொங்கல், மாட்டுப்பொங்கல் போனதும், கரிநாளுக்கு மறுநாள் புறப்பட்டுக் கல்லூரி வந்து சேர்ந்துவிட்டேன். வந்த பத்து நாட்களிலேயே இக் கடிதம் என்னைத் தொடர்ந்து வந்திருந்தது. அனைத்துலகிலுமுள்ள தமிழ்ப் பெருங்குடிமக்கள் அனைவரும் 'தைதோம் தைதோம்' என்ற எக்களிப்புடன் தைப் பொங்கல் விழாவினைக் கொண்டாடினராயினும், எங்கள் வீட்டினர்க்குமட்டும் அவ்வாண்டைய பொங்கல்விழா சுவைக்கவில்லை. எங்கிருந்து சுவைக்கும்? என் தாயார்க்குத்தான் உடல்நலம் இல்லையே! எங்களுக்காகப் பொங்கல் பெருநாள் நின்று விடும்? அது வந்தது போலவே போயிற்று. உடலை நன்கு பாதுகாத்துக் கொள்ளும்படி அன்னையிடம் உருக்கமாகச் சொல்லி

விட்டு யான் கல்லூரிக்கு வந்துவிட்டேன். வந்த சில நாட்களில் விரைவுக்கடிதம் வந்தால் எனக்கு என்ன செய்ய ஓடும்?

கடிதத்தைப் பிரித்துப் பார்க்காமலேயே, என் அன்னையின் உடல்நிலையைப் பற்றியதுதான் என்று யான் எவ்வாறு துணியமுடியும்? வேறு எங்கிருந்தாவது வந்திருக்கக் கூடாதா? ஒரு நல்ல காரியத்தை விரைவில் முடிக்கவேண்டும் என்று யாராவது எழுதியிருக்கக் கூடாதா? இன்னும் மறைக்க வேண்டியதேன்? என் தாய்க்கு உடல்நலம் இன்மையாலும் மாதமும் தையாக இருப்பதாலும் என் திருமணத்தை விரைவில் நடத்திவிடலாம் என்று எண்ணிக்கொண்டிருக்கின்ற என் தந்தையின் விருப்பமறிய வட்டமிட்டுக் கொண்டிருக்கும் கழுகுகளாகிய வெளியூர்ப் பெண் தரகர்கள் சிலர், என்னைப் பெண் வீட்டிற்குக் கூட்டிக் கொண்டு செல்வதாகவும், அது குறித்து அண்மையில் கடிதம் எழுதுவதாகவும் சொல்லிச் சொல்லி என்னைத் திணறடித்துக்கொண்டிருந்தார்களே, அவர்களில் ஒருவர் விழுந்தடித்துக்கொண்டு ஏன் எனக்கு எழுதியிருக்கக் கூடாது? இவ்வாறு எண்ணியபோது எனது திகில் குறைந்தது; உடலில் ஒருவித விறுவிறுப்பு ஏறிற்று.

உணர்ச்சிவயப்பட்டவனாய், கடிதத்தைப் பிரிக்காமலேயே, உறையின் மேலிருந்த அஞ்சல் முத்திரையைக் கூர்ந்து நோக்கினேன். அதில், 'மலைச்சாரல்' என்ற எங்கள் ஊர்ப் பெயரே புலப்பட்டது. மீண்டும் எனக்கு நடுக்கம் ஏற்பட்டது. தாயின் உடல்நிலை மிகவும் சீர் கேடடைந்திருப்பதாகத் தந்தை எழுதியிருக்க வேண்டுமெனப் பதறினேன். ஆயின் முகவரியை உற்று

நோக்கியபோது தந்தையின் எழுத்தாகத் தெரிய வில்லை. அவ்வெழுத்தினுள் ஓர் ஏந்தெழில் மங்கை தென் பட்டாள். ஆம், அது ஒரு பெண்ணின் எழுத்துத்தான்; அழகிய பெண்ணின்—அறிவுள்ள பெண்ணின் எழுத்துத் தான். ஒருவரின் எழுத்தைக்கொண்டு அவருடைய அழகினையும் அறிவினையும் அளவிட முடியுமா? அழகும் அறிவும் நிரம்பப்பெற்றில்லாத நண்பர்கள் சிலர், அழ கான எழுத்து எழுதுவதை யான் அறிவேன். அவை பெற்றுள்ள சிலரது எழுத்து அருவருப்பாக இருப்பதும் எனக்குத் தெரியும். எழுத்தின் அழகைப்பற்றி இள மையில் கவலைப்படாதிருந்த காந்தியடிகள், பின்னர் அதன் இன்றியமையாமையை உணர்ந்ததாகத் தம் வர லாற்றில் எழுதியுள்ளார். ஆனல் இது டாக்டர்களுக்கு மட்டும் விதிவிலக்காகும். எவ்வளவுக் கெவ்வளவு புரி யாமல் எழுதுகிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு பெரிய டாக்டர்கள் என்பது பொருள்போலும்! வயிற்றுப் போக்கைக் கட்டுப்படுத்துவதற்கு டாக்டர் மருந்து எழுதித்தர, எழுத்துப் புரியாத மருந்துக் கடைக்காரர் வயிற்றுப்போக்குப் போவதற்கு உரிய மருந்தைக் கொடுத்துவிடின், நோயாளி ஒரே போக்காகப் போய் விடுவானே என்பதை எண்ணும்போதுதான் எழுத்தின் அருமை புரிகிறது!

அந்த ஏந்தெழில் நங்கையின் எழுத்து அத்தகைய தன்று. அவளைப் போலவே அவள் எழுத்தும் அழகியது. அவ்வெழுத்தைக் கண்டோர் எழுதியோரையும் காணத் துடிப்பர். அவ்வெழுத்தில் விரைவோட்டம் தென் பட்டது.

அந்த விரைந்தபோக்கு வழக்கத்துக்குமேல் ஒரு புது மெருகைத் தந்து, மேலும் அழகினை மிகைப்படுத்தி யிருந்தது. பரபரப்புடன் இதயப் படபடப்புடன் கடிதத்தைப் பிரித்தேன்; படித்தேன்.

அன்புள்ள அத்தான்!

வணக்கம். நலம்.

நாளை மறுநாள் திங்கட்கிழமை நம் ஊரில் "ஊருணிப் பொங்கல் விழா" நடக்கப் போகிறதல்லவா? அன்றுகாலை உங்களை ஆவலோடு எதிர்பார்க்கிறேன். வந்தால் ஆயிற்று; இல்லையேல் போயிற்று.

இப்படிக்கு
**உங்கள் அல்லி**

இக்கடிதத்தை இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பப் படித்தேன். அருமையான செந்தமிழ்ப் பாக்களைக் கூட ஒருமுறைக்குமேல் மறுமுறை சேர்ந்தாற் போல் நான் பார்த்ததில்லை. ஆனால், இக்கடிதத்தில் மட்டும் என்ன இருக்கிறதோ? என்னை யறியாது பார்த்துக்கொண்டே யிருந்தேன். படிக்கப் படிக்கப் புதுமை புலப்பட்டுக் கொண்டே யிருந்தது. எவ்வளவு நேரந்தான் படிப்பது? மடித்து உறைக்குள் போட்டேன். சட்டைப் பையில் போடுவதற்குள் மீண்டும் ஒரு முறை எடுத்துப் படித்தேன். இந்நிலையில் என் நண்பர் சிலர் என்னை உற்றுநோக்கத் தொடங்கினர். அது என் செயலுக்கு முற்றுப்புள்ளி வைத்தது. வந்த கடிதம் பெட்டியின் அடிப்பகுதியை அடைந்தது.

அல்லியின் விருப்பப்படி நான் நடந்துகொள்ள வேண்டுமாயின் திங்கட்கிழமை கல்லூரிக்குப் போக முடியாது. விடுமுறை எடுக்கவேண்டும். அதற்கு எங்கள் கல்லூரித் தலைவர் ஒப்பவேண்டும். அவர் விடுமுறை தந்தாலும் ஊர் சென்றால் என் தந்தையார் காரணம் கேட்பார். எல்லோரும் ஒத்துக்கொண்டாலும் என் உள்ளம் ஒத்துக்கொள்ள வேண்டுமே. விடுமுறை எடுப்பதென்றால் எனக்கு வேப்பங்காய் வெறுப்பு. எப்போதுமே அது எனக்குப் பிடிக்காது. படிக்குங் காலத்துக் கைக்கொண்ட இக் கெட்ட பழக்கந்தான் அலுவலகத்தில் வேலைபார்க்கும் பொழுதும் சிலரை ஆட்டிப் படைக்கின்றது. தொட்டில் பழக்கம் கடைசி மட்டும் அல்லவா? எனவே, யான் எப்படி விடுமுறை எடுத்துக்கொள்ள வியலும்?

அப்படியே விடுமுறை எடுப்பதென்றாலும் அல்லிக்காகவா எடுப்பது? இந்நிலையில் சிலர், அல்லிக்கும் எனக்கும் ஏதோ நீண்டநாள் காதல் என்று நினைக்கக் கூடும். காதலும் இல்லை—கத்தரிக்காயும் இல்லை. எப்போதுமே எனக்குக் காதலில் நம்பிக்கையில்லை. சிலர், காதல் மாசற்றது—புனிதமானது—தெய்வீகமானது—என்றெல்லாம் புனைந்துரைப்பார்கள். காமம் ஏதோ இழிந்த உணர்ச்சி என்றும், காதலோ உயர்ந்த நிலையுடையது என்றும் அவர்கள் கூறுவர். எனக்கென்னவோ காதலுக்கும் காமத்துக்கும் வேற்றுமையே தெரிவதில்லை. இன்னுஞ் சிலர், கைகூடும்வரை காதல், கைகூடியபின் காமம் என்பர். ஆனால், கைகூடும் வரை காமம், கைகூடியபின் காதல் என்பது என் அகராதிப் பொருள். உணர்ச்சி வயப்பட்டவர்களே தம் உணர்ச்சியைத் தீர்த்துக்கொள்ளக் காதல் காதல் என்று

கரடியாய்க் கத்திக் கதறிக் கொண்டிருப்பார்கள். நான் அதனைக் காமம் என்பேன். திருமணம் செய்துகொண்டு கணவனும் மனைவியுமாகக் கருத்தொருமித்து வாழ் வதைத்தான் நான் மனமாரக் காதல் என்பேன். இத் தகைய உள்ள நிலையுடைய நானா ஒரு பெண்ணின் அழகுக்கு மயங்கிவிடுவேன்? கடிதம் எழுதினால் மசிந்து விடுவேனா ?

ஏன், உண்மையைச் சொல்லி விடுகிறேனே! அல்லிக்கும் எனக்கும் காதலே இல்லை. அதற்குப் பதில் பலநாள் பகைதான் உண்டு. அல்லி என் தாய் மாமன் மகள். அதேபோல நானும் அவள் தாய் மாமன் மகன். என் தந்தையின் தங்கையை அல்லியின் தந்தை மணந்து கொண்டார். அவர் தங்கையை என் தந்தை மணந்து கொண்டார். எனவே, யானும் அல்லியும், அம்மான் மக்கள் அத்தை மக்களாகிய நெருங்கிய குருதியுறவு (இரத்த பாசம்) கொண்டவர்கள்.

நான் சில கதைகளில் படித்திருக்கின்றேன் : காத லனும் காதலியும் அம்மான் மக்கள் அத்தை மக்களா யிருப்பார்கள். இளமையிலிருந்தே, ஏன் குழந்தைப் பருவத்திலிருந்தே இருவரும் இணைபிரியாது ஒற்றுமை யுடன் விளையாடினார்கள். அவர்கள் காதலோ நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வானத்தை முட்டிக்கொண்டது.

'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்' என்றபடி, பிற்காலத்தில் வளரப்போகும் அவர்கள் காதல் முற்காலத்திலேயே முளைவிட்டுக் கிளைத்தது, என் றெல்லாம் கதைகளில் எழுதுவார்கள்.

ஆனால் என் நிலைமை இத்தகையதன்று. நானும் அல்லியும் பச்சை எதிரிகளாகவே பன்னாட்களாக வளர்ந்து வந்தோம். இருவரும் ஒரே ஊரினர். அடுத் தடுத்த தெருவினர். இளம் பருவத்திலிருந்தே நான் அவள் வீட்டுக்குச் சென்றாலுஞ்சரி, அல்லது அவள் எங்கள் வீட்டுக்கு வந்தாலுஞ்சரி, இருவரும் எதிலும் போட்டி போடுவோம். விளையாட்டுப் பொம்மைகளை நான் இழுக்க அவள் இழுக்கப் பொம்மை இரண்டாகி விடும். நான் அவளை அடிக்கடி அடித்து விடுவேன். அவள் என்னை வைதுவிடுவாள். எங்கள் சண்டையை விலக்கி விடத்தான் பெரியவர்களுக்குச் சரியாயிருக்கும்; போதும் போதும் என்றாகிவிடும்.

நாங்கள் ஓரளவு வளர்ந்தவர்களாகியும் இதே நிலைமைதான் நீடித்தது. அல்லி வயதுக்கு வரும் பருவம் நெருங்கியிருந்தாள். 'நான் ஒரு நாள் அவள் வீட்டிற்குச் சென்றிருந்தேன். விளையாட்டாகப் பேச்சுத் தொடங் கினோம். விளையாட்டு வினையாயிற்று. பேச்சு சூடு பிடித்தது. வழக்கம்போல் என் கையும் சூடு பிடித்தது. அவள் தலையில் ஒரு கொட்டு வைத்து விட்டேன். அவள் 'ஓ' என்று அலறியழுதாள். இவையெல்லாம் படிப்பவர் களுக்குச் சிறிதும் சுவைக்கா. என் அன்பே! அழகே! கண்ணே! பொன்னே! என்று நாங்கள் கொஞ்சி னோம்என்று எழுதினாலல்லவா படிப்பதற்குச் சுவைக்கும்? அதற்கு நான் என்ன செய்வது! நடந்ததைத்தானே எழுத முடியும்?

அல்லியின் அலறலைக் கேட்ட அவள் தந்தை ஓடிவந்தார். அவள் நடந்ததை அப்படியே சொல்லி விட்டாள். சொல்லவேண்டாம் என்று நான் அவளுக்கு

எவ்வளவோ குறிப்புணர்த்தியும் அவள் கேட்டாளில்லை. நானும் சில சொல்ல வாயெடுத்தேன். மாமா விட்டால் தானே! அவர் என் இரு கன்னங்களிலும் பளீர் பளீர் பளீர் என்று மாற்றி மாற்றி அறைந்து தள்ளிவிட்டார். 'ஏண்டா தடிப் பயலே! ஒரு பெண்ணை நீ எப்படியடா கை தீண்டியடிக்கலாம்? வயதுப்பெண் இருக்குமிடத்தில் உனக்கு அடிக்கடி என்ன வேலையடா? இனிமேல் இங்கே வரவே வராதே, அல்லியின் முகத்தில் விழிக்கவே விழிக் காதே' என்று கடிந்துபேசி, என் கழுத்திலும் கையைக் கொடுத்துத் தள்ளினர் என் தாய்மாமன்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. இந்த நிலை நேரும் என்று நான் கனவில்கூட எதிர்பார்க்க வில்லை. அங்கிருந்து திரும்பும்போது தாவிப் பாய்ந்து அல்லியின் கன்னத்தில் ஓர் அறை அறைந்து விட்டு, எங்கள் வீட்டுக்கு ஓடோடியும் வந்து விட்டேன். மாமாவும் துரத்திக் கொண்டே பின்தொடர்ந்தார். என் தந்தை யிடம் நடந்ததைக் சொல்லி வம்புக் கிழுத்தார். உண்மை யிலேயே அது ஒரு பெரிய குடும்பச் சண்டையாகி, ஒருவர்க் கொருவர் உறவை முற்றிலும் துண்டித்து விட்டது. 'குட்டிகுலைக்க நாய் தலையில் விடிந்தது' என்னும் பழமொழி எங்கள் அளவில் சரியாய்ப் போயிற்று.

நாட்கள் கழிந்தன. யான் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்து, சென்னைக் கல்லூரிக்குப் படிக்க வந்து விட்டேன். அல்லியும் மங்கைப் பருவ மெய்திவிட்டாள். எஸ். எஸ். எல். சி. படிப்பு முடித்திருந்தாள். பலர் வந்து பெண் கேட்டுவிட்டுப் போவதாகத் தெரிகிறது.

நான் மட்டும் எங்கும் எவரிடமும் அல்லியைப் பற்றியும் அவள் தந்தையைப் புற்றியும் இழித்துப்

பேசுவதும் எள்ளி நகையாடுவதுமே வழக்கம். ஏனோ இந்தக் கெட்ட பகையுணர்வு மட்டும் என் நெஞ்சினின் றகலாது உறுத்திக்கொண்டே யிருந்தது!

இந்த நிலையில் உறவை வைத்துக் கொண்டிருக்கிற எனக்கு அல்லியினிடமிருந்து அஞ்சல் வந்திருக்கிறது என்றால், அதுவும் விரைவு அஞ்சல் என்றால், எனக்கு எப்படி யிருக்கும்? அவள் ஏன் எனக்கு எழுத வேண்டும்? அப்படி யென்ன தலை போகிற காரியம் நடக்க விருக்கிறது? உடனே நான் ஏன் போக வேண்டும்? என்றெல்லாம் எண்ணினேன். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அப்படியே சென்றாலும் அவளை எங்கு வைத்துக் காண்பது? மாமா வீட்டுக்குத்தான் போக முடியாதே. ஒருவேளை மாமாதான் அவளை எனக்கு மணமுடித்துவைக்க எண்ணி அவள் மூலமாகவே எழுதச் சொல்லி யிருப்பாரோ? இல்லை, அப்படி யிருக்க முடியாது. மாமா குணம் எனக்கு நன்றாகத் தெரியும். "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" என்னும் முதுமொழி மாமாவுக்காகத் தானே எழுந்தது! ஒருகாலும் எங்கள் உறவை அவர் ஏற்றுக்கொள்ள மாட்டார். அப்படி யென்றால் நான் போகவேண்டியதில்லை. அல்லி என்னவோ கிறுக்குப் பிடித்துக் கிறுக்கியிருப்பாள். அதற்காக நான் ஏன் அலட்டிக் கொள்ள வேண்டும்?

இவ்வாறு ஊசலாடும் உள்ளத்தினனாய், மீண்டும் ஒருமுறை கடிதத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன். "அன்புள்ள அத்தான்!" போதுமே போதும், இந்த ஒருதொடரே போதுமே! இதனை மீண்டும் மீண்டும் படித்தேன். அத்தான் என்ற சொல்லில்தான் எவ்வளவு பொருள் செறிந்துகிடக்கிறது. அந்தச் சொல் காந்தம் போல் என்னைக் கவர்ந்து விட்டது. எத்தனை

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எந்தத் தமிழன் இந்தச் சொல்லைப் படைத்தானே? அல்லி என்னை அழைப்பதற் கென்றே படைத்தானே? இளமையில் என்னைப் பெயரிட்டே அழைத்து வந்தவள் இப்பொழுதுதான் கடிதத்தின் மூலம் அத்தான் என்று அழைத்திருக்கின்ருள். அதிலும் அத்தான் என்பதற்கு முன்னுள்ள "அன்புள்ள" என்னுஞ் சொல், உண்மையிலேயே இதுவரை அவள் மேல் பகையுணர்வு கொண்டிருந்த என்னுள்ளத்தே மின்சாரம் பாய்ச்சுவது போன்று அன்பைப் பாய்ச்சியது. அவள்மேல் கொள்ளையன்பு பெருகிற்று. அவளும் நானும் இதுவரை காதலர்களாக இருந்திருக்க, அவள் இவ்வாறு அழைத்திருந்தால் கூட இதில் சுவை யிருந்திராது. காரிருளில் மின்னல்போல், பகைமையிடையே இந்த அன்பு வீச்சு பளிச்சிட்டிருக்கிறது. இது, இரத்த பாசத்தின் எதிரொலி என்னலாம் சிலர்; இல்லையில்லை இளமையின் திருவிளையாடல் என்று கிண்டல் செய்ய லாம் சிலர். என்னைப் பொறுத்தவரை இந்த இரண்டுமே யில்லை. இதற்குக் காரணம், ஆமாம் ஆமாம், என் உள் மனத்தில் தெரிகிறது. அதை வெளியில் சொல்ல வேண்டுமானல், ஐயோ சொல்லத் தெரியவில்லையே, எனக்கே காரணம் புரியவில்லையே! என்னையும் அறியாத ஏதோ ஒன்று—ஆம் அவ்வளவுதான்!

கல்லூரித்தலைவருக்கு, மூன்று நாளைக்கு விடுமுறை விண்ணப்பம் எழுதிக் கொடுத்து விட்டு, பகல் வண்டிக்கே புறப்பட்டுவிட்டேன்.

ஏன்தான் புகைவண்டி இவ்வளவு மெல்ல நகர் கிறதோ தெரியவில்லை. இதற்கு விரைந்து செல்லும் வண்டி (Express) என்று பெயராம். நான் வண்டி யோட்டியாக இருந்திருந்தால் வண்டியை நான்குகால்

பாய்ச்சலில் வாரவிட்டிருப்பேன்—என் மனத்திற்கு இருக்கிற வேகம் வண்டியின் உருளைகளுக்கில்லையே—என்ன செய்வேன். என் மனத்திற்குப் பின்னல் வெகு தொலைவில் வண்டியும் நானும் தொடர்ந்துகொண்டிருந்தோம்.

வண்டி எங்கள் ஊரை நெருங்க நெருங்க என் உள்ளத்தே உள்நாட்டுப் போர் நடக்கத் தொடங்கி விட்டது. அல்லியை எப்படி காண்பது? எங்கே காண்பது? எப்பொழுது காண்பது? மாமாவுக்குத் தெரிந்தால் என்ன ஆவது? அவர் முன்பு ஒரு சமயம் கன்னத்தில் அறைந்த அறைகள் இன்னும் 'கணீர் கணீர்' என்று ஒலித்துக்கொண் டிருக்கின்றனவே. இப்போது முதுகு என்ன ஆக இருக்கிறதோ. அடுத்த படியாக, அப்பாவுக்கு என்ன பதில் சொல்வது? படிப்பை விட்டுவிட்டு இப்போது ஏன் வந்தாய் என்று அவர் கேட்பாரே. இவ்வாறு எண்ணுத எண்ண மெல்லாம் எண்ணி இந்த ஏழை நெஞ்சம் புண்ணுகிக் கொண்டிருந்த சமயத்தில் இரவு இரண்டு மணிக்கு வண்டி எங்கள் ஊர் நிலையத்தில் வந்து நின்றது.

அதிர்ச்சியுடன் நான் வண்டியை விட்டுக் கீழே இறங்கினேன். தெரிந்தவர்கள் யாராவது என்னைக் கவனிக்கிருர்களா என்று சுற்றுமுற்றும் பார்த்தேன். எனக்கு முன்னுல் இரண்டு மூன்று தொடர் பெட்டிகள் தாண்டி, ஒரு கரடி தன் மனைவியுடன் வண்டியில் ஏறக் கண்டேன். ஆம், அந்தக் கரடி என் மாமா மாயாண்டி முதலியாரேதான். அத்தையுடன் அந்த வண்டியில் ஏறிக்கொண்டு எங்கோ பயணம் செல்கிருர். உருட்டி விட்டது போன்ற தொப்பையும் தொந்தியுமான உருவத்துடன், கத்தை கத்தையான மீசையுடன், குளிருக்காகக்

கறுப்புக் கம்பளிக் கோட்டு—கறுப்புத் தலைத் துண்டு களுடன் உள்ள அவரது தோற்றத்தைக் கண்டால் கரடி யின் நினைவுதான் வரும்.

அவர்களது புறப்பாட்டைக் கண்ட நான் கரை யில்லாத களிப்புக் கடலில் மூழ்கினேன். இனி நேரே மாமாவின் வீட்டிற்கே சென்று அல்லியைக் காணலாம். அங்கே பாட்டியும், அல்லியின் சிறு தங்கையும் சிறு தம்பியுந்தான் இருப்பார்கள்; அவர்களும் நன்ருகத் தூங்கிக் கொண்டிருப்பார்கள். பாட்டி இருவருக்குமே பாட்டிதான். அல்லிக்குத் தந்தையைப் பெற்ற பாட்டி; எனக்குத் தாயைப் பெற்ற பாட்டி. பாட்டிக்குத் தப்பித் தவறித் தெரிந்து விட்டாலும் பரவாயில்லை. என்னிடம் பெரும் பற்று உள்ள அவளை எப்படியாவது சமாளித்து விடலாம் என்றெல்லாம் கற்பனை யுலகில் ஆழ்ந்து கிடந்தேன். வண்டி போனதே எனக்குத் தெரியவில்லை. நிலையம் தூங்கி வழிந்துகொண்டிருந்தது.

'டிக்கட்' கொடுத்து விட்டு நிலையத்துக்கு வெளியே வந்தேன். அங்கிருந்து எங்கள் கிராமம் ஒரு கல் தொலைவில் உள்ளது. ஏதேனும் கூலிக்கு வண்டி யிருக்கிறதா என்று பார்த்தேன். இரட்டை மாட்டு வில் வண்டி யொன்றை அப்பொழுதுதான் ஒருவன் பூட்டிக் கொண்டிருந்தான். வேறு காக்கா குருவி—பேச்சு மூச்சு ஒன்றைக் காணேம். அது யாருடைய வண்டியோ? அல்லது கூலி வண்டிதாளு? "ஏம்பா, வண்டி வருமா?" என்று கேட்டேன். "இது கூலி வண்டி இல்லிங்க, சொந்த வண்டி" என்ற பதில் வந்தது. "எங்கே போகிறது" என்றேன். "மலைச்சாரல் கிராமத்திற்கு" என்ருன். "நல்ல வேளை, நம் ஊருக்குத்தான் போகிறது. ஏதேனும் காசு கொடுத்து விடுகிறேன். ஊர் எல்லையில் என்னை

விட்டு விடுகிருயா?" என்று கேட்டேன். "காசு வேண்டாங்க, சும்மா வேண்டுமானல் ஏற்றிக்கொண்டு போய் விடுகிறேன், வந்து குந்துங்க" என்ருன். கல்வியறிவற்ற காட்டுப் புறத்தாரிடம் காணப்படும் இத்தகு பரிவை, படித்த பட்டணவாசப் பிசாசுகளிடம் எதிர்பார்க்க முடியுமா? இருப்பினும், எனக்கென்னவோ சும்மா ஏறிச்செல்வது பிடிக்கவில்லே. "இது யாருடைய வண்டி" என்று கேட்டேன். "அது தானுங்க மாயாண்டி முதலியார் வண்டி. அவரையும் அம்மாவையும் அழைத்துக் கொண்டு வந்து இந்த ரயிலில்தான் ஏற்றிவிட்டுத் திரும்புகிறேன்" என்ருன். "அப்படியா! அவர்கள் எங்கே போகிருர்கள்? எப்பொழுது வருவார்கள்—தெரியுமா?" என்றேன். சற்றுத் திணறிவிட்டு, "தெரியாதுங்க" என்று சொல்லிவிட்டான். "சரி, இங்கே நான் ஒருவரைப் பார்க்கவேண்டும், நீ போ, நான் பிறகு வருகிறேன்" என்று சொல்லி அவனே அனுப்பி விட்டேன். வண்டி சிட்டாய்ப் பறந்தது. என் மாமா வீட்டு வண்டி என்று தெரிந்தும், நான் எந்த மானத்தோடு அதில் ஏறுவது? ஊர் நோக்கி நடந்து சென்று கொண்டேயிருந்தேன்.

நான் இந்த இருட்டு நேரத்தில் அந்த வழியே தனியாகச் சென்றதே இல்லே. வழியில் உள்ள ஆற்றங்கரையில் எங்கள் ஊர்ச் சுடுகாடு இருக்கிறது. அதில் ஒரு பிணம் எரிந்து புகைந்து கொண்டிருந்ததும் என் கண்ணுக்குத் தெரிந்தது. 'ஆசை வெட்கம் அறியாது' என்று சொல்லுவார்கள்—ஆசை அச்சமும் அறியாது போலும்! அல்லிமேலுள்ள அன்பு, ஆர்வம் என்னும் இரண்டு கால்களால் விரைந்து நடந்து சென்றேன்.

புகைவண்டி நிலையத்திலிருந்து எங்கள் வீட்டிற்குச் செல்ல வேண்டுமானால், அல்லியின் வீட்டு வழியாகத் தான் போகவேண்டும். அதுதான் நேர்வழி—சுருக்கு வழியுங் கூட. ஆம், அல்லி வீட்டை நெருங்கிவிட்டேன். தெருவாயிற்படியில் யாரேனும் இருக்கின்றார்களா என்று உற்று நோக்கினேன். ஒருவரும் இல்லை. கதவு சாத்தி யிருந்தது. நிற்கவும் மனமில்லாமல் நடக்கவும் மனமில்லாமல் அசைந்துகொண் டிருந்தேன். 'அத்தான்' என்ற அமிழ்த ஒலி பலகணியிலிருந்து வந்து காது வழியாக என்னுள் புகுந்து சிறு நரம்புகளுக்குள் எல்லாம் இனித்தது. தெருப்பக்கத்து அறைப் பலகணியை நெருங்கினேன். "அல்லி"! "அத்தான்"! "அல்லி"! "அத்தான்"! என்ற தழுதழுத்த மெல்லிய ஒலிகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. ஒருசில விநாடிகள், மெய்ம்மறக்க அமைதி நிலவிற்று.

"பாட்டி, தம்பி, தங்கை மூவரும் கூடத்து அறையில் தூங்கிக்கொண் டிருக்கிறார்கள். வேறு யாரும் வீட்டில் இல்லை. நான் தெருக்கதவைத் திறக்கிறேன். உள்ளே வாருங்கள். பின்கட்டிற்குச் சென்று பேசிக்கொள்ள லாம்".

"சரி, கதவைத் திற".

மெதுவாகக் கதவு திறக்கப் பட்டது. நான் உள்ளே சென்று மீண்டும் கதவைத் தாளிட்டேன். அஞ்சி அஞ்சி அதிர்ந்து அதிர்ந்து நடந்த அல்லியைப் பின் தொடர்ந் தேன். பின்கட்டுக் கூடத்தை யடைந்தோம். சிறிய மங்கலான மின்விளக்கு போடப்பட்டது. அங்கிருந்த ஒரு நாற்காலியில் அல்லி என்னை அமரச் செய்தாள்; பக்கத்தில் சுவரோடு சுவர் ஒட்டிக்கொண்டு மான்போல

மருவி மருவி நின்ருள். யார் முதலில் பேசுவது? என்ன பேசுவது? சிறிதுநேரம் இருதரப்பிலும் அமைதி. இந்த அமைதிப் போட்டியில் அவளே வென்று விட்டாள். நான்தான் முதலில் பேச்சைத் தொடங்கினேன்.

"உன் கடிதம் ..........."

"ஆமாம் நான்தான் போட்டேன்."

"யாருக்கும் தெரியாமல் எவ்வாறு போட்டாய்?"

"அப்பா எப்போதும் நிறைய அஞ்சல் தலைகளும் உறைகளும் வாங்கி வைத்திருப்பார்கள் அல்லவா? தெரியாமல் எடுத்து எழுதி ஒட்டி, பக்கத்து வீட்டுப் பையனைக் கொண்டு போய்ப் போட்டுவிட்டு வரச் சொன்னேன்."

"நான் இப்போது வருவேன் என்று எவ்விதம் தெரியும்? எப்படி என்னைப் பார்த்துக் குரல் கொடுத்தாய்."

"வெளிக் கிராமத்திலிருந்து புது வேலைக்காரன் ஒருவன் வீட்டுக்கு வந்திருக்கிருன். அவன் வண்டி கட்டிக் கொண்டு அப்பாவையும் அம்மாவையும் ரயிலுக்கு அழைத்துக் கொண்டுபோய் விட்டுவிட்டு, சிறிது நேரத்துக்கு முன்தான் வந்தான். நீங்கள் ஒருவேளை இந்த ரயிலில் வந்தாலும் வரலாம் என்று எண்ணி, 'நம்மூர் மனிதர் யாரையும் ரயிலடியில் பார்க்க வில்லையா?' என்று அவனைக் கேட்டேன். 'யாரோ ஒருவர் இளைய 'மைனர்' போல் தெரிகிறது. காசு தருவதாகச் சொல்லி வண்டிவரச் சொன்னுர். நான் காசு வாங்க மாட்டேன், சும்மா வேண்டுமானல் வாங்க என்று சொன்னேன். பிறகு யாருடைய வண்டி

என்று கேட்டார். நான் உண்மையைச் சொன்னேன். நம் முதலாளி பெயரைக் கேட்டதும் திடுக்கிட்டவராய், சரி நீ போ போ என்று சொல்லிவிட்டார். நான் வேகமாக வண்டியை ஓட்டிக்கொண்டு வந்து விட்டேன்— என்று அவன் தெரிவித்து விட்டு, இப்போதுதான் வண்டியைக் கொட்டகையில் விட்டு, தன் குடிசைக்குப் படுக்கப் போய்விட்டான். விளக்கு, பூட்டாங்கயிறு முதலியவற்றை வாங்கி நான் உள்ளே வைத்துவிட்டு, கதவைத் தாளிட்டுக்கொண்டேன். அவனால் குறிப்பிடப் பட்டவர் தாங்களாக இருக்கலாம் என்ற எண்ணம் எனக்குத் தோன்றிற்று. நீங்கள் நடந்து வரலாம்; வரச் சிறிது நேரம் பிடிக்கும். எப்படியும் இந்த வழியாகத்தான் வருவீர்கள். சிறிது நேரம் காத்திருந்து பார்ப்போம் என்று எண்ணி, தெருப் பக்கத்து அறையின் பலகணியை ஒருக்களித்து வைத்து உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன். எண்ணியது நடந்தது.

"மாமாவும் அத்தையும் இந்நேரத்தில் புறப்பட்டு எங்கே செல்கிறார்கள்?"

பரிதிபுரத்தில் நண்பர் ஒருவர் வீட்டில் வைகறையில் திருமணமாம். அதற்காகச் சென்றுள்ளார்கள்."

"எப்போது வருவார்களாம்?"

"காலையில் வந்து விடுவார்கள். விடிந்தால் நம் ஊரில் 'ஊருணிப் பொங்கல் விழா' அல்லவா?"

"நல்லது. என்னை வரச்சொல்லி ஏன் விரைவுக் கடிதம் எழுதினாய்?"

இந்தக் கேள்விக்கு அல்லியிடமிருந்து உடனே பதில் வரவில்லை. பேசாது தலைகுனிந்து கொண்டாள். நானும் சிறிது நேரம் காத்திருந்தேன். குனிந்தவள் குனிந்தவளே.

நான் இந்த நேரத்தை நன்ருகப் பயன் படுத்திக் கொண்டேன். இந்நேரம்வரை நான் அல்லியை நன்ருகப் பார்க்கவில்லை. என்னை விழுங்கி விடுபவள்போல் ஆவலுடன் பார்த்துக்கொண்டிருப்பவள், நான் ஏறெடுத்துப் பார்த்ததும் குனிந்து கொள்கிருள். இக் காட்சியை அடிக்கடி கண்டேன். அவள் பார்ப்பதை நாம் ஏன் கெடுக்க வேண்டும்? அவளே ஆசைதீரப் பார்க்கட்டும் என்று நான் இந்நேரம் வேறுபக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டே பேசிக்கொண்டிருந்தேன். ஆனால், அவள் வைத்தகண் வாங்காமல் என்னைப் பார்த்து மகிழும் திறத்தை மட்டும் குறிப்பாகத் தெரிந்து கொண்டேன். இப்போது என்னுடைய முறை. அவள் என் கேள்விக்குப் பதில் சொல்லாமல் தலைகுனிந்து கொண்டேயிருந்ததால், இப்போது நான் என் ஆர்வம் அடங்க அவளைக்கண்டு களிக்கலானேன். இல்லை யில்லை, ஆர்வம் அடங்குவதா? பார்க்கப் பார்க்க ஆர்வம் பெருகிக்கொண்டே யிருந்தது. வள்ளுவரும் காமத்துப் பாலில் இப்படித்தான் ஓரிடத்தில் கூறியிருக்கிருர்.

என்னைப்பற்றி யார் என்ன எண்ணிஞலும் எண்ணிக் கொள்ளட்டும் — உண்மையைச் சொல்லி விடுகிறேன். நான் திரைப்படம் பார்க்கும்போது, அதில் நடிக்கும் அழகியரைக் கண்டு......வேண்டாம், இத்தோடு நிறுத்திக் கொள்கிறேன்...... நமக்கு இவ்வளவு அழகிய பெண் மனைவியாக வாய்ப்பாளா? எந்தத் திருமேனி நம்

தலையில் விடிய இருக்கிறதோ! என்று எண்ணி ஏங்கிப் பெரு மூச்சு விடுவதுண்டு. ஆனால், இப்போது ஓர் அழகுத்தேவதை என்முன் நின்றுகொண் டிருக்கிறதே. நான் இதுவரை பார்த்துள்ள அழகிகளுக்கு எந்த வகை யிலும் குறையாத—ஏன், சிறந்த ஒரு தங்கச் சிலையை நான் கண்குளிரக் கண்டுகொண் டிருக்கின்றேனே. இது நனவா? கனவா?

நான் மூன்றாண்டுகளுக்கு முன் அடித்து விட்டுப் போன அல்லியா இவ்வுருவம்? எவ்வளவு மாற்றம்! என்ன பொலிவு! எத்தனை கவர்ச்சி!

நானா யில்லாமல், ஒரு கவிஞரோ எழுத்தாளரோ அல்லி போன்ற பெண்களின் முன் நின்றால், ஒவ்வோர் உறுப்புக்கும் உவமை கொடுத்து வருணிக்கத் தொடங்கி விடுவார். நல்ல வேளையாக, நான் ஒரு பி. ஏ. வகுப்பு மாணவனா யிருந்ததால் அல்லி தப்பித்தாள். அல்லியை நான் உறுப்பு உறுப்பாகப் பிய்த்துச் சிதைத்துக் காணாமல், முழுப் பொருளாகவே கண்டு களிக்கிறேன். ஓர் அழகு மலரை இதழ் இதழாகப் பிய்த்துக் காண் பவனையோ—வருணிப்பவனையோ உண்மையான சுவைக் கலைஞனாக நான் மதிப்பதில்லை. இலக்கியங்களிலோ எழுத்தாளர்களின் ஏடுகளிலோ, மங்கையரைப் பற்றிப் புனையப்பட்டுள்ள பாதாதி கேச-கேசாதி பாத வருணனை களை, அதாவது, உள்ளங்காலிலிருந்து உச்சிவரை—உச்சி யிலிருந்து உள்ளங்கால்வரை ஒவ்வோர் உறுப்பினையும் அக்கு வேறு ஆணி வேறாக 'ஆப்பரேழ்சன்' செய்து தனித் தனியாகப் படைக்கப்பட் டுள்ள கற்பனைகளை எப்போதுமே நான் விரும்புவதில்லை—சுவைப்பதில்லை. விரும்பாதது மட்டுமன்று; சுவைக்காதது மட்டுமன்று; அம்முறையினை மிக மட்டமாகக் கருதுவது முண்டு.

அத்தகைய சுவை விரும்பிகளை, யானையின் தனித் தனி உறுப்பினைத் தடவிப் பார்த்து யானையாகக் கருதி மகிழ்ந்த குருடர்களாகவே மதிக்கிறேன். இது பற்றிப் பலருக்குக் கருத்து வேற்றுமை இருக்கலாம்; மன்னிக்க வேண்டும். இத்தகு கருத்துக்கள் எல்லாம், எங்கள் மாபெருந் தமிழ்ப் பேராசிரியரிடமிருந்து பெற்ற செல்வங் களாகும். எனவே, முழு அல்லியின் கைபுனைந் தியற்றாக் கவின் முழுவதையும் இப்போது நான் கண் கொட்டாது கண்டு சுவைத்தேன், களித்தேன்.

ஆயினும், இன்னும் என் கேள்விக்கு அல்லியிட மிருந்து பதில் வரவில்லை. ஆனால், முன்பு குனிந்தபடி— நட்டபடி இருந்த தலையின் இயக்கத்தில் ஒரு முன்னேற் றம் தென்பட்டது. சற்று நிமிர்ந்து என்னைப் பார்ப்பதும், மீண்டும் குனிந்து கொள்வதுமா யிருந்தாள். மறுபடி யும் நான் அதே கேள்வியைக் கேட்டேன்.

“சொல்ல மாட்டாயா அல்லி? ஏன் வரச்சொல்லிக் கடிதம் எழுதினாய்?”

“நீங்கள் எதுவும் கேள்விப்பட வில்லையா?”

“இல்லையே”

இப்படி உரையாடல் தொடங்கியதும், யாரோ வரும் ஒலி கேட்டது. யான் திடுக்கிட்டேன். அல்லி நடுங்கி னாள். ஒலியின் பிறப்பிடத்தைக் கூர்ந்து கவனித்தோம். பின்னர்த் தெரிந்தது பெருச்சாளியின் திருவிளையாடல் என்று. பெருமூச்சு விட்டோம். மிரண்டவன் கண் ணுக்கு இருண்டதெல்லாம் பேய்தானே!

இந்த நிலையில், “இருங்கள் அத்தான், இதோ வருகி றேன்” என்று சொல்லிவிட்டு அல்லி முன் கட்டிற்குச்

சென்றுள். அங்கிருந்து மூன்று பொருள்களோடு மீண்டாள். ஒன்று வெந்நீர் நிரப்பிய தர்மா பிளாஸ்க்; இரண்டாவது ஆர்லிக்சு புட்டி; மூன்றுவது சர்க்கரை. சூடான வெந்நீரில் ஐந்து தேக்கரண்டி ஆர்லிக்சுமாவை அள்ளி அள்ளிப் போட்டு, மூன்று தேக்கரண்டி சர்க்கரையைக் கலந்து நான்கு ஆற்று ஆற்றி, 'இதைப் பருகுங்கள்' என்று நீட்டினுள்.

'நீ' என்றேன்.

'இல்லே, நீங்கள்' என்ற பதில் வந்தது.

தைம்மாத நடுங்கு பனியில் நனைந்துவந்த எனக்கு உண்மையிலேயே அது அந்நேரம் ஓர் அரும்பெறல் அமிழ்தமாகவே தென்பட்டது. அல்லி அதைத் தயாரிக்கத் தொடங்கியதிலிருந்து, அவளது அன்பை வியந்து நான் என்னையும் அறியாததோர் உணர்ச்சி வய்ப்பட்டிருந்ததால், அருந்தும்போதும் சரி, அருந்திய பிறகும் சரி அதன் சுவையைப்பற்றிய உணர்வே எனக்கில்லே. அல்லி என்னே வரவழைத்த காரணத்தை அறிந்து கொள்வதிலேயே என் ஆர்வம் முழுதும் முனைந்து காணப்பட்டது. மீண்டும் பேச்சைத் தொடங்கினேன்.

"நான் இதுவரை ஒன்றுமே உன் கையாலே வாங்கி அருந்தியதில்லேயே!

"அதற்காகத்தான் இப்போது கொடுத்தேன்."

"அது இருக்கட்டும். ஏன் என்னே வரச்செய்தாய்? நான் ஒன்றுமே கேள்விப்படவில்லேயே."

"சொல்வதற்கே எனக்கு நா எழவில்லே."

"கவலேப்படாமல் சொல்லு."

"சொன்னால் நீங்கள் ஆதரவு கொடுப்பீர்கள் அல்லவா ?"

"......... ?"

"ஏன், சொல்லுங்கள்."

"என்ன என்று தெரிந்துகொள்ளாமல், ஆதரவு கொடுப்பதாக நான் எப்படிச் சொல்வது?"

"அப்பா எனக்குத் திருமணத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறார். புதன்கிழமை பரியம் (நிச்சயதார்த்தம்) நடத்தப் போகிறார்களாம்."

"ஓ, அப்படியா, நல்லது, மகிழ்ச்சியான செய்தி தான் சொல்லுகிறாய். மாமா எனக்குத் தெரிவிக்கமாட்டார் என்பதற்காக, நீ கடிதம் எழுதினாயா, நானும் பரியத்தில் கலந்துகொள்வதற்காக. அப்படியென்றால் எங்கள் வீட்டிற்கும் தெரிவிப்பீர்கள் என்று நினைக்கிறேன். பகை நீங்கிப் பழையபடி உறவு திரும்பி விட்டதா? என்றைக்கிருந்தாலும் கொண்டானும் கொடுத்தானும் கூடிக்கொள்ள வேண்டியது தானே."

"கொண்டானும் கொடுத்தானும் இன்னும் கூடிக் கொள்ளவில்லை. இனிமேல் கூடிக்கொள்வதற்காகத் தான் உங்களை வரவழைத்தேன்."

"உண்மைதான். இப்பொழுது முதலில் நாம் இருவரும் கூடிக்கொண்டோமே."

"நீங்கள் பேசுவதைப் பார்த்தால் நாம் இருவரும் கூடிக்கொண்டவர்களாகத் தெரியவில்லையே."

"நீ என்ன சொல்கிறாய் அல்லி ?"

"இன்னும் புரியவில்லையா ?"

" இல்லையே "

" நான் கொடுத்து வைத்தது அவ்வளவு தான் "

" ஒரு மணமகள் இப்படி பேசலாமா ? சரி, மாப்பிள்ளை என்ன ஊர் ? அவருக்கு என்ன வேலை ? குடும்ப நிலைமை யெல்லாம் எப்படி ?"

" சொந்த ஊர் கலிங்க நத்தம். போலிசு இன்சுபெக்டர் வேலையாம். முன்னோர்களின் சொத்தும் போதுமான அளவு இருக்கிறதாம்."

" கலிங்கநத்தமா ? போலீசு இன்சுபெக்டரா ?"

" ஏன் அப்படிப் பதற்றத்துடன் கேட்கிறீர்கள் ? இதற்கு முன்பே அவரை உங்களுக்குத் தெரியுமா ?"

" அவரை எனக்குத் தெரியாது. ஆனல், உனக்கு நல்ல வாய்ப்புத்தான். சரி நல்லது, விடுமுறை எடுத்துக் கொண்டு திருமணத்திற்கு வந்து விடுகிறேன். இதைத் தெரிவிப்பதற்குத்தானே என்னை வரவழைத்தாய் ? வேறொன்றும் செய்தி யில்லையே — நான் வரட்டுமா ?"

" நீங்கள் சிறிது நேரமாகச் சொல்லுகிற ஒவ்வொரு சொல்லும் எனக்கு வேதனையாக இருக்கிறது."

" ஏன் ? நான் ஒன்றும் தவருகப் பேசவில்லையே. நல்லதுதானே சொன்னேன்."

" நான் இதற்காகத் தான உங்களை வரவழைத்தேன் ?"

" பின் எதற்கு ?"

"நான் உங்களைத் தவிர, வேறு யாரையும் மணந்து கொள்ள மாட்டேன்."

"அல்லி"

"அத்தான்"

"உண்மையாகவா!"

"ஆம்"

"ஏன் இந்த முடிவுக்கு வந்தாய்?"

"பின் நான் எந்த முடிவுக்கு வரவேண்டுமாம்?"

"நம் இருவரால் தானே நம் குடும்பங்களின் உறவே குலைந்து விட்டது. நான் இதற்கு முன்பு உன்னைப் படாத பாடு படுத்தி யிருக்கிறேனே. அப்படியிருக்க, எப்படி என்னை நீ விரும்புகிறாய்?"

"மூன்றாண்டுகளுக்கு முன் நாம் இருவரும் இதே இடத்தில் விளையாட்டாக வம்பு பண்ணிக் கொள்ள, அப்பா உங்களை நன்றாக அடித்து விட்டார். நீங்கள் போனபின், அம்மாவும் பாட்டியும் அப்பாவுக்குத் தெரியாமல் என்னை வைதார்கள். அத்தானிடம் ஏன் வம்புக்குப் போனாய்? அத்தான் ஏதாவது செய்திருந்தாலும் அப்பாவிடம் அவனைப் பற்றிக் கோள் மூட்டலாமா? இப்போது குடும்ப உறவே அற்றுப் போயிற்றே என்றெல்லாம் சொல்லி என்னை வாட்டி வதக்கிவிட்டார்கள். நான் என் தவறை உணர்ந்தேன். நீங்கள் அடிபட்டதை எண்ணி யெண்ணி அழுதேன். அப்போதிருந்து உங்கள் மேல் எனக்கு ஒருவகைப் புது உணர்வு தோன்றிற்று. நீங்கள் இங்குவராமல் இருக்க இருக்க, உங்களைக்காணாது போகப் போகப் பற்று பெருகிக்கொண்டே யிருந்தது.

நீங்கள் சில முறை இந்தத் தெரு வழியாகப் போக நான் பார்த்திருக்கிறேன். மாடியறையின் கதவில் ஒளிந்து நின்று, உங்கள் உருவம் மறையும் வரையும் பார்த்துப் பெரு மூச்சு விட்டிருக்கிறேன். நீங்கள்தான் என்னை அறவே மறந்துவிட்டிருக்கிறீர்கள்''

''மறந்திருந்தால் இப்பொழுது ஓடி வருவேனா?''

''என் கடிதத்தை மதித்து வருவீர்களோ—அல்லது புறக்கணித்து விடுவீர்களோ என்று ஐயப்பட்டுக் கொண்டிருந்தேன். எனது நல்லகாலம் வந்துவிட்டீர்கள்.''

''எனது கெட்டகாலந்தான், நான் வந்திருப்பது.''

''ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்?''

''உன் அப்பாவோ உன்னை வேறொருவருக்குக் கட்டிக் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார். நீயோ என்னை மணந்துகொள்ளப் போவதாகச் சொல்கிறாய். நடுவிலே நான் என்ன செய்வது!''

''என்னை மணந்து கொள்ள விருப்பமில்லையா?''

''இல்லாமலா வந்தேன்?''

''அப்படியென்றால் அதற்குவேண்டிய ஏற்பாடுகளைக் கவனியுங்களேன். நானோ பெண்பிள்ளை; நான் என்ன செய்யமுடியும்? நீங்கள் எதுவும் முடிக்கலாம்.''

''அது நம் கையிலா இருக்கிறது. செடியின் கீழ்ப் புல்லைப் போல, நாம் பெற்றோரின் கீழ்ப் பிள்ளைகளாக இருக்கிறோம். அதிலும் நம் பெற்றோரோ பூசலும் புகைச்சலுமா யுள்ளனர். என் தந்தையார் அரைப்

பைத்தியம் என்ருல், உன் தந்தை முக்கால் பைத்தியம்; இன்னும் முற்றவில்லை. இந்த அரையையும் முக்காலேயும் வைத்துக் கொண்டு நாம் எப்படி மணந்து கொள்ள முடியும்? மேலும், உனக்குத் திருமண ஏற்பாடு முடிந்து விட்டதாகத் தெரிகிறதே"

"முயன்ருல் இந்த ஏற்பாட்டை மாற்ற முடியாதா?"

"முடியும், உன் அப்பா முயன்ருல்"

"அவருடைய குரங்குப் பிடிதான் உங்களுக்குத் தெரியுமே. அவராக மாறவே மாட்டார். நாமாகத்தான் மாற்றவேண்டும்".

"முடிந்து போன காரியமாக இருக்கிறதே, அதுவும் மாப்பிள்ளை ஒரு போலீசுகாரரராக வேறு இருக்கிருரே."

"நீங்கள் என்னை மணந்து கொள்வதாக வாக்குறுதி கொடுத்தால், நான் அந்த மாப்பிள்ளையை மணந்து கொள்ள மாட்டேன் என்று அப்பாவிடம் அடம் பிடித்து விடுவேன்".

"உன் அப்பா எவ்வளவு அடத்துக்கும் மசியவே மாட்டாரே".

"அப்பா மசியாவிட்டாலும், நான் மறுக்கிறேன் என்ற செய்தி எப்படியாவது அந்தப் போலீசு மாப்பிள்ளை யின் காதுக்கு எட்டிவிடு மல்லவா? அவர் படித்த—பகுத் தறிவுள்ள மனிதராக இருப்பா ராதலால், தன்னை விரும் பாத பெண்ணைத் தானும் விரும்பாமல் கைவிட்டு விடலா மல்லவா?"

"அப்படிச் சொல்வதற்கில்லை. சிலர் விடாக்கண்டர்களாக இருக்கவுங் கூடும்".

"நான் அதையெல்லாம் எப்படியாவது பார்த்துக் கொள்ளுகிறேன். அத்தான் எனக்கு வாக்குக் கொடுத்தால் போதும். நான் அந்த இன்சுபெக்டருக்கு எனது வெறுப்பை ஒரு கடிதத்தின் மூலம் அறிவித்து விடுவேன். அப்புறம் எல்லாம் சரியாய்ப் போகும். அப்பாவும் பிறகு நம் வழிக்கு வந்துதான் தீரவேண்டும்".

"இவ்வளவு நீக்கு போக்கு துணிவு எல்லாம் உனக்கு எப்படி வந்தன? எனக்கு மலைப்பாக இருக்கிறதே".

"எல்லாம் நீங்கள் பக்கத்தில் இருக்கிற துணை தான். ஏன் இன்னும் உறுதி சொல்லத் தயங்குகிறீர்கள்? நீங்கள் ஒத்துக் கொண்டால், நம் திருமணம் நிறைவேறி விட்டதாகவே பொருள். பின்பு எவருக்கும் என்னை மணக்கும் உரிமை கிடையாது".

"அல்லி! நீ உணர்ச்சி வயப்பட்டுப் பேசுகிறாய். என்மேல் வருத்தப்படாமல் நான் சொல்வதைக் கவனித்துக்கேள். என் பெற்றோரும் உடன்பட, உன் பெற்றோரும் உடன்பட்டால்தான் நான் உன்னை மணப்பேன்".

"அத்தான்........"

"ஆம் அல்லி. அதுதான் முறை. நேர்வழி."

"நாம் வற்புறுத்தினால், பிறகு அவர்கள் வேறு வழியில்லாமல் ஒத்துக்கொள்ள மாட்டார்களா?"

"அது முறையன்று; நாம் அவர்களை வற்புறுத்தக் கூடாது"

"இப்படிச் சொல்வீர்கள் என்று நான் நினைக்கவே யில்லை அத்தான். கதைகளில்—நாடகங்களில் மட்டு மல்ல; ஊரில்—உலகத்தில் நாமே நேரில் கேட்டும் கண்டும் இருக்கிறோமே"

"என்ன அது?"

"காதலர்கள் தங்களுக்குள் முதலில் உடன்படிக்கை செய்துகொண்டு, பிறகு, கட்டுப்படாத தங்கள் பெற் றோர்களை எப்படியோ முயன்று தம் வழிக்குத் திருப்பி யிருக்கிறார்களே. சென்ற ஆண்டு அடுத்த தெரு அருணா சல முதலியார் வீட்டில் நடந்தது உங்களுக்கு நினை வில்லையா? நீங்கள் என்ன என்றால் பெற்றோர்கள் உடன்பட்ட பிறகுதான் உடன்படுவேன் என்கிறீர்களே? இது நடக்கிற காரியமா? சிந்தித்துச் சொல்லுங்கள் அத்தான்"

"புதிதாக ஒன்றும் சிந்திக்க வேண்டியதில்லை. முதலிலேயே சிந்தித்து ஒரு முடிவிற்கு வந்தாய் விட்டது."

"என்னை மணப்பதில்லை என்ற முடிவுக்கா?"

"இல்லை யில்லை; பெற்றோர் விரும்பும் பெண்ணையே மணப்பதென்ற முடிவுக்கு."

"உலகத்திலே பெற்றோர்கள் பிள்ளையின் விருப் பத்தை எதிர்பார்ப்பதாகத் தெரிகிறது. நீங்கள் பெற் றோரின் விருப்பத்தை எதிர் பார்க்கிறீர்களே".

"என்னுடைய கருத்தைச் சொல்லுகிறேன். என் பெருமதிப்பிற்குரிய பேராசிரியரின் கருத்துத்தான் அது. எனக்கு மிகவும் பொருத்தமாகத் தெரிகிறது. பெற்றோரும் விரும்பவேண்டும்-பிள்ளையும் விரும்பவேண்டும். ஒருவர் விரும்பி மற்றொருவர் விரும்பவில்லையென்றால் சரிப்படாது. பிள்ளையின் விருப்பத்துக்குப் பெற்றோரும் விட்டுக் கொடுக்க வேண்டும்—பெற்றோரின் விருப்பத்துக்குப் பிள்ளையும் விட்டுக் கொடுக்க வேண்டும்."

"நீங்கள் சொல்வது சரிதான். ஆனால், சிலவிடங்களில் இருவரும் உடன் படாத நிலை உண்டாகி விடுவதுண்டல்லவா? அந்த நேரத்தில் பெற்றோர் விருப்பத்தைவிட பிள்ளையின் விருப்பந்தான் முக்கியம். பிள்ளை விட்டுக் கொடுக்காவிட்டால், பெற்றோர்தான் விட்டுக் கொடுத்தாக வேண்டும். ஏனெனில், மணந்து கொண்டு வாழப் போவது பிள்ளை தானே".

"இதைத்தான் நான் ஒத்துக் கொள்ள முடியாது."

"ஏன்?"

"பிள்ளையின் விருப்பத்தைவிட பெற்றோர் விருப்பந்தான் பெரிது"

"எப்படி?"

"எப்படியா? இதை நான் பகுத்தறிவின் அடிப்படையிலேயே மெய்ப்பித்துக் காட்டுவேன். ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்க ஒரு மாப்பிள்ளையாலோ அல்லது ஒரு மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுக்க ஒரு பெண்ணாலோ முடியாது. பெற்றோரால்தான் அஃது இயலும். ஒரு பெண்ணாகட்டும், ஆணாகட்டும்-இவர்களின்

தேர்ந்தெடுப்பு, பெரும்பாலும் உணர்ச்சி வயப்பட்டதாயிருக்கும்—தோல் அழகை அடிப்படையாகக் கொண்டிருக்கும். பெற்றோரின் தேர்ந்தெடுப்போ இத்தகையதன்று. அது நூற்றுக்கு நூறு எதிர்கால வாழ்க்கை வசதியை அடிப்படையாகக் கொண்டிருக்கும். விஞ்ஞான நெறியில் ஆராய்ந்து பார்த்தாலும் நான் சொல்வது முற்றிலும் உண்மை என்பது புலப்படும். 'கண்டதும் காதல்' என்றபடி, புலன் உணர்ச்சிக்கு அடிமைப்பட்டு, இன்னொருக்கு என் உள்ளத்தில் இடங் கொடுத்து விட்டேன்; வேறு யாரையும் மணக்க மாட்டேன் என்று அடம்பிடிப்பது முழுப் பித்துக் கொளித்தனம். வெறுந் தோல் இன்பம் சிறிது காலத்துக்குத்தான்; அதன் பிறகு அழகு—கவர்ச்சி என்ற உணர்வே அற்றுப் போகும். குடும்ப வாழ்க்கைதான் நெடுங்காலத்துப் பயிர். பெற்றோரைப் பகைத்துக் கொண்டு, அழகுக்காக மணந்து, பின் வறுமையுடனும் பிணியுடனும், பூசல் புகைச்சலுடனும் வாழ்க்கையில் அல்லல் உழந்தவர்கள் மிகப்பலர். அழகு சோறு போடுமா? வாழ்க்கை வசதிதான் இன்றியமையாதது. இந்த நுட்பம், காமவெறி பிடித்து உழலும் இளைஞர்களுக்குத் தெரியாது. வாழ்ந்துகண்ட பெரியோர்களுக்கே தெரியும். அதனால்தான் பெற்றோர்கள் எதிர்கால வசதியிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பது வழக்கம். எந்தப் பெற்றோரும் தங்கள் பிள்ளைகளின் வாழ்க்கையைக் கெடுத்துவிட விரும்பவே மாட்டார்கள். ஆனால், பிள்ளைகளோ தம் அநுபவக் குறைவினால் ஒரு பாழ்ங்கிணற்றில் விழுந்துவிடக் கூடும். தெருவில் விற்கும் மிட்டாயோ—அல்லது வேறு ஏதாவது ஒரு தின்பண்டமோ, பல கைப்பட்டதாக இருக்கலாம்; ஈ எறும்பு மொய்த்ததாக இருக்கலாம். அதனது

கவர்ச்சிக்கும் சுவைக்கும் மயங்கி அதுவே வேண்டு மென்று அடம்பிடித்துக் குழந்தை அழும். தின்னும்போது அது சுவையாகத்தான் இருக்கும். பிறகு பிணியையும் உண்டாக்கலாம். எத்தனைமுறை சொன்னாலும் இந்த உண்மை குழந்தைக்குத் தெரியாது—புரியாது—ஒத்துக் கொள்ளாது. ஆனால் பெற்றோருக்கு நன்கு தெரியும், தம் பிள்ளைக்கு எது நல்லது—எது கெட்டது என்று. இதுபோன்றதுதான் திருமண ஏற்பாடு—என்று எங்கள் பேராசிரியர் அடிக்கடி கூறுவார். உண்மைதானே இது."

"அப்படியென்றால், என்னை ஈ எறும்பு மொய்த்த தின்பண்டம்போல் இழிவாக எண்ணி வெறுக்கிறீர்களா அத்தான்."

"இல்லை அல்லி இல்லை. அந்தக் குற்றச்சாட்டை என்மேல் சுமத்தி என்னைக் கொல்லாதே, அல்லி கொல்லாதே. நீயா ஈ, எறும்பு மொய்த்த தின்பண்டம்? நீ...நீ...அல்லி...நீ...தோலாலும் கோதாலும் மூடிப் பாதுகாக்கப்பட்டுள்ள கனிச்சாறு. இன்பமே பயக்கும் —நலமே விளைக்கும் கனிச்சாறு அல்லி நீ கனிச்சாறு."

"அத்தான்"

"அல்லி"

"அப்படியென்றால், என்னை மணப்பதாக வாக் குறுதியளிக்க ஏன் மறுக்கிறீர்கள்?"

"தோட்டக்காரன் உடன்படாமல், காசு தராமல், கள்ளத்தனமாகக் கனியைக் கொய்வதோ அருந்து வதோ கூடாதே."

"விளக்கமாகச் சொல்லுங்கள்."

“கனியிருக்கும் தோட்டக்காரன் உன் அப்பா. கனியின் விலைக்காசு என் தந்தையின் கையில் உள்ளது. நடுவிலே நான். இவ்விருவரும் உடன்பட்டாலேயே நம் திருமணம் கை கூடும். இந்த முடிவை என்னால் மாற்றவே முடியாது.”

“எனக்காக மாற்றக் கூடாதா?”

“ஒருவனுக்கு நடுவிலே வரும் நங்கையை விட, பெற்றுப் பேணி வளர்த்து ஆளாக்கிவிட்ட பெற்றோரே முக்கிய மானவர்கள். இப்போது நான் வாக்குக் கொடுத்து விட்டால், உனக்கு மிகவும் கடமைப் பட்ட வனாகி விடுவேன். பிறகு அந்தக் கடமையை மீற முடியாது. ஆனால், உன்னைவிட நான் என் பெற்றோருக் கல்லவா மிகுதியும் கடமைப் பட்டிருக்கிறேன். அவர்கள் விரும்பா விட்டால், என் கடமை — வாக்கு எல்லாம் என்னாவது ?”

“சிறு பிள்ளைபோல பெற்றோர்களுக்கு அஞ்சு கிறீர்களே”

“அது அச்சமன்று, கடமை.”

“ஒவ்வொருவர் காதலுக்காக எவ்வளவோ தியாகம் செய்திருக்கிறார்களே.”

“காதலுக்காகப் பெற்றோரைத் தியாகம் செய்பவர் கயவர்; பெற்றோருக்காகக் காதலைத் தியாகம் செய் பவரே கடமை வீரர். பெற்றோரைப் பிரிந்து அல்லது பிரித்துப் புண்படுத்தி வாழும் வாழ்க்கை ஒரு வாழ்க் கையா ? செய்ந்நன்றி யறியாச் சிலர், பெற்றோர் விரும்பாத பெண்ணை வேறிடஞ் சென்று மணந்து கொண்டு, அவர்களைப் புறக்கணித்து ஆடு மாடுகளைப்

போல் வாழ்கின்றனர். கேட்டால், காதலாம். என்ன புடலங்காய்க் காதல் வேண்டியிருக்கிறது. பெற்றோருக்கு நிறைவு செய்ய முடியாத ஒருவன் காதலிக்கு மட்டும் கடைசிவரை எங்கே நிறைவு செய்யப் போகிறான்?"

"அப்படி யென்றால் நான் தங்களை மறந்து விட வேண்டியது தானா?"

"அப்படி யில்லை. விருப்பமானவரை மணந்து கொள்ளலாம் என்று என் தந்தை ஒப்புதல் கொடுத்து விட்டால், உன் தந்தையும் உடன் பட்டால், உன்னைத் தவிர வேறு யாரையும் மணக்க மாட்டேன். உன்னை மணக்க என் தந்தை உடன்பட வில்லை யாயின், அவர் குறிப்பிடும் பெண்ணைத்தான் நான் மணந்து கொள்வேன்."

"இன்னொருமுறை அப்படிச் சொல்லாதீர்கள் அத்தான்."

என்று சொல்லி விம்மிக்கொண்டே, அல்லி என்னை நெருங்கினாள். தன் முழங்கால்களைக் கீழே ஊன்றி உட்கார்ந்தபடி, நாற்காலியின்மேல் அமர்ந்திருக்கும் என் முழங்காலின்மேல் தன் தலையைப் புதைத்துக்கொண்டு, இருகைகளாலும் என்கால்களைக் கட்டிக்கொண்டாள். தேம்பல் நின்றபாடில்லை. கண்ணீரால் என் கால்கள் நனையத் தொடங்கின. எனக்குச் செய்வதொன்றும் புரிய வில்லை. மணமாகாத ஒரு பெண், இன்னொருவனுக்கு முடிவு செய்யப்பட்டுள்ள ஒரு பெண், பகையாளி மாமாவின் பெண் என்மேல் சாய்ந்துகிடந்தது எனக்குப் பெரிய திகிலை விளைத்தது. அதுவுமன்றி, காம உணர்வு தோன்றியுள்ள காளைப் பருவம் தொடங்கியதிலிருந்து, நான் வயதுவந்த எந்தப் பெண்ணையும் தொட்டறியேன்.

கன்னியரின் மேனியொடு கலந்து நுகரும் இன்பத்தைப் பற்றிக் கற்பனைகள் செய்து கனவு உலகத்தில் திரிந்த துண்டு; ஆனால்? ஒரு கட்டிளங் கன்னி இப்பொழுது தன் மெல்லிய மெத்தென்ற உடலை என்மேல் கிடத்தியிருந்தும், எனக்கு எத்தகைய இழிந்த உணர்ச்சியும் தோன்றவில்லை. அல்லியின் கரைகாணுக் காதல் எனக்குப் புலப்பட்டு விட்டது. எப்படியாவது அவளை மணந்து கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிக்கவேண்டும் என்ற உணர்வு இப்பொழுதுதான் எனக்குத் தோன்றிற்று. அளவற்ற அன்பு வெள்ளத்தில் ஆழ்ந்தவனாய், அவளது தலையைத் தடவிக்கொடுத்துக் கொண்டே பேசத் தொடங்கினேன்.

"அல்லி"

"அத்தான்."

"என் கல் மனத்தையும் கரைத்துவிட்டது உன் காதல். கவலைப்படாமல் எருந்திரு. கண்ணீரைத் துடைத்துக்கொள். உன் விருப்பத்தை நிறைவேற்ற என்னல் முடிந்தவரையும் முயற்சி செய்வேன்"

"உண்மையாகவா அத்தான்"

"ஆம், உண்மைதான்; நான் எப்படியாவது என் தந்தையை ஒத்துக்கொள்ளச் செய்துவிடுகிறேன். நீ உன் அப்பாவைக் கவனித்துக்கொள்"

"அது சரி, புதன்கிழமை நடக்கவிருக்கும் பரியம் என்ன ஆவது அத்தான்"

"அதைத் தடுக்க வழியிருக்கிறது. என் அப்பாவோடு கலந்து முயன்று ஆவன செய்கிறேன்"

"ஒருவேளை அதைத் தடுக்க முடியாது போனல், வேறு மாற்று வழி......"

"மாற்று வழியா? முயன்று பார்ப்போம்; முடியவில்லையென்றால், நம் மனத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்."

"மறுபடியும் பழைய பாட்டையே பாடுகிறீர்களே அத்தான்"

"அல்லி! நான் பகுத்தறிவுக்காரன். ஒரு பொருளுக்குக் குறிவைக்கிறோம். அந்தப் பொருளோ யாரேனும் ஒருவருக்குத்தான் உரியது. அப்பொருள் வேறொருவருக்கு உரியதாகி விட்டால்—நமக்குக் கிட்டாதாயின் வெட்டென மறந்துவிட வேண்டியது தான். அதிலேயே நினைப்பை வைத்துக் கொண்டு வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளக் கூடாது. ஒரு பொருள் விலையாகி விட்டால் வேறு பொருளை வாங்கிக்கொள்ள வேண்டியது தான். ஓர் ஆணுக்கு ஒரு பெண்—ஒரு பெண்ணுக்கு ஓர் ஆண். ஒருவர் கிடைக்காவிட்டால் மற்றொருவரை மணந்து கொண்டு, மனத்தை மகிழ்ச்சியாய் வைத்துக் கொண்டு வாழ வேண்டியதுதான். இதுதான் வாழ்க்கையிலுள்ள பெரிய 'இரகசியம்.' இதை விட்டு விட்டு, காதல் — வெங்காயம் — வெண்டைக்காய் என்று சொல்லிக் கொண்டு, வரட்டுப் பிரம்மசாரியாகவே இருப்பதோ, பைத்தியம் பிடித்து அலைவதோ முழுமுழு முட்டாள்தனம். சிலர் தற்கொலையும் செய்து கொள்கிறார்கள். அவர்களைப் பற்றி நான் கவலைப்படுவதே யில்லை. அவர்கள் வாழத் தெரியாதவர்கள்— இவ்வுலகில் இருக்கத் தகுதியற்றவர்கள் — போக வேண்டியவர்கள்—போய்த் தொலையட்டும். எனவே, சூழ்நிலைக் கேற்பத் தங்களைப் பொருத்திக் கொள்வது தான்—கிடைக்கக் கூடிய வாய்ப்பு வசதிகளுக்கு ஏற்பத் தங்களை அமைத்துக் கொள்வதுதான் அறிவுடைமை

யாகும்—என்று இக்கால உளநூல் அறிஞர்களும் கல்வி வல்லுநர்களும் கூறுகின்றனர். ஆராய்ந்து பார்த்தால் அது உண்மையாகவே படுகிறது. அல்லி! இக்கருத்துக் களை யெல்லாம் நீ நன்ருகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நான் மீண்டும் இப்படிப் பேசுவதைக் கொண்டு உன்னைக் கைவிட்டு விட்டதாக எண்ணுதே. எதற்கும் முன்கூட்டிச் சொல்லி வைத்தேன். நான்போய், இன்றைக்கே ஆகவேண்டிய காரியங்களை முழுமூச்சுடன் கவனிக்கிறேன். முதலில் பரியத்தை உடைக்கவேண்டும்; பிறகு நம் திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இவ்வளவையும் இரண்டு மூன்று நாட்களில் கவனித்து விட்டு, நான் கல்லூரிக்குப் போயாக வேண்டும். இன்னும் இரண்டு மாதப் படிப்பே உள்ளது. அதனை வெற்றியுடன் முடிக்க வேண்டு மல்லவா?"

"நான் அத்தானுக்கு மிகவும் கடமைப்பட் டிருக் கிறேன்"

"நமக்குள் என்ன இது! சரி, விடிந்ததும் நம் ஊர் மலைக்கோவிலில் நடக்க விருக்கும் ஊருணிப் பொங்கல் விழாவுக்கு நீயும் வருகிருயா?"

"வரத்தான் இருக்கிறேன். அதற்காகத் தானே உங்களை இந்த விழாச் சமயத்தில் வரவழைத்தேன்"

இந்த நேரத்தில், சிவபூசையில் கரடி விடுவது போல், 'அல்லி—அல்லி' என்று பாட்டி அழைக்கும் ஒலி முன்கட்டிலிருந்து வந்தது.

"பாட்டி விழித்துக் கொண்டாள் அல்லி! நான் வருகிறேன். விழாவில் கண்டு கொள்வோம்" என்று

சொல்லி விட்டு, கொல்லைப் புறத்தின் வழியாக நான் வெளியேறினேன். என்மேலுள்ள பெரும் பிணிப்பால், தன்னை நான் பிரிந்து போவதைப் பொறுக்க முடியாமல், அல்லி தவியாய்த் தவித்துக் கொண்டிருந்த உருக்கமான காட்சியைக்கண்டு சுவைக்க எனக்கு வாய்ப்பில்லை. பெறுதற்கரிய மணியைப் பெற்று இழந்தவனைப் போல் பெருங் கலக்கத்துடன் பிரிந்து சென்றேன்.

அல்லி என்ன ஆவாளோ. பாட்டிக்கு என்ன பதில் சொல்வாளோ. எப்படியாவது சமாளித்துக் கொள்வாள் தானே!



# 3

நான் இப்பொழுது நேரே எங்கே போவது? பொழுது விடியத் தொடங்கி விட்டது. கோழிகள் அங்கு மிங்கும் கூவின. ஆனாலும் இன்னும் இருட்டு நீங்க வில்லை. பனிக்காலம் ஆதலால், இன்னும் வீடுகளின் கதவுகள் திறக்கப்படவில்லை. சென்னையிலிருந்து புறப் பட்டு வைகறையில் எங்கள் ஊர்வந்து சேரும் புகை வண்டி ஒன்று, அரைமணி நேரத்திற்கு முன் கூவியது நினைவிற்கு வந்தது. அந்த வண்டியில் வந்ததாக அப்பா அம்மாவிடம் நடிக்கலாம் என்று கருதி நேரே வீட்டிற்குச் சென்றேன்.

கதவு மூடியிருந்தது. தட்டினேன். "யாரது?" இது அப்பாவின் குரல். "நான்தான்" என்றேன். "அண்ணன் வந்துவிட்டது—அண்ணன் வந்துவிட்டது" என்று ஆரவாரித்துக்கொண்டே கற்பகம் ஓடிவந்து கதவைத் திறந்தாள். கற்பகம் என் ஒரே தங்கை. எங்கள் பெற்றோருக்கு நாங்கள் இரண்டே பிள்ளைகள் தான். அல்லியைப்போலவே கற்பகமும் எஸ். எஸ். எல். சி. படித்திருக்கிறாள். அவளுக்கு அப்பா திருமண ஏற்பாடு செய்துகொண்டிருப்பதாகச் சென்னைக்கு வந்த ஒரு நண்பர் சொல்லக் கேள்விப்பட்டேன்.

கதவைத் திறந்த கற்பகம் என் கைப் பையை வாங்கிக் கொண்டாள். நான் உள்ளே வந்ததும் வாராததுமாக இருக்கும்போதே, அம்மா படுக்கையிலிருந்து வாரியடித்துக்கொண்டு எழுந்துவந்து. "தம்பி வந்திருக்கிறானா?" என்று குரல் கொடுத்தார்கள். கைப்பையை வாங்கிய கற்பகம், நடுக் கூடத்திலுள்ள மேசையின்மேல் அதை வைத்துத் திறந்து பார்த்தாள். பார்த்த கண்ணுக்குப் பழுதில்லாமல் உள்ளேயிருந்து ஏதோ ஒன்றை எடுத்தாள். அது, பிளாஸ்டிக்கும் ரப்பரும் கலந்து, பல வண்ணங்கள் தந்து கவர்ச்சியாகச் செய்யப்பட்டுள்ள ஒரு பொருள். ஏதோ ஒரு பெயரைச் சொல்லி அண்ணன் எனக்கு வாங்கி வந்திருக்கிறது என்று கற்பகம் தன் தலையில் அணிந்துகொண்டாள். அதைக் கொண்டு அது ஒரு தலை அணி என்று தெரிந்து கொண்டேன். கற்பகம் ஏதோ சொல்லியும் அதன் பெயரைச் சொல்ல எனக்குத் தெரியவில்லை. அது வாயிலும் நுழையவில்லை. நான் வாங்கியிருந்தால்தானே! அது என் பைக்குள் எப்படிப் புகுந்தது என்றே எனக்குப் புரியவில்லை. அதன் காரணத்தை ஆராய்ந்து கொண்

டிருந்தேன். கற்பகம் தெருவாயிற்படியை விளக்கஞ் செய்து கோலமிடச் சென்றுவிட்டாள்.

“இப்பொழுது வந்த வண்டியில்தான் வந்தாயா?”—இது அப்பா.

“தூக்கம் கெட்டுவிட்டு இருக்குமே. உடம்பு என்ன ஆவது!”—இது அம்மா.

“இதெல்லாம் இந்த வயதில் தெரியுமா. தூக்கம் கெட்டால் உடம்பு கெடுவது உனக்கும் எனக்கும் அல்லவா?”—இது அப்பா.

“எப்போது புறப்பட்டாய்?” —இது அம்மா.

“நேற்று சாயுங்காலம்”—இது நான்.

இப்படி பேச்சு பரிமாறப்பட்டுக்கொண் டிருக்கும் போதே நான் பின்கட்டிற்கு நழுவி விட்டேன். பல் துளக்கினேன். அம்மா பாடிய வெந்நீர்ப் பல்லவியைக் காதில் வாங்காமல் தண்ணீரிலேயே குளித்தேன். காலைக் கடன்கள் எல்லாம் முடிந்தபிறகு முன்கட்டிற்கு வந்தேன். அப்பா சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டிருந்தார். அம்மா கூடத்துத் தூணில் சார்ந்துகொண்டு உட்கார்ந்து ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். கற்பகமோ பம்பரம் போல் சுழன்று வீட்டு வேலைகளைக் கவனித்துக்கொண் டிருந்தாள். நான் மேசைமேல் கிடந்த ஞாயிறு மலரைக் கையில் எடுத்துக்கொண்டு ஊஞ்சலில் உட்கார்ந்தேன். எனக்கு விரைந்து சிற்றுண்டி செய்து கொடுக்க வேண்டும் என்ற ஆர்வத்தில், உடம்பு தள்ளாதிருந்தும் அம்மா எழுந்து கற்பகத்துக்கு உதவியாக அடுப்பங் கரைக்குச் சென்றுவிட்டார்கள். அப்பா பேச்சைத் தொடங்கினர்.

"இன்றைக்குக் கல்லூரி உண்டா? அல்லது ஏதாவது விடுமுறையா?"

"கல்லூரி உண்டு; நான்தான் விடுமுறை எடுத்துக் கொண்டு வந்தேன்."

"எளிதாக விடுமுறை எடுக்க முடிகிறதா?"

"முடியாதுதான். இருந்தாலும் இங்கே இரண்டொன்று தெரிந்துகொண்டு போகலாம் என்று நாலை எழுதிப் போட்டுவிட்டு வந்துவிட்டேன்."

"அப்படியா! என்ன அந்த இரண்டொன்று?"

"அம்மா மிகவும் உடல்நலக் குறைவால் வருந்துவது போன்று சனிக்கிழமை இரவு கனவு கண்டேன். விடிந்ததிலிருந்து அவர்களைப் பார்க்கவேண்டும் என்று ஒரே ஏக்கமாக இருந்தது. அடுத்தபடியாக, தாங்கள் கற்பகத்திற்குத் திருமண ஏற்பாடு செய்துகொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டிருந்தேன்—அது விவரமும் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் அரித்தது. அப்படியே ஊருணிப் பொங்கல் விழாவும் பார்த்ததாக இருக்கட்டும் என்று வந்துவிட்டேன்."

"உனது படிப்பு கெட்டுவிடும் என்று கருதித்தான் உனக்கு நான் தெரிவிக்கவில்லை. கைகூடும் போல் தெரிந்தால் நெருக்கத்தில் அழைத்துக்கொள்ளலாம் என்றிருந்தேன். நீயே வந்துவிட்டாய். இதுவும் ஒரு விதத்தில் நல்லதுதான்."

இதைக் கேட்டதும், ஏன் வந்தாய் என்று திட்டப் போகிறார்கள் என்று அஞ்சிக் கொண்டிருந்த எனக்கு நல்ல உயிர்வந்தது. இப்போது புதுத் தெம்போடு அப்பாவிடம் பேச்சுக் கொடுத்தேன்.

"ஏற்பாடு எந்தமட்டும் இருக்கிறது அப்பா"

"இருக்கிறதா! எல்லாம் இடிந்துவிட்டது. பாழாய்ப் போன உன் மாமன் மாயாண்டிமுதலி நான் கட்டிய கோட்டையைத் தகர்த்தெறிந்து விட்டான். கற்பகம் ஏமாந்துபோய் விட்டாள்"

"என்னப்பா சொல்லுகிறீர்கள்?"

"கலிங்கநத்தத்தில் ஒரு மாப்பிள்ளை; எம். ஏ. படித்தவர்; போலீசு இன்சுபெக்டர் வேலை பார்க்கிறாராம். அவருக்கு நம் கற்பகத்தைக் கேட்டார்கள். வந்து பார்க்கலாமா என்றார்கள். ஆகட்டும் என்றேன். மாப்பிள்ளையும் பெற்றோருமாக வந்து பார்த்தார்கள். நானும் பெண்ணுக்குத் தாராளமாகச் செய்வதாகச் சொன்னேன். பரியத்துக்கு நாள் குறித்து அனுப்புவதாகச் சொல்லித் நிறைவுடன் சென்றார்கள். அவ்வளவு தான்"

"ஏன், அப்புறம் என்ன ஆயிற்று?"

"இதைக் கேள்விப்பட்ட அந்த மாயக்கார மாயாண்டி என் எண்ணத்தில் மண்ணைப் போட்டு விட்டான். தன் பெண்ணைக் கட்டிக்கொண்டால், தான் ஏராளமாகச் செய்வதாக ஒரு தரகன் மூலம் சொல்லியனுப்பினான். அந்தப் போலீசு மாப்பிள்ளையும் பெற்றோரும் அல்லியை வந்து பார்த்து விட்டுப் போனார்கள். உன் அம்மா சற்று கருநிறமாதலால், நம் கற்பகம் மாநிறமா யிருக்கிறாள். உன் அத்தை—அதாவது என் தங்கை நல்ல சிவப்பு ஆனதால், அவள் வயிற்றில் பிறந்த அல்லி சிவந்த மேனியோடு மினுக்கி யிருக்கிறாள். மாப்பிள்ளைக்குக் கற்பகத்தைவிட அல்லியைப் பிடித்து

விட்டதாம். ஏராளமாகச் சீர் வரிசையும் செய்யப் போகிருர்களாம். புதன்கிழமை பரியமாம்."

"நம்மோடு மாமா இப்படிப் போட்டிக்கு வரலாமா?"

"அவனைச் சும்மா விடக்கூடாது; பழிக்குப் பழி வாங்கியே தீரவேண்டும். இன்றைக்குத் தந்தி கொடுத்து உன்னை வரவழைக்கலாம் என்று கூட இருந்தேன். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததைப் போல நீயே வந்து விட்டாய்?"

"இப்பொழுது என்ன செய்யவேண்டும்?"

"எப்படியாவது பரியம் நடக்கவொட்டாதபடி முறித்துவிட வேண்டும்."

என்று அப்பா துடிதுடித்தார். அதே எண்ணங் கொண்டிருந்த எனது மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை.

"அதை எப்படியப்பா முறிப்பது?"

"அதற்கு வழியிருக்கிறதடா தம்பி. நாம் இன்னும் மிகுதியாகப் பணம் கொடுப்பதாகச் சொன்னல் நம் பக்கம் திரும்பிவிடுவார்கள்."

"பணம் கொடுத்து மணக்கவைப்பது ஒரு திருமண மாகுமா? எனக்கு அது அறவே பிடிக்கவில்லை."

"இந்தச் சீர்திருத்தம் பேசுவதால் இப்போது பய னில்லை. எப்படியாவது எடுத்த காரியத்தை வெற்றி யுடன் முடிக்கவேண்டும். நீ ஒத்துக்கொள்வதா யிருந் தால், என் சொத்தில் சரிபாதியைக் கற்பகத்திற்கு எழுதிவைத்து விடுவதாக மாப்பிள்ளை வீட்டாருக்குச்

சொல்லியனுப்பி விடுவேன். பிறகு பழம் தானாகப் பழுத்துவிடும்."

"நான் ஒத்துக்கொள்வதென்ன? நீங்கள் சொல்லாமலேயே, இயற்கையாகவே, பாதி சொத்தைக் கற்பகத்துக்குக் கொடுத்துவிடத்தான் இருக்கிறேன். பிள்ளைகளுக்குள்ளே ஆண் என்றும் பெண் என்றும் வேறுபாடு உண்டா என்ன? நாங்கள் இருவரும் சரிநிகராகப் பங்கிட்டுக் கொள்ளவே விரும்புகிறேன். இன்னும் கேட்டால், சொத்து முழுவதையுமே கற்பகத்துக்குக் கொடுத்துவிடவேண்டுமென்றாலும் எனக்கு இரட்டை மகிழ்ச்சி. நான் படித்தவன்; எப்படியாவது பிழைத்துக் கொள்வேன். என் தங்கை நலமுடன் வாழ்ந்தால் அதுவே எனக்குப் போதும்."

"சரி, குருசாமியைக் கூப்பிட்டுவரச் சொல்லுகிறேன்."

என்று சொல்லி அப்பா எழுந்தார். அதற்குள் அம்மா சிற்றுண்டிக்கு அழைத்தார்கள். அந்த வேலையும் முடிந்தது."

அப்பா குறிப்பிட்ட குருசாமியும் வந்து சேர்ந்தார். அவர் மூலமாகத்தான் முதல் முதல் கற்பகத்துக்குப் போலீசு மாப்பிள்ளை பாண்டியனை ஏற்பாடு செய்தார்கள். 'சதியாலோசனை' தொடங்கிற்று."

"என்ன குருசாமி! நம் வீட்டு நல்ல காரியத்தில் குறுக்கிட்ட அந்த மாயாண்டியைச் சும்மா விடக்கூடாது. அவன் வீட்டுப் பரியத்தை நிறுத்திவிட வேண்டும்"

"அதற்கு என்ன செய்யவேண்டும், சொல்லுங்கள்; கவனிக்கிறேன்."

"நீ மாப்பிள்ளை வீட்டிற்குச் சென்று, பாதி சொத்து எழுதி வைப்பதாகச் சொல்லி நம் பக்கம் திருப்பிவர வேண்டும்".

"அங்கே முடிவாய்விட்டதே, ஒத்துக் கொள்வார்களா?"

"மாப்பிள்ளையின் தந்தை முத்தைய முதலியார் எடுப்பார் கைப்பிள்ளை. அதோடு பணப்பெருமானது அடிமை. சொத்து ருசி காட்டினல் அந்தத் தஞ்சாவூர்ப் பொம்மை உடனே தலையாட்டிவிடும். உனக்குத்தான் கவர்ச்சியாகப் பேசத்தெரியுமே. புறப்பட்டுப் போய் வெற்றியுடன் வா".

பயணத்துக்கு வேண்டிய பணத்தைப் பெற்றுக் கொண்டு குருசாமி புறப்பட்டு விட்டார். எனக்கென்னவோ இந்த நாடகம் எல்லாம் உள்ளுக்குள்ளே பிடிக்கவில்லைதான். இருந்தாலும் எனக்கும் காரியம் ஆக வேண்டுமே. நாய் வேடம் போட்டுக் கொண்டேனே, குலைத்துத்தானே ஆக வேண்டும். அப்பா இன்னொரு வேட்டு கிளப்பினர் :—

"தம்பீ, குருசாமி எப்படியும் போன காரியத்தை முடித்துக்கொண்டு வந்து விடுவார். அடுத்தபடியாக, நாம் இன்றைக்கு இன்னொரு காரியத்தில் வெற்றி பெற்றாக வேண்டும்"

"என்னப்பா அது?"

"இரண்டாண்டுக்கு ஒருமுறை நம்மூரில் நாட்டாண்மைக்காரரைத் தேர்ந்தெடுப்பது வழக்க மல்லவா? இப்பொழுது நாட்டாண்மைக்காரராக இருக்கும்

நல்லசிவம்பிள்ளையின் கெடு இன்றோடு முடிந்துவிடுகிறது. எனவே, இன்று பிற்பகல், வழக்கம்போல், ஊருணிப் பொங்கல் விழா அரங்கிலே, ஊரார் புது நாட்டாண்மைக் காரரைத் தேர்ந்தெடுக்க இருக்கிறார்கள். நம்மைச் சேர்ந்தவர்கள் என்னை அப்பதவிக்கு நிறுத்த இருக் கிறார்கள். எனக்கும் விருப்பந்தான். ஆனால், இதிலும் உன் மாமன் மாயாண்டி கடுமையாகப் போட்டியிடு கிறான். எப்படியாவது நாம் வெற்றி பெற்றாக வேண்டும். வயது வந்த ஆண் பெண் எல்லோருக்கும் வாக்குரிமை உண்டு. மாயாண்டி தன்மகள் அல்லியை விட்டுப் பெண் களுக் கெல்லாம் சொல்லச் செய்திருக்கிறானாம். நீயும் உன் நண்பர்களுக் கெல்லாம் சொல்லு. நம் ஆட்களும் முனைந்து வேலை பார்ப்பார்கள். நீ எல்லாவற்றையும் மேற்பார்வை பார்த்துக்கொள்".

என்று அப்பா சொன்னதும், எனக்கு மனம் கெட்டு விட்டது. ஐயையோ, எப்படியிருந்த குடும்பங்கள் எப்படி ஆய்விட்டன. கொண்டானும் கொடுத்தானும் போர் முனையிலா சந்திப்பது? இப்படிப் பகைத்துக் கொண்டு போட்டி போட்டு அழிந்த குடும்பங்கள் எத்தனையோ! ஒருவரை யொருவர் கெடுப்பதில் இத்துணை ஊக்கங் காட்டும் மனித இனம், வாழவைப் பதில் ஊக்கம் காட்டினால்.........? என் கதை மட்டும் என்ன? 'அவன் கிடக்கிறான் குடிகாரன், எனக்கு இரண்டு மொந்தை போடு' என்பதுதானே! அப்பா வுக்கு என்ன பதில் சொல்வதென்றே எனக்குப் புரிய வில்லை.

"அப்பா! இந்த ஒரு காரியத்திலாவது மாமாவுக்கு விட்டுக்கொடுத்து விடுவோமே. மேலும் மேலும் வம்பை வளர்த்துக் கொண்டே போவானேன்?"

வந்ததே அப்பாவுக்குக் கடுஞ்சினம்!

"இந்த அறிவுரை புகட்டுவதற்காகவா உன்னிடம் சொன்னேன்? அப்போதே நினைத்தேன், இந்த 'அரை டிக்கெட்டை' நம்பி ஒரு காரியத்தில் இறங்கக்கூடா தென்று. ஏண்டா, மாயாண்டி மகள் ஏதாவது உன்னை மயக்கிவிட்டாளா? நீ வேண்டுமானால் அவள் பக்கம் சேர்ந்து கொண்டு அந்த அயோக்கியனுக்கே பாடுபாடு. நான் கற்பகத்தை வைத்துக்கொண்டு காரியம் பார்க்கிறேன்."

இது அப்பாவின் கோடையிடி முழக்கம். அவர் இருக்கும் நிலையில், என் சொல் யாதொன்றும் ஏருது என்று புரிந்து கொண்டேன். ஆமாம் பூசாரி யாகி விட்டேன். அவர் சொல்லுகிறபடி நடப்பதாக ஒத்துக் கொண்டேன். என்ன செய்வது! அல்லிக்கு எதிராக நான்—எனக்கு எதிராக அல்லி—'தேர்தல் பிரசாரம்'—இது வேறு!

இந்த நேரத்தில், "ஊருணிப் பொங்கல் விழாவுக்குப் புறப்படவில்லையா" — என்று கேட்டுக் கொண்டே, அம்மா பின்கட்டிலிருந்து வந்தார்கள். அதற்கு அனைவரும் ஆயத்தம் செய்யத் தொடங்கினோம்.



# 4

எங்கள் ஊரில் ஆண்டுதோறும் தைம் மாதம் மூன்றாந் திங்கட்கிழமையன்று நடக்கும் ஊருணிப் பொங்கல் விழாவின் அழகே அழகு. தைம் மாதம் முதல் மூன்று நாட்களிலும், அவரவரும் தங்கள் தங்கள் வீட்டில் தனித் தனியாகப் பொங்கல் விழாக் கொண்டாடுவார்கள். மூன் றாவது திங்கட்கிழமையிலோ, ஊரார் அனைவரும் ஓரி டத்தில் ஒன்றுகூடி, பொங்கல்செய்து உண்டு மகிழ்ந்து விழாக் கொண்டாடுவர். ஊர்முழுவதும் ஒரே இடத் தில் பொங்கல் உண்ணும் விழா வாதலால், ஊர் உ(ண்)ணிப் பொங்கல் விழா என்று இதற்குப் பெயர் வந்தது.

விழாவுக்கு ஒரு வாரத்திற்கு முன்பே ஊரில் அரிசி-பணம் எல்லாம் தண்டத் தொடங்கிவிடுவார்கள். எல்லோரும் ஏராளமாகத் தாராளமாகத் தருவார்கள். சேர்ந்திருக்கும் பொருள்களில் ஊரார் அனைவருடைய பங்கும் இருக்கும்.

விழாவன்று காலை ஒன்பது மணியளவில் ஊர்வலம் புறப்படும். அந்த ஊர்வலத்தின் அமைப்பே ஒரு தனி. ஊருக்கு நடுவில் உள்ளது குமரக்கோட்டம். முருகன் கோயிலைத்தான் சொல்லுகின்றேன். கோட்டத்தைச் சுற்றிலும் நான்கு நெடுந் தெருக்கள்—மாடவீதி என்பார்கள். கோட்டத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு; நான்கு தெருக்களையும் சுற்றிக்கொண்டு, ஊருக்கு அரைக்கல் தொலைவிலுள்ள மலையடிவாரத்திற்குச் செல்லும். ஊர்வலம் புறப்படும்போது ஒன்றும் கூட்டமேயிராது. ஊர் நாட்டாண்மைக்காரரும் அவரது ஆட்சிக் குழுவினருந்தான் இருப்பார்கள். அவர்கள் கோயில் வாயிற்படியைவிட்டு நகர்ந்ததும், தெருவின் இருமருங்கிலுமுள்ள வீடுகளிலிருந்து பெண்டிரும் ஆடவரும் ஒவ்வொருவராக வந்து ஊர்வலத்தில் கலந்து கொள்வார்கள். அதாவது வீடுவாரியாக வந்துகொண்டிருப்பார்கள். ஒவ்வொரு வீட்டிற்கும் எதிரே நாட்டாண்மைக்காரர் நின்று வணக்கஞ்செய்து, வருபவரை வரவேற்று ஊர்வலத்தில் சேர்த்துக்கொண்டே வருவார். ஊர்வலம் எத்தனைக்கெத்தனை வீடுகளைத் தாண்டுகிறதோ அத்தனைக்கத்தனை நீண்டுகொண்டே போகும். ஊர்வலத்தின் வலப்புற விளிம்பில் ஆண்களும், இடப்புற விளிம்பில் பெண்களும் ஒருவர்பின் ஒருவராக வரிசையாக அணிவகுத்துச் செல்வர். நடுவிலே சிறுவர் சிறுமியரின் கூட்டம் வரும். அனைவரும் தம்மை நன்கு அணிசெய்து

கொண்டிருப்பர்; விழாவிற்கு வேண்டிய பொருள்களை ஏந்தி வருவர்.

ஊர்வலத்தின் முன்னல் மேளம் முழங்கிக்கொண்டிருக்கும். இதற்கென்றே வெளியூரிலிருந்து சிறந்த மேள இசைக்குழுவினர் வரவழைக்கப்பட்டிருப்பார்கள். இன்னும் கொம்பு குழல், தாரை தப்பட்டி இவற்றிற்கும் குறைவிருக்காது.

இந்த இசைக் குழுக்களுக்கு முன்னல் கரகம் ஆடுவார்கள். இதற்கு முன்னல் சிலம்பாட்டம் சூடுபிடித்து நடக்கும். மனிதப் புலிகளும் (புலிவேஷம்) ஒன்ருேடொன்று பாய்ந்து மோதும். பகலாயிருந்தும், பொய்க்கால் குதிரைகள், 'தை-தை-தய்ய தை-தக்க தை" என்று ஆடும். இந்தக் கண்கொள்ளா ஊர்வலக் காட்சியைக் கண்டுகளிப்பதற்காக, அண்மையிலுள்ள சிற்றூர்களிலிருந்து மக்கள் வந்து பெருந்திரளாகக் கூடிவிடுவர். உள்ளூர் மக்களின் உவகையைச் சொல்லவா வேண்டும்! ஒரே ஆரவாரம்! ஒரே அமளி! ஊர் மக்களின் உள்ளத்திற்கும் உடலுக்கும் இந்த விழா ஒரு சிறந்த 'டானிக்."

ஊர்வலம் கிழக்குத் தெருவிலிருந்து புறப்பட்டு, தெற்குத் தெருவைக் கடந்து மேற்குத் தெருவில் வந்து கொண்டிருக்கிறது. அந்தத் தெருவில்தான் எங்கள் இல்லம். உடல் நலம் போதாததால் அம்மா வீட்டிலேயே தங்கிவிட்டார்கள். நானும் தங்கை கற்பகமும் அப்பாவும் தெருவில் இறங்கி முறைப்படி ஊர்வல வரிசையில் ஒட்டிக்கொண்டு தொடர்ந்தோம். ஊர்வலம் வடக்குத் தெருவை யடைந்தது. சோமு வீடு அங்கே தான்.

ஆண்கள் வரிசையை நோக்கிப் பாய்ந்து சல்லடை போட்டுச் சலித்து எதையோ தேடிக்கொண்டிருந்த இரண்டு கண்களை ஒரு வீட்டு வாயிற்படியில் நான் கண்டேன். அந்தக் கண்கள், தேடிய பொருளை இப்பொழுது கண்டுபிடித்தும் விட்டன. அல்லியின் கண்களைத்தான் சொல்லுகிறேன். அதாவது அல்லி என்னைக் கண்டுபிடித்து விட்டாள். இருதரப்பிலுமே கண்டுபிடிப்பதற்குமுன் காணப்பட்ட பரபரப்பு கண்டுபிடித்தபின் இல்லை. எந்த இன்பமுமே இப்படித்தான் போலும்! இப்படி சொல்வதற்கும் இல்லை. மது உண்டு மயங்கிய வண்டு சிறகடித்தா பறக்கும்? செயலற்றுத்தானே காணப்படும்! மதுவைத் தேடி யலைந்தபோது இருந்த பரபரப்பு உண்ட பின்னும் எப்படி யிருக்கமுடியும்?

ஊருக்குப் போயிருந்த மாமாவும் மாமியும் வந்து விட்டிருக்கிறார்கள். அவர்கள் குடும்பமும் — அல்லி உட்பட — ஊர்வலத்தில் வந்து கலந்து கொண்டது. மாமாவும் என் அப்பாவும் ஒருவரை யொருவர் ஏற இறங்க விறைப்புடன் பார்த்துக் கொண்டது போல் எனக்குப் பட்டது.

அல்லி பெண்கள் வரிசையில்—என் பின்பார்வையில் சிறிது தூரத்தில் இருந்தாள். அதாவது நான் அவளைப் பார்க்க வேண்டுமானால், பின்பக்கம் திரும்பித்தான் பார்க்கவேண்டும். நான் திரும்பித் திரும்பிப் பார்த்தால் யாராவது ஏதாவது நினைக்க மாட்டார்களா? ஆனால் அல்லியோ, நேர்ப் பார்வையில் என்னைப் பார்த்துக் கொண்டேயிருக்க முடியும். என்ன செய்வது—அவள் கொடுத்து வைத்தது அப்படி—நான் கொடுத்து வைத்தது இப்படி. இருந்தாலும் விட்டேனா? என்ன

படித்திருந்தாலும், எவ்வளவு அறிவுரைகள் கேட்டிருந் தாலும் மனக்குரங்கை அடக்கிக் கட்டுப்படுத்த முடிய வில்லையே. ஓர் இளைஞனது மனம், புலன்களின் வழி செல்வதில் வியப்பென்ன! நான் தோள்பட்டையில் ஏதோ சொரிந்து கொள்பவனைப் போல அடிக்கடித் திரும்பித் திரும்பி அல்லியைப் பார்த்துக் கொண்டே யிருந்தேன். நான் பார்த்த போதெல்லாம் அல்லியும் என்னைப் பார்த்துக்கொண்டிருந்ததை அறிந்தேன். என் பார்வைபட்டதும், பூக்காத புன்னகையுடன் அல்லியின் முகம் நாணத்தால் சிவந்து கவிழும். நான் பார்ப்பதால் அவள் பார்ப்பது கெட்டுப்போகிறதே என்று கருதி, தொடர்ந்து சிறிது நேரம் பார்க்காமலிருக்க முயற்சி செய்தேன். முடியவில்லையே!

ஊர்வலம் வழியிலுள்ள சோலைகளின் ஊடே ஊர்ந்து சென்று, இடையிடையேயுள்ள சிறு சிறு வாய்க்கால் களைக் கடந்தும் அருவிகளைத் தாண்டியும் மலையடி வாரத்திலுள்ள ஐயனர் கோயில் திடலை அடைந்தது.

விழாவின் சார்பாக அங்கே நடக்க இருப்பவைகள் என்னென்ன? சர்க்கரைப் பொங்கல் செய்வார்கள். மேலும் விருந்துக்கு வேண்டிய உணவு வகைகளெல்லாம் தயாரிப்பார்கள். எல்லாம் தயாரானதும், விருந்து நடக்கும். பின்னர் நாட்டாண்மைக்காரர் தேர்வு—அதன் பிறகு சில கேளிக்கைகள். இவையாவும் முடிந்ததும், காலையில் வந்தது போலவே மாலையிலும் ஊர்வலமாகப் புறப்பட்டு ஊர் போய்ச் சேர்வார்கள். இது தான் நிகழ்ச்சி நிரல்.

அநுபவ மிக்க ஆண்களும் பெண்களும் அடுப்பு வேலையில் முனைந்து விட்டார்கள். மற்றவர்கள்

எல்லோரும் மலைவளங் காணப் புறப்பட்டு விட்டனர். அருவிகளில் ஆடினவர் சிலர்—சுனைகளில் படிந்தவர் சிலர்—மலையுச்சிக்கு விரைந்து ஏறிச் சென்றவர் சிலர்—பூத்துக் காய்த்துக் கனிந்து குலுங்கும் சோலைகளின் இடையே அமர்ந்து இளைப்பாறினவர் சிலர். விழாவிற் காகப் போட்டிருந்த கடைகளில் பொருள்கள் வாங்கினவர் சிலர்.

சிறுவர் சிறுமியருள் சிலர் ஈச்சம் பழம் பறித்தனர்--சிலர் களாப்பழம் பறித்துப் புசித்தனர். நாவல் மரங் களில் ஏறிக் கனி கொய்து களித்து உண்டனர் சிலர்—மலர் எடுத்துத் தொடுத்து மகிழ்ந்தனர் சிலர். இதற் கென்றே கொண்டுவந்திருந்த கயிற்றை மரக்கிளைகளில் கட்டிச் சிலர் ஊஞ்சலாடினர். சிலர் தின்பண்டக் கடை களையும் பொம்மைக் கடைகளையும் சூழ்ந்து கொண்டு வேடிக்கை பார்ப்பதும், தேவையானதை வாங்குவது மாயிருந்தனர்.

இந்தக் காட்சிகளை யெல்லாம் கண்டு கொண்டே கற்பகமும் நானும் சுற்றிவந்தோம். இடையிடையே காண்பவரிட மெல்லாம், எங்கள் தந்தையை நாட்டாண்மைக்காரராக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டி யும் வந்தோம். எங்களைப் போலவே அல்லியும் தன் தம்பி தங்கையுடன் சுற்றிப் பார்த்துக்கொண்டு வருவதையும் கண்டோம். சமயத்தை எதிர்பார்த் திருந்த என் தங்கை, இப்பொழுது ஒரு புது வழியில் பேச்சைத் தொடங்கினாள் :–

"ஏன் அண்ணா! நீ காலையில் ஊரிலிருந்து வந்த போது, ரயிலடியிலிருந்து நேரே வீட்டிற்குத்தான் வந்தாயா ?"

"ஏன் இப்படிக் கேட்கிறாய்?"

"இல்லை, ஒருவேளை வழியில் எங்கேயாவது தங்கி வந்தாயா?"

"என்ன கேள்வி இது கற்பகம்?"

"சும்மா சொல்லண்ணா"

"நான் ஏன் வழியில் தங்கவேண்டும்? இருட்டு நேரத்தில் எனக்கு எங்கேதான் என்ன வேலை? ரயிலடியிலிருந்து நேரே வீட்டிற்குத்தான் வந்தேன். எதைக் கொண்டு நீ இப்படியெல்லாம் பேசுகிறாய்?"

"அந்த பிளாஸ்டிக் நகை கொண்டுவந்தாயே, அதை வாங்கிவருவதற்காக எங்கேயாவது தங்கி வந்தாயா என்று கேட்டேன்"

"ஓ அதுவா? அதை நான் பட்டணத்திலிருந்தல்லவா உனக்காக வாங்கி வந்தேன்"

"ஓ அப்படியா! பட்டணத்துக் கடையிலே பெயர் போட்டே விற்குமோ?"

"அது என்னவோ எனக்குத் தெரியாது. ஏன் அதில் ஏதாவது பெயர் போட்டிருக்கிறதா?"

"ஊம்-ஊம், போட்டிருக்கிறது. பெயரைப் பார்த்தால் ஒரு பெண்ணின் பெயராகத் தெரிகிறது. இன்னுங் கேட்டால், அந்தப் பெண்ணின் கையெழுத்தே அது."

"என்ன கற்பகம் சொல்லுகிறாய்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே."

"புரியாது—புரியாது. உண்மையைச் சொல்லிவிடு அண்ணா. நான் ஒருவரிடத்தும் சொல்லவில்லை."

"என்ன விளையாடுகிருயா?"

"நான் விளையாடுகிறேன்—அண்ணன் விழிக்கிறது."

"சரி சொல்லு, யாருடைய பெயர் அதில் பொறிக்கப் பட்டுள்ளது?"

"யாருடைய பெயரா? நம் மாமா மகள் அல்லியின் பெயர்தான்!"

"என்ன, அல்லியா?"

"ஆம் அண்ணு! ஏன் வியர்க்கிறது? இதோ வாங்கிப் பாரு!"

"இது எப்படி என் பைக்குள் வந்தது?"

"அதுதான் என்னுடைய கேள்வியும்! நான் அப்பா அம்மாவிடமோ, வேறு யாரிடமோ சொல்லமாட்டேன். உன் தங்கையிடம் ஒளிக்காமல் உண்மையைச் சொல்லு அண்ணு!"

"கற்பகம்! உண்மையை உரைத்து விடுகிறேன். என்னைக் காட்டிக் கொடுக்கமாட்டாயே"

"இன்னும் உன் தங்கைமேல் நம்பிக்கை இல்லையா அண்ணு! நீ வேறு நான் வேரு?"

நான் கற்பகத்திடம் நடந்ததை நடந்தபடி சொல்லி விட்டேன். அல்லியை நான் மணப்பதற்கு உடந்தையா யிருந்து, என்னேடு ஒத்துழைக்க வேண்டும் என்றும் கற்பகத்தைக் கேட்டுக் கொண்டேன்.

நான் மாமா வீட்டில் அல்லியைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது, அவள் என் முழங்கால்களில் தலை யைப் புதைத்துக் கால்களைக் கட்டிக்கொண்டு தேம்பி ளுள் அல்லவா—அப்பொழுது நான் அவளது தலையைத்

தடவிக் கொடுத்தேன் அல்லவா—அந்த நேரத்தில் என் கைக்கு ஏதோ ஒரு பொருள் அருவியதாகவும், பின்னர் அது கீழே விழுந்து விட்டதாகவும் உணர்ந்தேன். ஆனால் அதனை நன்றாகக் கவனிக்கவில்லை. அந்தப் பொருள் நான் கீழே வைத்திருந்த பைக்குள் விழுந்துவிட்டிருக்கிறது. அதுதான் கற்பகத்தின் கையில் அகப்பட்டு என்னைக் காட்டிக் கொடுத்துவிட்டது—அந்தத் தலை அணியைத்தான் சொல்லுகிறேன். இந்த விவரத்தையும் கற்பகத்திடம் சொன்னேன். மீண்டும் அவள் என்னைக் கேட்டாள் :—

“ஏன் அண்ணு, அல்லிக்குத்தான் திருமண ஏற்பாடு முடிந்து விட்டதே. நீ எப்படி அவளை மணக்க முடியும்.”

“அந்த ஏற்பாட்டை முறித்துவிட்டு நான் மணந்து கொள்வேன்.”

“அது எப்படி முடியும்?”

என்று கேட்டவளுக்கு, காலையில் நானும் அப்பாவும் குருசாமி மூலம் செய்துள்ள சூழ்ச்சியை எடுத்துச் சொன்னேன். அவள் வியப்புடனும் மகிழ்ச்சியுடனும் கேட்டுக்கொண்டிருந்தாள். பழிக்குப் பழி வாங்கியது போன்ற ஒரு மன நிறைவு அவள் குறிப்பில் காணப்பட்டது. இருப்பினும், அவள் உள்ளத்துக்குள்ளே ஏதோ ஏமாற்றம்—ஏக்கம் இருப்பதாக அவள் முகம் சொல்லிற்று. அகத்தின் அழகுதான் முகத்தில் தெரியுமே. அதை யறிந்துகொள்வதற்காக நான் கிண்டிக் கிளறத் தொடங்கினேன்.

“ஏன் கற்பகம்! அந்தப் போலீசு மாப்பிள்ளை பாண்டியனை அப்பா முதலில் உனக்கு ஏற்பாடு செய்

திருந்தாரே, அந்த மாப்பிள்ளையை அப்போது உனக்குப் பிடித்ததா ?"

"அதைக் கேட்காதே அண்ணு."

"ஏன் ? என்னிடம் சொல்வதற்கென்ன ?"

"அந்த மாப்பிள்ளேயே என்னைப் பார்க்க வந்திருந்தார். என்னை நன்ருக ஒப்பனை (அலங்காரம்) செய்தனர். அவருக்குக் காஃபி, வெற்றிலை எல்லாம் கொண்டு போய்க் கொடுக்கச் சொன்னார்கள். அந்த நாடகமெல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை. நான் மறுத்தேன். வற்புறுத்தினர்கள். தேம்பினேன்—அழுதேன். உடனே இரண்டு மூன்று கிழவிகளாகச் சேர்ந்து கொண்டு, "ஏண்டி கற்பகம் ! நீ சின்னவளா யிருந்தபோது, யாரைக் கட்டிக்கொள்ளப் போகிருய் என்று கேட்டால், ஒரு போலீசு இன்சுபெக்டரைத்தான் கட்டிக்கொள்ளப் போகிறேன் என்று அடிக்கடி விளையாட்டாகச் சொல்வாயே, அது இப்போது பலித்து விட்டதடி. வந்த வாய்ப்பை நழுவவிடாதே. எழுந்து வா. இப்படி வெட்கப் பட்டால் என்ன காரியம் நடக்கும் ! பெண்ணுய்ப் பிறந்தவர்கள் என்றைக்கிருந்தாலும் ஒருவனுக்கு ஆட்பட்டுத் தானே தீரவேண்டும் ? கூச்சப்படாதே. காஃபியைக் கொண்டுபோய் அவரிடம் கொடு—என்றெல்லாம் சொல்லிக் கரையாய்க் கரைத்தார்கள். எனக்கோ அச்சம் ஒருபுறம்—நாணம் மறுபுறம். அப்பா எதிரே எப்படி நான் எடுத்துக்கொண்டு போவேன். எனக்கு எண்சாண் உடம்பும் ஒரு சாண் உடம்பாகக் குன்றிப் போய் விட்டது. இருந்தாலும் உள்ளத்திலே எனக்கு ஒருவகையில் நிறைவுதான். நம் ஊர்ப் போலீசு நிலையத்தில் இன்சுபெக்டர்களாக இருந்து வந்தவர்களுடைய

மனைவிமார்களுக்கு ஊரிலே இருந்து வந்த செல்வாக்கை நான் சிறுபோதிலிருந்தே கவனித்து வந்திருக்கிறேன். அதனால்தான், விளையாட்டுக்காக யார் கேட்டாலும், போலீசு இன்சுபெக்டரைத்தான் நான் கட்டிக்கொள் வேன் என்று சொல்லி வந்தேன். என் விருப்பம் பலிக்கப் போவதை எண்ணி உள்ளத்திலே பூரிப்புதான். ஒரு விதமாகச் சமாளித்துக் கொண்டு, காஃபியை எடுத்துக் கொண்டுபோய் மாப்பிள்ளை கையில் கொடுத் தேன். அவர் என்னை நன்ருகக் கவனித்தார். நானும் பார்த்தேன்தான். பிறகு நடந்ததை யெல்லாந்தான் நீ தெரிந்துகொண் டிருக்கிருயே."

"கவலைப்படாதே கற்பகம்! நல்ல இடமாகப் பார்த்து நான் உன்னைக் கட்டிக் கொடுக்கிறேன்."

"கட்டிக் கொடுப்பதா? எனக்கு இனி திருமணமே வேண்டாம் அண்ணு! முதல் கோணல் முற்றுங் கோணல் என்றபடி, எப்பொழுது முதலில் தவறிப்போய் விட்டதோ அப்பொழுதே நான் இந்த முடிவுக்கு வந்து விட்டேன்."

"அப்படி சொல்வதற்கில்லை கற்பகம்! ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்ருகும்—அன்றி அது வரினும் வந்தெய்தும்—ஒன்றை நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும் என்பார்களே. பொறுத்திருந்து பார்ப் போம். முயற்சி செய்வோம்—அதற்குள் மனத்தைச் சோர விட்டுவிடாதே."

"அது எனனவோ அண்ணு! எனக்கு ஒன்றும் திரு மணமே வேண்டாம். நீ செய்துகொண்டால் அதுவே எனக்குப் போதும்."

"அது சரி கற்பகம்! அதே போலீசு மாப்பிள்ளையை மீண்டும் முடித்து வைத்தால் மணந்து கொள்ள உடன்படுகிறாயா?"

இந்தக் கேள்விக்குப் பதிலே இல்லை. ஒருவகை நாணத்துடன் கற்பகம் தலை நட்டுக் கொண்டாள். புரிந்து கொண்டேன்.

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
"கடுத்தது காட்டும் முகம்"

என்பது வள்ளுவம் அல்லவா? இந்த நேரத்தில் அல்லி தன் தம்பி தங்கையுடன் எதிர்முகமாக வந்து கொண்டிருந்தாள். எங்களை நோக்கி வருமாறு நானும் கைக்குறிப்புக் காட்டினேன். அவளை இப்போது தனியே சந்தித்து, இனி ஆகவேண்டிய காரியங்களுக்கு ஏற்பாடு செய்ய விரும்புகிறேன் என்று கற்பகத்திடம் தெரிவித்தேன். இவளும் ஒத்துக்கொண்டாள்.

நாங்களும் அல்லியும் நெருங்கினதும், அவளும் கற்பகமும் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டனர்—பழைய பற்று போகுமா? உறவுக்கு உறவு—சிறு பிள்ளையிலிருந்து விளையாட்டுத் தொடர்பு வேறு. "நலமா கற்பகம்?" என்று அல்லி முதலில் பேச்சு கொடுத்தாள். "நான் நலந்தான்; நீ நலமாய் இருக்கிறாயா அண்ணி?" என்று கற்பகம் கேட்டாள். 'அண்ணி' என்றழைத்ததும் அல்லியின் முகத்தைப் பார்க்க வேண்டுமே! இதற்கு முன்பெல்லாம் 'மச்சி (மைத்துனி) மச்சி' என்றே அழைத்து வந்த கற்பகம் இப்போது அண்ணி என்று அழைத்தால் அல்லிக்கு எப்படியிருக்கும்!

"ஏது கற்பகம்! எனக்குப் புதிதாக அண்ணி பட்டம் சூட்டியிருக்கிருய்."

"ஏன், அப்படி அழைத்தால் தகாதா? நீ என் அண்ணியாக வரக்கூடாதா?"

என்று பேசிக்கொண்டே இருவரும் என்னைப் பார்த்தபடி சிரித்துக் கொண்டார்கள்.

பக்கத்துச் சரிவில் இருக்கும் ஒரு தோப்பில், திரு விழாவிற்கென்று அமைக்கப்பட்டிருந்த சுழல் ராட்டினத் திலும் பொம்மை ராட்டினத்திலும் சிறுவர் சிறுமியர் ஏறிச் சுற்றி விளையாடிக்கொண்டிருந்தனர். அதைக் கண்ட அல்லியின் தம்பியும் தங்கையும் தாங்களும் அங்கே போய் விளையாடவேண்டும் என்று அடம் பிடித் தார்கள். "சரி, நான் வந்து அழைத்துப்போகிற வரையி லும் அங்கேயே விளையாடிக்கொண்டிருங்கள்" என்று சொல்லி அல்லி அவர்களை நயமாக நழுவ விட்டாள்.

"அதோ அருவியில் போய்த் தண்ணீர் அருந்திவிட்டு வருகிறேன்." என்று சொல்லிக் கற்பகம் மெள்ள நகர்ந்து விட்டாள். அல்லி ஆடு திருடிய கள்ளிபோலக் கலங் கிளுள். நானே தேள் கொட்டிய திருடனைப்போலத் திக்குமுக்காடினேன். "கற்பகத்துக்கு எல்லாம் தெரி யும், வா சொல்லுகிறேன்" என்று கூறி, பக்கத்துப் பள்ளத்தாக்கிலுள்ள ஒரு மரச்செறிவிற்குள் அல்லியை அழைத்துக்கொண்டு நுழைந்தேன். நாங்கள் எவர் கண்ணிலும் படவில்லை என்றே நினைக்கிறேன்.

"புதன்கிழமை நடக்கவிருக்கும் பரியத்தை நிறுத்து வதற்கு ஏதேனும் ஏற்பாடு செய்தீர்களா?" என்று அல்லி ஆவலுடன் கேட்டாள். முயற்சி நடக்கிற

தாக நவின்றேன். அவள் அகமகிழ்ந்தாள். அவளது தலை நகை கற்பகத்திடம் என்னைக் காட்டிக் கொடுத்து விட்டதையும் தெரிவித்து, என் பையிலிருந்து அதை எடுத்துக் கொடுத்துவிட்டேன். வாங்கிக்கொண்டு, "இதை நான் காலையிலிருந்து தேடிக்கொண்டிருந்தேன். சரி, இதை நீங்கள் எனக்குக் கொடுத்தது போலவே, நானும் உங்களுக்குக் கொடுக்க ஒன்று கொண்டுவந்திருக்கிறேன்" என்று சொல்லி என் ஆவலைக் கிளப்பினாள்.

"என்ன அது" என்றேன்.

"பொறுங்கள் தருகிறேன். நீங்கள் கற்பகத்திடம் மாட்டிக்கொண்டதைப்போல, நானும் அம்மாவிடம் அகப்பட்டுக் கொண்டேன். பாட்டிக்கு ஒன்றும் தெரியாதிருந்தும், அம்மா ஊரிலிருந்து வந்த அரைமணி நேரத்திற்குள்ளேயே என்னைப் பின்வருமாறு அதட்டி அலட்டத் தொடங்கிவிட்டார்கள்:—

"ஏண்டி அல்லி! நாங்கள் ஊருக்குப் போயிருந்த போது இங்கே யாராவது வந்தார்களா?"

"இரவு வேளையில் யாரம்மா வருவார்கள்?"

"அதுதாண்டி, இரவு வேளையாய் இருந்ததால்தான் கேட்கிறேன், எவனாவது வந்தானா என்று."

"இங்கே யாரும் வரவில்லையே"

"உள்ளதைச் சொல்லடி நீலி."

"என்னம்மா இது?"

"ஆ! ஒன்றுந் தெரியாத கள்ளி. உண்மையை ஒப்புக்கொள்ளுகிறாயா? அல்லது உன் அப்பாவிடம் சொல்லிவிடட்டுமா?"

"என்னம்மா இது மிரட்டுகிறாய். எனக்கு ஒன்றுமே புரியவில்லையே."

"புரியாது புரியாது: நாங்கள் ஊருக்குப் போனவுடனே, இங்கே உன் அத்தான் அழகன் வந்தானா இல்லையா?"

"அது என்னவோ எனக்குத் தெரியாது."

"உனக்குத் தெரியாமல் அவன் இங்கே எப்படியடி வந்திருப்பான்? உன்னிடம் அல்லாமல் அவனுக்கு இங்கே வேறு என்ன வேலை?"

"அவர் ஒன்றும் இங்கே வரவில்லையே."

"அவன் வராமல் அவன் கைக்குட்டைமட்டும் கால் முளைத்துக்கொண்டு வந்துவிட்டதா இங்கே? அது தோட்டத்தில் கிடந்தது."

"அது யாருடைய கைக்குட்டையோ!"

"யாருடைய கைக்குட்டையாகவாவது இருந்தால், அதில் அவனுடைய பெயர் எப்படியிருக்கும்?"

"என்ன பெயர் போட்டிருக்கிறதோ?"

"அழகன் என்ற பெயர்தான் நூலால் பின்னியிருக்கிறது."

"எந்த அழகனோ? அத்தான் ஒருவர்தானா அழகன்"

"அ. அழகன் என்றுதான் போட்டிருக்கிறது. என் அண்ணாவின் பெயர் அம்பலவாண முதலியார்தானே. அவருடைய மகன் அ. அழகன். அவன் பெயரே அது"

"அது எப்படி இங்கே வந்ததோ? யார் கொண்டு வந்து போட்டார்களோ! அதற்கெல்லாம் நானா

பொறுப்பாளி? ஒருவேளை சலவை கொண்டுவந்தவன், தவறுதலாக மாற்றி நம் வீட்டில் கொடுத்துவிட்டிருக்கலாம்."

"ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய்யாம். எவ்வளவு சுற்றி வளைத்துப் பேசுகிறாள் தெரியுமா இந்தத் திருடி!"

"ஏம்மா என்னை வீணாக இழுத்துப்போட்டு வதைக்கிறாய்? அத்தான் பட்டணத்தில் அல்லவா படித்துக் கொண்டிருக்கிறது!"

"தெரியுமடி! நாங்கள் ஏறின வண்டியிலிருந்துதான் அவன் இறங்கினான். இது உன் அப்பாவுக்குத் தெரியாது. நான் மட்டும் பார்த்தேன். அவரிடம் சொன்னால் ஏதாவது எரிந்துவிழுவார் என்றெண்ணிப் பேசாமல் இருந்துவிட்டேன். ஆனால், நான் தன்னைப் பார்த்தது அழகனுக்குத் தெரியாது. இருப்பினும் அவன் எங்களைப் பார்த்திருக்கக் கூடும். நாங்கள் வீட்டில் இல்லாததை அறிந்துகொண்டதால், அவன் அங்கிருந்து நேரே இங்கு வந்திருக்கிறான். உண்மைதானே? இப்பொழுதாவது ஒத்துக்கொள். நான் உன் அப்பாவிடம் சொல்லாமல் உன்னைக் காப்பாற்றுகிறேன். இனிமேலும் மறைத்தாயோ, அப்பாவிடம் அம்பலப்படுத்திவிடுவேன். அப்புறம் நீயாயிற்று, அவர் ஆயிற்று. என்ன சொல்லுகிறாய்?"

என்று அம்மா கடுமையாய்க் கடிந்துகொண்டார்கள். நான் தேம்பித் தேம்பி யழுதேன்; அம்மாவைக் கட்டிக் கொண்டேன். அவர்களும் அணைத்துக் கொண்டார்கள்; அழுது பயனில்லை. நடந்ததைச் சொல் என்றார்கள்.

சொல்லிவிட்டேன். நடக்கவிருக்கும் பரியத்தைத் தடுத்து, அத்தானுக்கு என்னைக் கட்டிக் கொடுக்க அப்பாவிடம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அம்மா காலைக் கட்டிக்கொண்டு கதறினேன்; கெஞ்சினேன். "உன் அப்பா பிடித்தது உடும்புப் பிடியாயிற்றே; இது நடக்கிற காரியமா? நான் என்ன செய்வேன்" என்று சொல்லிக் கைவிரித்து விட்டார்கள். அப்படி யென்றால் தற்கொலை செய்து கொள்வேன் என்று மிரட்டினேன். உண்மையிலேயே என் கடைசி முடிவும் அதுதான். இந்த அணுகுண்டைப் போட்டதும் அம்மா அயர்ந்து விட்டார்கள். முடிந்தவரையில் முயன்று பார்ப்பதாக முடிவு கொடுத்தார்கள். அதன் பிறகுதான் விழாவிற்குப் புறப்பட்டோம்"

"கெட்டிக்காரிதான் அல்லி நீ! அம்மாவிடம் போட்ட அந்த அணுகுண்டை நாளைக்குள் அப்பா விடமும் போடு. ஆவது ஆகட்டும். ஆனால் இன்னொன்று சொன்னாயே, கடைசி முடிவும் அதுதான் என்று, அதை மட்டும் செயலில் செய்து விடாதே, பேச்சோடு இருக்கட்டும்"

"சொல்வேறு, செயல்வேறா அத்தான்?"

"தற்கொலை செய்து கொள்வது கோழைத்தன மல்லவா?" கையாலாகாத கயவர்களே-வாழத்தெரியாத மடையர்களே தற்கொலை செய்துகொள்வார்கள்"

"தற்கொலை செய்துகொள்வது கோழைத்தனம் என்று நான் கருதவில்லை. வறுமையாலும் பிணியாலும் மூப்பாலும் கடுமையாய் வருந்துவோர்கூட இறக்கத் துணிவதில்லை. இயற்கையாகச் சாவு நேரிட்டாலும், இவ்வுலகத்தைத் துறக்க ஒருப்படுவதில்லை. எனவே,

ஒருவர் சாகத் துணிகிருர் என்ருல், அவர் வீரராகத்தான் இருக்க வேண்டும். எந்தக் கோணத்தில் நின்று பார்த்தாலும், தற்கொலே செய்து கொள்பவர்கள் தைரியம் உடையவர்களாகவே எனக்குப் படுகிருர்கள். அது சின்ன காரியம் அன்று. இந்த அற்பப் பிச்சைக்கார வாழ்வின்மேல் அவாக் கொண்டு, மானம் போவதாக இருப்பினும், உயிரை வெல்லக்கட்டியாக மதித்து அதை விடத் துணியாது, குறிக்கோளேக் கைவிடுவதே கோழைத்தனம்—என்பது என் தாழ்மையான கருத்து அத்தான். மனத்தில் வரித்த மணவாளனே விட்டு, மற்ருெருவனே மணந்து கொள்ளும் அளவிற்கு மானங் கெட்டவளா நான்? 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார், உயிர் நீப்பர் மானம் வரின்' என்பது பொய்யா மொழியாயிற்றே. நானும் பத்தாவதுவரை படித்திருக்கிறேன் அத்தான்."

"நீ சொல்லுகிறபடி பார்த்தால், உலகத்திலே ஒருவருமே உயிர் வாழ முடியாது; எல்லோரும் இறந்து போக வேண்டியதுதான். யாருக்குத்தான் நினைத்த காரியமெல்லாம் நிறைவேறி விடுகின்றன? யாருக்குத்தான் குறிக்கோள்கள் எல்லாம் கூடிவந்து விடுகின்றன? யாருக்குத்தான் வாழ்க்கையிலே கடலனைய — மலையொத்த துன்பங்கள்—தொல்லேகள் தோன்ற வில்லே? யாருக்குத்தான் ஒவ்வொரு நேரத்தில் மானம் போகக் கூடிய அளவுக்கு நெருக்கடி நேரவில்லே? ஒவ்வொருவரும் தற்கொலே செய்துகொண்டு ஒழிந்து போக வேண்டியதுதானு? முன்னர் தோல்விமேல் தோல்வி கண்டவர் பலர், பின்னர் வெற்றிமேல் வெற்றிபல பெற்று வீறுடன் வாழ்ந்த வரலாறுகள் உனது பத்தாவது படிப்பில் வரவில்லேபோலும்! பைத்தியமே! ஒழிந்துபோவதற்காக

உனக்கு உலகம் பத்தாவது படிப்பைத் தரவில்லை. வகை செய்து வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்வதற்காகவே அந்தப் படிப்பு தரப்பட்டிருக்கிறது. அதனால் அதைச் செய்ய முடியவில்லை என்றால், படிப்பே தேவையில்லை; பழைய காட்டுமிராண்டி வாழ்க்கைக்கே திரும்பலாம்."

"நீங்கள் குறிப்பிடுகிறபடி என் வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்வதற்காகத்தான் இத்துணைப் பாடு படுகிறேன் அத்தான்."

"அது சரி, முயற்சி செய். உன் அப்பாவிடம் மன்றாடு—போராடு. முடியாது போனால் விட்டுவிடு."

"இன்றிரவே அப்பாவிடம் என் கருத்தைச் சொல்லப் போகிறேன்."

"அப்படியே செய். நானும் என் தந்தையிடம் சொல்லப் போகிறேன். சூழ்நிலை ஒத்து வருகிறாற்போல் தெரிகிறது. இதைச் சொல்லி உன்னைத் தூண்டவே இங்கே காண விரும்பினேன். சரி, யாராவது பார்த்து விடப் போகிறார்கள்—பிரிந்து விடுவோம்."

"அத்தான்!"

"அல்லி......' ஊம். இன்னொன்று கேட்க மறந்தே போனேன்."

"என்ன அது?"

"இன்றைக்கு நாட்டாண்மைக்காரர் தேர்தல் நடக்கப் போகிறதல்லவா? உன் அப்பாவும் நிற்கப் போகிறாராமே. அவருக்காக நீ உறைப்புடன் வேலை பார்க்கிறாயாமே?"

"உங்கள் அப்பாவுந்தான் நிற்கப் போகிருராம். நீங்களுந்தான் வேலை பார்க்கிறீர்களாம்."

"நான் வேலை பார்க்கிறேன் என்று தெரிந்துமா நீ எனக்கு எதிராக வேலை செய்கிருய்? என்ஞல் நம்பவே முடியவில்லையே!"

"நம் இருவரின் நட்பு தனி—ஒவ்வொருவரின் குடும்ப விவகாரமும் தனித்தனி அத்தான்!"

"எனக்காக நீ விட்டுக் கொடுக்கக் கூடாதா?"

"எனக்காக நீங்கள் விட்டுக் கொடுக்கக் கூடாதா?"

"அது எப்படி முடியும்?"

"நான் மட்டும் எப்படி முடியும்?"

"நீயா இப்படிப் பேசுகிருய்? உண்மையாகவா?"

"ஆம், உங்கள் அல்லிதான் பேசுகிறேன். என் சொந்த உரிமையா யிருந்தால் விட்டுக் கொடுத்து விடு வேன். உரிமை என்ன? என் உடல் பொருள் உயிர் அனைத்தும் உங்களுக்காகத்தான்; ஆனல், இது அப்பா வைப் பொறுத்ததாயிற்றே. அவருக்கு மகளாகப் பிறந்து அவரது உப்பை உண்டு வளர்ந்து வரும் நான் அவருக்கே கேடு நினைக்கலாமா?"

"எனக்காக இப்போது விட்டுக் கொடுக்க வில்லை யென்ருல், இனி நான் உன்னை ஏறெடுத்துக்கூட பார்க்க மாட்டேன். என்ன சொல்லுகிருய்? முடிவாகச் சொல்! உறுதியாகச் சொல்! ஊம், ஆகட்டும்!"

"ஆ....................."

"ஏன், மயங்குகிருய்? சீக்கிரம்.........."

"அத்தான்.........."

"நீ என்னை அத்தான்-அத்தான் என்று அழைப்பது நிலைக்க வேண்டுமானால் சீக்கிரம் சொல்..................... சொல்லமாட்டாயா?"

"சொல்லி விடுகிறேன் அத்தான், இப்போதே சொல்லி விடுகிறேன். இந்தக் காரியத்தில் மட்டும் நான் என் தந்தையை வஞ்சிப்பதற்கில்லை. மன்னிக்க வேண்டும். இது எங்கள் குடும்ப உரிமை. அவருக்கு வாக்குப் போடும்படி பலரையும் திருப்புகிற எனது பணியை நான் தொடர்ந்து செய்யத்தான் செய்வேன்."

"இதன் விளைவு என்ன ஆகும் தெரியுமா?"

"நீங்கள் விட்டவழி ஆகும்."

"அந்தப் போலீசு பூதம் பாண்டியனைத்தான் நீ மணக்க வேண்டிவரும்; என்னை மறந்துவிட வேண்டியது தான்."

"மணந்தால் உங்களை மணப்பேன்: இல்லையேல் கன்னியாகவே காலங் கழிப்பேன்; வேறு யாரையும் மணந்து கொள்ள மாட்டேன்."

"அல்லி..............."

"அத்தான்..........."

"நீ என்னை மன்னிக்க வேண்டும். உன்னை நான் மிரட்டியது உண்மையன்று. உனது உள்ளத்தின் உறுதியைச் சோதிக்கவே இவ்வாறு நடித்தேன். தேர்தல் விவகாரத்தில் அப்பா பக்கம் உறுதியா யிருக்கிற உனது உள்ளம், திருமண விவகாரத்திலும் என் பக்கமே உறுதியாக இருக்கும் என்பது இதன் பொருள். இது உள்ளத்தின் உயர்ந்த பண்பு. இத்தகு உள்ளங்களை எந்த

'பகுத்துண்ணுதல்'—'பல்லாரோ டுண்ணுதல்' என்னும் தொடர்கள் இலக்கியங்களில் படித்தபோது உள்ளத்தைக் கவரவில்லை. அப்படி உண்ணுவதில் பேரின்பம் உள்ளது என்று புலவர்கள் கூறிப்போந்த உண்மை, அநுபவத்தில் கண்ட இப்போதுதான் புலனாயிற்று. நண்பர்கள் நான்கைந்து பேர் சேர்ந்து கொண்டு 'பிக்னிக்' (வனவிருந்து) நடத்துவது இந்தக் காலத்தில் பெருமையாகவும் நாகரிகமாகவும் மதிக்கப்படுகிறது. ஆனால் எங்களுடையதோ, ஊரார் அனைவரும் ஒன்று சேர்ந்து நடத்தும் பெரிய 'பிக்னிக்' அல்லவா? இதற்கு ஈடு ஏது? இணை ஏது? ஊர் தோறும் இப்படி ஒரு விழா கொண்டாடின், எல்லோரும் ஒருகுலம்—ஒரு குடும்பம் என்ற ஒற்றுமை உணர்வு பெருகுமே!

அடுத்த படியாக நாட்டாண்மைக்காரர் தேர்தல் ஆரம்பிக்கப்பட்டது. இப்போது நாட்டாண்மைக் காரராக இருந்து வரும் நல்லசிவம்பிள்ளை தலைமை தாங்கித் தேர்தலைத் தொடங்கி வைத்தார். தேர்தலில் நிற்பவர்கள் அப்பாவும் மாமாவுந் தான். வழக்கப்படி வாக்குப் பதிவு நடந்தது. அப்பா முகத்திலும் மாமா முகத்திலும் ஆவலும் திகிலும் பரபரப்பும் காணப்பட்டன. ஒருசமயம் நம்பிக்கையுடன் இருப்பது போலவும், மற்றொரு சமயம் சோர்ந்து போவது போலவும் மாறிமாறிக் காணப்பட்டார்கள். மொத்தத்தில் இருவரையும் பார்க்கப் பார்க்க எனக்கு இரக்கம் ஏற்பட்டது. இவர்கள் ஏன் இப்படிப் போட்டிபோட வேண்டும்; பிறகு, வெல்வோமோ தோற்போமோ என்று மனங் குழம்பிச் சாகாமல் சாகவேண்டும்? மற்றவர்களைப் போல் ஒதுங்கிக் கொண்டிருந்தால் மனவமைதியுடன் இருக்கலாமே! அப்பப்பா, இந்தப் பதவிப் பித்து பொல்லாதது. பதவிப் பித்தர்கள் சூதாட்டக்காரரினும்

ஆற்றலாலும் அசைக்க முடியாது; பெயர்க்க முடியாது; மாற்ற முடியாது. வந்து மோதும் பொருள்களே உடை பட்டுச் சிதறும். உன்னை நான் பாராட்டுகிறேன்—மெச்சு கிறேன். உன் உறுதியை வாழ்த்துகிறேன். நீ என்னை எதிர்த்துப் பேசியதற்காக நான் எள்ளளவும் வருந்த மாட்டேன்; அதற்குப் பதிலாக மகிழ்ச்சியே கொள் கிறேன். தகப்பனிடத்தில் கரையாத அன்புடனும் கடமையுணர்ச்சியுடனும் நடந்து கொள்பவள் கணவ னிடத்தும் அவ்வாறே நடந்து கொள்வாய் என்பதை எண்ணும்போது, உன்னை மணந்து கொள்ள வேண்டும் என்றிருந்த எனது உறுதி இன்னும் இறுக்கம் பெற்று விட்டது. இது உனது சொந்த உரிமை. இதில் தலையிட உரிமையே இல்லை. நீ எனக்கு மனைவியாக வாய்த்த பிறகுங்கூட, இது போன்ற உன் உரிமைகளில் நான் குறுக்கிட மாட்டேன். ஏதேனும் ஒரு தேர்தலில் நீ எனக்கு எதிராகப் போட்டியிட்டாலும் வரவேற்பேன். இந்த உரிமைகளையெல்லாம் உணராதவர்கள்தான், உப்புக்கு உதவாத காரியங்களிலெல்லாம் முரணிக் கொள்வார்கள். சரி, யாரோ வரும் அறிகுறி தெரிகிறது. இவ்விடத்தைவிட்டு அகன்று விடுவோம்."

நான் கற்பகத்துடன் சேர்ந்துகொண்டேன். அல்லி தம்பி தங்கையுடன் சென்றாள். பழையபடி விழாத் திடலை அடைந்தோம்.

அப்பா ஒரு பக்கத்தில் அமர்ந்து சிலரோடு அளவ ளாவிக் கொண்டிருந்தார். மாமா மற்றொரு பக்கத்தில் ஏதோ முடுக்காகப் பேசிக்கொண்டிருந்தார். அத்தை யோ சமையல் குழுவினரிடையே காணப்பட்டார்கள்.

உரிய நேரத்தில் விருந்து ஆரம்பமாயிற்று. ஊரார் அனைவரும் உண்டாட்டயர்ந்து உள்ளங் களித்தனர்.

கொடியவர்கள். வேறு எதைப் பற்றியும் கவலை கொள்ளாமல், தங்கள் வெற்றி ஒன்றிலேயே கண்ணு யிருப்பார்கள். இந்தச் சகதியில் நம் தந்தை ஏன் தடுக்கி விழுந்திருக்க வேண்டும்—என்றெல்லாம் எண்ணி நொந்து கொண்டேன்.

நொந்து கொண்டேனே தவிர, மீண்டும் எனது அரசியல் அறிவு வேலை செய்யத் தொடங்கியது. எல்லோருமே ஒதுங்கிப் போனால் யார்தான் பொறுப்பு ஏற்பது? எல்லோருமே சொந்தக் காரியங்களை மட்டும் கவனித்துக் கொண்டிருந்தால், யார்தான் பொதுக் காரியம் பார்ப்பது? பொதுக்காரியம் பார்ப்பவன் பொறுக்கித் தின்னுகிறன் என்கிறார்கள்—பொறுக்கித் தின்பதற்காகத்தான் பொதுக்காரியம் பார்க்க வருகி றார்கள் என்கிறார்கள். இருக்கலாம்; தேனை வழித்தவன் புறங்கையை நக்கத்தான் செய்வான். ஊர்வேலை பார்ப் பவன் கொஞ்சம் சாப்பிடுவான்கூடத்தான். ஆனல், தேன் முழுவதையும் தான் சாப்பிட்டு விட்டு, ஊரார்க்குப் புறங்கையைக் காட்டக் கூடாது. அப்படி செய்பவன் எவ்வளவு நாளைக்கு நிலைக்க முடியும்? உலகம் அவனுக்கு விடை கொடுத்துவிடும். அதற்குத்தான் தேர்தல் இருக்கிறதே.

இதை விட்டுவிட்டு, அரசியலில் ஈடுபடுபவர்கள் அத்தனை பேரையும் பழித்துக் கொண்டிருப்பதில் பயனில்லை. அது கையாலாகாத்தனம்; பொறுப்பற்றவர் களுடைய வேலை. "அயோக்கியர்களின் கடைசி புகலிடம் அரசியல்" என்று எவரோ சொன்னதாகச் சிலர் அடிக்கடி பேசக் கேட்டிருக்கிறேன். இந்தக் கருத்தை முதலில் கேட்டபோது எனக்கும் சுவையாகத்தான் இருந்தது. பிறகு சிந்திக்கச் சிந்திக்க இதனை ஏற்றுக்

கொள்வதற்கில்லை. இப்படிப் பேசுபவர்கள் போய்ப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு பார்க்கட்டுமே! போட்டி போட்டுக்கொண்டு போய்ப் பொதுப்பணி செய்து புகழைத் தட்டிக்கொண்டு போகட்டுமே! சும்மா அடுப்பங்கரையில் உட்கார்ந்து ஒப்பாரி வைத்துக் கொண்டிருப்பதால் பயன் யாதோ?

இந்தக் கருத்துக்களை யெல்லாம் எண்ணிப் பார்த்ததும் எனக்குப் புதுத்தெம்பு மீண்டது. தேர்தல் முடிவைத் தெரிந்துகொள்வதில் ஆர்வமும் பரபரப்பும் ஏற்பட்டன. வாக்குகள் எண்ணப்பட்டன. முடிவு அறிவிக்கப்பட்டது. கூட்டம் முழுதும் ஒரே பரபரப்பு—ஒரே விறுவிறுப்பு. அப்பாவும் மாமாவும், கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாதவர்களைப் போலக் கவலைக் குறிப்புடன் காணப்பட்டனர். அவர்களிடையே இப்பொழுதுதான் முன்னிலும் மூன்று மடங்கு போட்டித் தீ கொழுந்துவிட்டெரிந்தது. புகைச்சலுக்குக் கேட்கவா வேண்டும்! அது என்ன? இருவருக்கும் ஒத்த வாக்குகள் விழுந்திருந்தன. யாரைத் தேர்ந்தெடுப்பது?

கூட்டத்தில் கூச்சலும் குழப்பமும் தலைவிரித்தாடின. தலைவர் எல்லோரையும் உட்காரச்செய்து அமைதியை நிலைநாட்டினர். இனி என்ன செய்யலாம் என்று சூழ்வுரை (ஆலோசனை) கேட்டார்.

இன்னொரு முறை தேர்தல் நடத்தவேண்டும் என்றனர் சிலர். இருவரையுமே தள்ளிவிட்டு வேறொருவரைத் தேர்ந்தெடுக்கலாம் என்றனர் ஒரு சிலர். தலைவர் யாரைக் குறிப்பிடுகிறாரோ அவரையே எடுத்துக்கொள்ளலாம் என்றார்கள் சிலர். பழைய நாட்டாண்மைக்காரரே இருந்துவிட்டுப் போகட்டும் என்றனர் மற்றும்

சிலர். அது முறையாகாது; இந்த இருவருள் ஒருவரே இருக்கவேண்டும் என்று பலர் சொன்னார்கள்.

இந்த நேரத்தில், "இருவருள் மிகுந்த படிப்புடையவரை எடுத்துக் கொள்ளலாம்" என்று ஒரு குரல் ஆண்கள் பக்கத்திலிருந்து எழுந்தது. அதைத் தொடர்ந்து, "இருவருள் மிகுந்த வயதுடையவரை எடுத்துக் கொள்ளலாம்" என்று ஒரு குரல் பெண்கள் பக்கத்திலிருந்து வந்தது. முதல் குரல் என்னுடையதுதான். ஏனெனில், மாமாவைவிட அப்பா அதிகம் படித்தவர். அதனால் அந்தத் துருப்பை வைத்து வெட்டலாம் என்று நான் முயன்றேன். இரண்டாவது வந்த குரலோ அல்லியினுடையது. ஏனெனில், அப்பாவைவிட மாமா அதிக வயதுடையவர்; அதனால், என் துருப்புக்குமேல் பெரிய துருப்பாக அதை அடித்து வெல்லலாம் என்று அல்லி முயன்றிருக்கிறாள்.

தலைவரோ, இந்த அறிவுரைகளை யெல்லாம் ஏற்றுக் கொள்ளவில்லை. இருவருக்கும் பொதுவாகத் திருவுளச் சீட்டு போட்டு எடுக்கலாம் என்று செய்வழி கூறினார். 'ஆமாம், ஆமாம், அதுதான் சரி' என்று அனைவரும் பெருமாள் மாடு மாதிரி தலையாட்டினார்கள்.

அம்பலவாண முதலியார், மாயாண்டி முதலியார் என்ற இரண்டு பெயர்களையும் தனித்தனியாக இரண்டு ஓலை நறுக்குகளில் வரைந்து ஒரு குடத்தில் இட்டு, ஒரு குழந்தையை விட்டு ஓர் ஓலையை எடுக்கச் செய்தார்கள். ஆமாம், அப்பாதான் வெற்றிபெற்று விட்டார். திருமணப் பெண்ணைப்போல மாமா முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டார்.

வென்றவர் தோற்றவரைக் கட்டித் தழுவிக்கொண்டு ஆறுதல் செய்வது மரபு. அந்த வழக்கப்படி மாமாவைத் தழுவிக்கொள்ளுமாறு பலரும் அப்பாவைத் தூண்டினார்கள். பழைய பகையை எண்ணி அப்பா தயங்கினார். நான் விடவில்லை; அப்பா கையைப் பிடித்து இழுத்த படியே மாமரவிடம் இட்டுச் சென்றேன். இந்தச் சடங்கை ஏற்றுக்கொள்ள விரும்பாதவராய் அப்பொழுதே மாமா அவ்விடத்தை விட்டு அகன்று விட்டார்; ஊர் நோக்கி நடந்துகொண்டிருந்தார். இனி அப்பாதான் நாட்டாண்மைக்காரர்.

அடுத்து, புது நாட்டாண்மைக்காரர் தலைமையில் கேளிக்கைகள் ஆரம்பமாகின. பலவகை ஆடல் பாடல்கள் நிகழ்ந்தன. சிலம்பம், மற்போர், வாட்போர், கோழிச் சண்டை, ஆட்டுக்கடா சண்டை முதலியன முறையே நடந்தன.

இறுதியாக, அனைவரும் ஊர் நோக்கி ஊர்வலமாகப் புறப்பட்டார்கள். இப்பொழுது ஊர்வலத்தின் தலைவர் அப்பாதான். புது நாட்டாண்மைக்காரரை ஊர்வலமாக அழைத்துச் சென்று சிறப்பிக்கவேண்டுமல்லவா?

இருட்டுகிற சமயமாதலால், விளக்குகள் ஏராளமாக ஆயத்தம் செய்யப்பட்டிருந்தன. ஆடம்பரமாகவும் ஆரவாரத்துடனும் ஊர்வலம் சென்றது. வழி நெடுக, காலையில் போலவே எல்லா இயங்களும் முழங்கின. எல்லாக் கேளிக்கைகளும் நடந்தன.

ஊர்வலம் ஊரையடைந்தது; வலமாக நான்கு தெருக்களையும் சுற்றி வந்தது. மக்கள் காலையில் ஒவ்வொருவராக வீட்டிலிருந்து வந்ததைப் போலவே, இப்பொழுதும்

ஒவ்வொருவராக வீட்டிற்குள் சென்றுகொண்டிருந்தனர். மேற்குத் தெருவில் எங்கள் வீட்டிற்கு நேரே வந்தபோது, கற்பகம் உள்ளே சென்றுள். நான்மட்டும் வீட்டிற்குள் செல்லவில்லை. கடைசிவரையும் அப்பாவுக்குத் துணை யாக இருந்து அவர்களை அழைத்துக் கொண்டு வர வேண்டுமல்லவா? வடக்குத் தெருவில் மாமா வீட்டிற்கு நேரே சென்றதும், அல்லியும் அத்தையும் வீட்டை யடைந்தனர். என் கண்பார்வையிலிருந்து மறைவதற்கு முன் அல்லி என்னைப் பார்க்கத் தவறவில்லை. ஆனுல் அவள் முகத்தில் காலையில் இருந்த மலர்ச்சி இல்லை- அவள் கண்களில் காலையில் இருந்த குறும்பு இல்லை- அவள் உதடுகளில் காலையில் காணப்பட்ட புன்னகை இல்லை. அல்லிமலர் வாடி வதங்கிச் சென்றது. தோல்வி பெற்ற அப்பாவிடம், எப்படி தன் விருப்பத்தை வெளி யிட்டு வெற்றி பெற முடியும் என்ற ஏக்கமோ- ஏமாற்றமோ—என்னவோ

கூட்டமும் குறைந்தது; ஊர்வலமும் குமரக்கோட் டத்தை அடைந்தது. வழக்கமாக நடக்கும் எல்லா மரபு நிகழ்ச்சிகளும் முடிந்த பின்னர், அப்பாவும் நானும், ஆவலுடன் எதிர்நோக்கிக் காத் [illegible] அம்மாவைக் காணும் ஆர்வத்துடன் வீடு சேர்ந்தோம்.

உணவு முடிந்தது. படுக்கைக்குப் போகு முன்பு பகலில் நடந்தவற்றையெல்லாம் அம்[illegible]குச் சொல்லிக் கொண்டிருந்தேன். தேர்தலில் தோற்றதினுல் மாமா அடைந்த ஏமாற்றத்தை நான் வருணித்துக்கொண் டிருந்த போது அம்மாவின் முகம் கெட்டுவிட்டது. அண்ணன் அல்லவா? தான் ஆடாவிட்டாலும் தசை ஆடும் என்பார்க[illegible] பெருமூச்சு விட்டுக்கொண்டே படுக்கைக்குச்[illegible]ட்டார்கள்.

அந்த நேரத்தில், மாப்பிள்ளை வீட்டிற்குத் தூது சென்றிருந்த 'குல்லூகபட்டர்' குருசாமி வந்து சேர்ந் தார். அப்பா ஆவலுடன் அவரிடம் பேச்சு கொடுத்தார்:—

"போன காரியம் காயா பழமா?"

"நான் போயும் காயா? காயா யிருந்ததைக் கனிய வைத்து விட்டேன்."

"என்ன நடந்தது? விவரமாகச் சொல்லு"

"மாப்பிள்ளையின் தந்தை முத்தைய முதலியார் முதலில் ஒத்துக்கொள்ள மறுத்து விட்டார். 'மாயாண்டி முதலியாருக்கு வாக்குக் கொடுத்துவிட்டேன்; பரியத் துக்கு ஏற்பாடாகி விட்டது; இனி ஒன்றும் செய்வதற் கில்லை; காலம் கடந்து விட்டது' என்று கையை விரித்து விட்டார். விடுவேனா நான்? 'மாயாண்டி முதலி யாருக்குக் கொடுத்த வாக்கைத் தவறக் கூடாது என் கிறீர்களே; அதற்கு முன்பு அம்பலவாண முதலியாருக்குக் கொடுத்த வாக்கு என்னவாயிற்று! அதை மீறியதுபோல், இப்போது இதையும் மீறவேண்டியதுதான்' என்றேன் நான். 'வாக்[illegible] தவறியவன் என்று உலகம் என்னைப் பழிக்காதா' என்ருர். "பழிக்காது; அதற்குப் பதிலாக, முதலில் யாருக்கு வாக்குக் கொடுத்தாரோ அதை முத்தைய முதலியார் நிறைவேற்றி விட்டார் என்று உலகம் உங்[illegible] புகழும்" என்று நான் வெறியேற்றி னேன். பாதி சொத்து எழுதி வைப்பதாக நீங்கள் கூறியதை மீண்டும் நினைவு படுத்தினேன். பணம் வரு கிறது என்றதும் வாயைப் பிளந்து விட்டார். ஒத்துக் கொண்டார். அந்த மாயாண்டி வீட்டுப் பரியத்தை நிறுத்தி விடுவதாகச் சொ[illegible] என்னெதிரிலேயே ஒருவரைக் கூப்பிட்டு, தம[illegible]யோடு இல்லை

என்றும், ப்ரியத்தை நிறுத்தி விடலாம் என்றும் மாயாண்டிக்குத் தெரிவித்துவிட்டு வரும்படி அனுப்பி வைத்தார். நானும் வெற்றிக் களிப்புடன் விடைபெற்றுக்கொண்டேன்."

என்று குருசாமி கூறி, அப்பாவின் புகழ் மாலையைச் சூட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டார்.

அப்பாவின் களிப்புக்கோ எல்லையில்லை. வெற்றி மேல் வெற்றி. அயர்ந்து தூங்கினர்.

எனக்கு ஏது தூக்கம்? பணம் பிடுங்கிப் பிணமாகிய முத்தைய முதலியை நான் மிகவும் மட்டமாக மதித்தேன். இப்பொழுதுமட்டும் அவரை எப்படி நம்ப முடியும்? இன்னும் அதிகமாகத் தருவதாகச் சொன்னல் மாமா பக்கம் திரும்பி விடலாம். ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிபாடு கொண்டாட்டமாம். இப்போது முத்தைய முதலிக்கு நல்ல திசை போலும்! இப்படி அப்பாவைப் போலவும் மாமாவைப் போலவும் ஒவ்வொரு காரியத்திலும் போட்டி போட்டுக்கொண்டு கொட்டியழுது கெட்டுப்போன குடும்பங்கள் எத்தனையோ! இரண்டு ஆடுகளை முட்டவிட்டு, நடுவில் இரத்தம் குடிக்கும் நரி இந்த முத்தைய முதலி. பணம் என்றதும் இந்தப் பிணம் இப்படியா வாயைப் பிளக்கவேண்டும்!

முத்தைய முதலியை நோவானேன்? எல்லாம் தெரிந்த திருவள்ளுவரே ஓரிடத்தில் ஏமாந்துவிட்டிருக்கிருரே—தோல்வி யடைந்துள்ளாரே! அன்பே செல்வம்—அருளே செல்வம்—அறிவே செல்வம்—ஊக்கமே செல்வம்—பணிவே செல்வம்—கல்வியே செல்வம்—கேள்வியே செல்வம்—இவையே அழியாத செல்வங்கள்—பணங்

காசோ விரைவில் அழிந்தொழிந்து விடும்; அது கயவர்களிடமும் இருக்கும்—என்றெல்லாம் பல விடங்களில் கூறி, பணத்தைச் செருப்புக்காலின் கீழ்ப் போட்டுத் தேய்த்து மிதித்துத் துவைத்து, சுட்டுப் பொசுக்கி, சாம்பலைப் பத்தடிப் பள்ளத்தின் கீழ்ப் போட்டுப் புதைத்து விட்ட திருவள்ளுவரே, மீண்டும் எப்படியோ உயிர் பெற்றெழுந்து வந்து தம் கழுத்தைப் பிடித்து நெருக்கிய அந்தப் பணத்தைப் புகழத் தொடங்கிவிட்டாரே! "ஒன்றுக்கும் உதவாதவர்களை யெல்லாம் உயர்ந்தவர்களாக ஆக்கும் பணத்தைவிட மேலான பொருள் உலகில் வேறொன்றும் இல்லை; பணம் இல்லாதவருக்கு இந்த உலக வாழ்வே இல்லை" என்றெல்லாம் பன்னிப் பன்னிப் பாடிவைத்துள்ளாரே வள்ளுவர். இப்படி ஏதேதோ எண்ணியபடியே நானும் தூங்கிவிட்டிருக்கிறேன்.



## 5

பொழுது விடிந்தது. அன்று செவ்வாய்க் கிழமை. காலைக் கடன்கள் முடிந்தன. அடுத்து ஆகவேண்டியதைப் பற்றி அப்பாவும் நானும் ஆராய உட்கார்ந்தோம். அப்போது குல்லூக பட்டர் குருசாமியின் குரல் கேட்டது. அவரை வரவேற்று உட்காரவைத்து, மேற்கொண்டு ஏதேனும் செய்தி உண்டா என்று அப்பா விசாரித்தார்.

"நல்ல செய்தி இருக்கிறது. நாளை மாயாண்டி வீட்டில் நடக்கவிருக்கும் பரியம் நின்றுவிடும். இந்தக் குழப்பம் எல்லாம் அடங்கிய பின்பு, உங்கள் மகள் கற்பகத்துக்கும் போலீசு மாப்பிள்ளை பாண்டியனுக்கும் அடுத்தவாரம் பரிய விழா நடத்தி விடுவோம். அப்புறம், இன்னொரு 'கிராக்கி' கொண்டுவந்திருக்கிறேன்."

"என்ன அது?"

"கற்பகம் திருமணத்தை உங்கள் வீட்டில்தான் நடத்தப் போகின்றீர்கள். செலவோடு செலவாக, உங்கள் மகன் அழகன் திருமணத்தையும் கூடச் சேர்த்து நடத்திவிடலாமே."

"அவனுக்கு என்ன அவசரம் இப்பொழுது? அவன் படித்துக் கொண்டிருக்கிறானே."

"உங்கள் பிரியம். உங்கள் வீட்டு அம்மாவுக்கு உடம்பு சரியில்லை என்பதற்காகத்தானே கற்பகத்தின் திருமணத்தையும் விரைவு படுத்துகிறீர்கள். அதற்காகத்தான் அழகன் திருமணத்தையும் உடனடியாக நடத்திவிடலாம் என்கிறேன் நான்."

"அப்படியா.........! ஒருவகையில் நீ சொல்வதும் சரிதான் குருசாமி! சரி, பெண் பார்க்கவேண்டுமே."

"அதுதான் ஒரு கிராக்கி கொண்டு வந்திருப்பதாகச் சொன்னேன். ஒன்று என்ன—இரண்டு என்றுகூடச் சொல்லலாம்."

"விவரமாகச் சொல்லு."

"வேலங்குடி என்னும் ஊரில் ஒரு பெரிய நிலக் கிழார்—அதாவது மிராசுதார், தம் பெண்ணை நம் அழகனுக்குக் கொடுக்கப் பிரியப்படுகிறார்."

"அவருக்கு எத்தனை பிள்ளைகளோ?"

"அவருக்கா? மூன்று ஆண்கள்-மூன்று பெண்கள்."

"இது எத்தனையாவது பெண்ணோ."

"இது மூன்றாவது பெண்ணும்."

"வேண்டாமையா வேண்டாம். மூன்றாவது பெண்ணே வேண்டாம். மூன்றாவது நான்காவது பெண்ணைக் கட்டிக் கொடுப்பவன் மூக்கால் அழுது கொண்டு கட்டிக்கொடுப்பான். பெற்றுவிட்டோமே என்று கடனுக்கு அழுவான். வயிற்றை விட்டுக் கழிந்தது வாசற்படியைவிட்டு எப்பொழுது கழியும் என்று காலத்துக்காகக் காத்துக்கொண் டிருப்பான். இதற்கு முன்பே இரண்டு பெண்களைக் கட்டிக்கொடுத்துக் கொட்டுப்பட்டவன் ஆதலால், மருமகப்பிள்ளையைக் கண்டதுமே வயிறு எரியும். இப்போது வயிறு எரிந்து என்ன பண்ணுவது? அப்போதே தெரிந்திருக்க வேண்டும். இப்பேர்ப்பட்டவனுடைய வீட்டில் என் மகன் போய் மானக்குறைவு அடைய நான் ஒருகாலும் உடன் பட மாட்டேன்."

"எல்லோருமே இப்படி யிருப்பார்களா? ஒரு சிலர் தான் இருக்க முடியும்."

"அந்த ஒரு சிலருள், நீ சொல்பவனும் ஒருவனாக இருந்துவிட்டால்......"

"சரி இது வேண்டாம். விட்டுவிடுங்கள். ஆலப் பட்டி என்னும் ஊரில் ஒரு பெரிய செல்வர்; ஏராளமான நிலபுலங்கள் உடையவர். அவருக்கு ஒரே ஒரு பெண் தான்; இரண்டு ஆண்கள்: அவரும் உங்கள் மகனுக்குத் தம் பெண்ணைக் கொடுக்க விரும்புகிறார். சீர் செலுத்தி நிறையச் செய்வார்."

"எங்களுக்குச் செல்வர்களும் வேண்டாம்; சீர் செலுத்தியும் செய்யவேண்டாம். இப்பொழுது அப்படித் தான் சொல்வார்கள். பெண்ணின் தகப்பனார் வீட்டு வைக்கோல் போரை அண்ணாந்து பார்த்தால், தலைப் பாகை கழன்று விழுந்து விடுவது மட்டுமல்ல, தலையே ஒடிந்து விழுந்து விடும்—அவ்வளவு உயரம் என் பார்கள். அங்கே போய்ப் பார்த்தாலோ, ஒரு காணி கூட சொந்த நிலம் இருக்காது; ஊரார் நிலத்தைக் குத் தகைக்குப் பயிரிடுபவனாக இருப்பான் அவன். அது போகட்டும். என் மகனுக்கு என்னய்யா ஒருவன் செய்வது? நானே தான் என் சொத்தில் பாதியை இன் னொருவனுக்கு எழுதிவைக்கப் போகிறேனே. என் மகன் போனால், ஐயோ மருமகப்பயல் வந்துவிட்டானே என்று மலைக்காமல், உள்ளங் குளிர்ந்து ஒருவேளை சோறு போட்டு அனுப்பினால் அதுவே போதுமையா."

"அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நீங்கள் சொன்னால் இந்த இடத்தையே முடித்து விடு கிறேன்."

"நல்ல குடும்பந்தானே? நல்ல பண்பாடு உடைய வர்கள் தானே? குலம் கோத்திரம் எப்படி?"

"அந்தக் கவலையே உங்களுக்கு வேண்டாம். நீங்கள் யாரை வேண்டுமானாலும் விசாரித்துப் பார்த்துக் கொள்ளலாம்."

"அதுதானய்யா நமக்குத் தேவை. ஆனால், பெண்ணு நம் அழகனுக்குப் பொருத்தமாயிருக்க வேண்டுமே."

"அதற்கென்ன! போய்ப் பார்த்துவிட்டால் போகிறது. தம்பியையும் அழைத்துக் கொண்டு போவோம். எதற்கும் தம்பியையும் கேட்டு விடுவோமே."

என்று இருவரும் பேசியபடியே என்னைப் பார்த்தார்கள். நான் ஒன்றும் பேசாது விழித்துக்கொண்டிருந்தேன். 'அவனையே கேட்டுப் பாரு' என்று அப்பா சொன்னார். 'ஏன் தம்பி! போய்ப் பார்த்துவிட்டு வருவோமா? உன் கருத்து என்ன?' என்று குருசாமி என்னைக் கேட்டார். 'எனக்கு இப்போது திருமணம் வேண்டாம்; நான்தான் படித்துக் கொண்டிருக்கிறேனே. கற்பகத்துக்குச் செய்துவைத்தால் அதுவே போதும்' என்றேன் நான். 'அது எனக்குத் தெரியாதா? ஏதோ காலம் கைகூடி வருகிறதே; கையோடு கையாக உனக்கும் திருமணம்செய்து வைத்துவிடுவோம் என்று பார்த்தால், நீ என்னவோ கிராக்கி பண்ணுகிறாயே' என்று அப்பா கடிந்து கொண்டார். 'ஆமாம் தம்பி! அப்பா சொல்வதைத் தட்டாமல் ஒத்துக்கொள்' என்று ஒத்துக்கு மத்தளம் அடித்துக் குருசாமி பக்கவாத்தியம் வாசித்தார். 'எனக்கு இப்போது திருமணம் வேண்டவே வேண்டாம்; நீங்கள் ஒன்றும் போய்ப் பெண் பார்க்க வேண்டியதில்லை' என்று ஒரேயடியாக மறுத்தேன் நான். 'நாங்கள் பார்க்கவேண்டாமென்றால், நீயாகவே பார்த்துக் கொள்வதாகச் சொல்லுகிறாயாடா' என்று அப்பா வசை மாரி பொழியத் தொடங்கினார். 'நாங்கள் குறிப்பிடும் இடம் உனக்குப் பிடிக்கவில்லையா? வேறு பெண்

வேண்டுமா?' என்று கேட்டார் குருசாமி. நான் வாய் திறக்கவில்லை.

"வேறு பெண் வேண்டுமா? மாட்டைக் கேட்டுக் கொண்டா கொட்டகை கட்டுவார்கள்? நான் இவனைக் கேட்டுக்கொண்டு இவன் சொல்லுகிற பெண்ணையா முடிப்பேன்? இவன் பெண் பார்ப்பதிலே பெரிய திறமை சாலியா? இந்தக் காலத்துப் பயல்களே இப்படித்தான்! நான்கு எழுத்து படிக்கவைத்து விட்டால், பிறகு பெற்ற வர்களையே மறந்து விடுவார்கள். அதிலும் ஐரோப்பியக் கல்வி வந்தாலும் வந்தது—பிள்ளைகள் நாட்டிற்கே யன்றி வீட்டிற்கும் அயலாராகி விட்டார்கள். யாரையும் அவர் களுக்குப் பிடிப்பதில்லை. அவ்வளவு நாகரிகம் முற்றி விட்டதாம். கால்சட்டையை மாட்டிக் கொள்கிறார்கள்—கறுப்புக்கண்ணாடி போட்டுக் கொள்கிறார்கள்—சிகரெட்டை ஊதுகிறார்கள்—கன்னமும் மார்பும் குழி விழுந்து, கூன் வளைத்துக்கொண்டு, தடுக்கி விழுந்து விடுபவர்போல் வெடுக்கு வெடுக்கென்று நடக்கிறார்கள். காதல்வேறு காதலாம்—எவளாவது ஒருத்தி பின்னால் சுற்றி உருப்படாமல் போகிறார்கள். பெற்றவர்களின் அருமை பின்னால்தான் தெரியும் இவர்களுக்கு."

என்று மூச்சைப் பிடித்துக்கொண்டு அப்பா முழக்க மிட்டார். உண்மையில் அவருடைய குற்றச்சாட்டுகளுக் கெல்லாம் நேர் எதிர்மாறானவன் நான். என்னசெய்வது! அவரை எதிர்த்துப் பேச மிகவும் அஞ்சினேன். மீண்டும் குருசாமி என்னைப் பார்த்து, 'உனக்கு இந்தப் பெண் பிடிக்கவில்லை யென்றால், மனம் விட்டு, வாய்திறந்து சொல்லு தம்பி! வேறு பெண் ஏற்பாடு செய்கிறேன்' என்று கூறினார். 'அப்புறம் அப்பாவிடம் தெரிவிக்கிறேன்' என்று நான் கூறினேன். குறிப்பை உணர்ந்து கொண்டு,

மாலையில் வருவதாகச் சொல்லி ஒரு கும்பிடு போட்டு விட்டுக் குருசாமி நழுவி விட்டார். அவர் போனதும், 'என்னிடம் என்ன சொல்லப்போகிருய்?' என்று அப்பா பேச்சைத் தொடர்ந்தார் :—

"உங்களிடம் சொல்ல என்னவோ போல் இருக்கிறது".

"இருக்கட்டும்; உன் மனத்தில் உள்ளதை ஒளிக்காமல் சொல்".

"ஒளிக்காமல் சொன்ஞல் ஒத்துக்கொள்வீர்களா?"

"சொன்ஞல் தானே தெரியும்."

"நான் நம் மாமா மகள் அல்லியைத்தான் மணந்து கொள்ளப் போகிறேன்".

"என்ன! அல்லியையா? அவன் அவளைக் கொடுக்க அழைக்கின்ருஞ உன்னை? இதற்கு முன்பே பெரிய பகை—நீண்ட நாள் பகை. அவன் வீட்டுப் பரியத்தை வேறு நாம் தடுத்திருக்கிறோம். நேற்று வேறு அவன் தேர்தலில் நம்மிடம் மூக்கறுபட்டுப் போயிருக்கிருன். இந்தநிலையில் அவன் எப்படி உனக்கு அல்லியைக் கொடுப்பான்?"

"அவர் கொடுப்பதாயிருந்தால் உங்களுக்கு உடன்பாடுதானே?"

"ஓகோ, அவன் ஒப்புதலை முதலிலேயே பெற்றுவிட்டாயா? இப்பொழுது என்னிடம் வந்திருக்கிருயா?"

"அப்படி யெல்லாம் ஒன்று மில்லையப்பா".

"அப்படி யென்ருல், எந்த நம்பிக்கையைக் கொண்டு அவன் மகளை மணந்து கொள்ளலாம் என்று கனவு காண்கிருய்?"

"வந்துப்பா வந்து........"

"வந்து என்ன வந்து?"

"அல்லி எனக்குக் கடிதம் எழுதினாள். அதனால்தான் நான் சென்னையிலிருந்து வந்தேன். அன்றிரவே அவளை வீட்டில் சந்தித்தேன். நேற்று விழாவிலும் சந்தித்தேன். ஒருவரை யொருவர் மணந்து கொள்வதாக நாங்கள் முடிவுசெய்து கொண்டோம். அவள் தன் அப்பாவிடம் உடன்பாடு பெற முயல்வதாக ஒத்துக் கொண்டாள். நடக்கவிருந்த பரியத்தையும் நீங்கள் தடுத்து விட்டீர்கள். எங்கள் நல்லகாலந்தான் இது. நீங்களும் ஒத்துக் கொண்டால்........".

"ஓகோ, காரியம் அவ்வளவுக்கு மிஞ்சி விட்டதா? என்னை யறியாமல், என்னைக் கேட்காமல், நீ எப்படி அவளை மணப்பதாக அவளிடம் ஒத்துக்கொண்டிருக்கலாம்? அவள் எழுதினாலும் நீ வரலாமா? உனக்கு எங்கே போயிற்று அறிவு. இதை நான் ஒத்துக் கொள்ளவே முடியாது. கரடியாய்க் கத்தினாலும் உன் மாமாவும் உடன்பட மாட்டான். அப்படியே அவன் ஒத்துக் கொண்டாலும் நான் உடன்படவே மாட்டேன்."

"அது என்னவோ, நான் அல்லியைத் தவிர வேறு யாரையும் மணந்துகொள்ள மாட்டேன்."

"அவள்மேல் என்ன அப்படிக் காய்த்துத் தொங்குகிறது? அதுவுமல்லாமல், அவள் அப்பா நம்மைவிட பணக்காரன். நம் அளவைவிட பெரிய இடத்தில் பெண் கட்டிக் கொண்டால், பிறகு பெண்பின்னாலேயே மணை எடுத்துக்கொண்டு திரியவேண்டியதுதான். உன் மாமன்

ஒரு முரடன்—முரடன். அவன் இப்பொழுது ஒத்துக் கொண்டு பெண் கொடுத்து விட்டாலும், பிறகு வாழ்க்கை முழுவதும் சண்டித்தனம் செய்துகொண்டே யிருப்பான்; உன் வாழ்க்கை தீராத போரும் பிணக்குமாகத் தான் இருக்கும். ஆகவே, என் உயிர் இருக்கும்வரை உன் எண்ணம் நடக்கவே நடக்காது. இது உறுதி."

"நான் கொடுத்து வைத்தது அவ்வளவு தானா அப்பா?"

"நீ கொடுத்து வைத்ததா? நான் கொடுத்து வைத்தது இவ்வளவுதான். என் சொல் கேட்காத பிள்ளையைப் பெற்று வளர்த்தேனே. இன்னும் எனக்கு ஒரு சாண் கயிறு தான் பாக்கி."

"வேண்டாமப்பா வேண்டாம். இனி ஒரு முறை அப்படிச் சொல்லாதீர்கள். நான் என்றைக்குமே உங்கள் சொல்லை மீற மாட்டேன். நான் அல்லியிடம் எதுவும் உறுதியாக வாக்குக் கொடுத்துவிட வில்லை. 'முயன்று பார்க்கிறேன்—அப்பா ஒத்துக்கொண்டால்தான் உன்னை நான் மணந்து கொள்வேன்; இல்லாவிட்டால், அவர்கள் குறிப்பிடும் பெண்ணையேதான் மணந்து கொள்வேன்' என்றுதான் அல்லிக்குச் சொல்லி வைத்திருக்கிறேன். எனவே, நீங்கள் எந்தப் பெண்ணைக் குறிப்பிடுகிறீர்களோ அந்தப் பெண்ணையே மணந்துகொள்ள நான் காத்திருக்கிறேன்—கடமைப்பட்டிருக்கிறேன்."

"அழகா! நீ சொல்வது உண்மைதானா? உன் சொந்த நினைப்பில்தான் பேசுகிறாயா?"

"ஏன் வியக்கிறீர்கள்? உண்மைதானப்பா! என்னை நம்புங்கள்! ஏன் என்னவோ எண்ணுகிறீர்கள்?"

"தம்பீ! உன் பண்பு—உன் பணிவு—உன் கடமையுணர்ச்சி எல்லாம் என்னைக் கவர்ந்து விட்டன. உனக்கு நான் என்ன பதில் சொல்வதென்றே இப்போது புரியவில்லையே."

"எது வேண்டுமானாலும் சொல்லுங்களப்பா, அதன் படியே நான் நடக்கிறேன்."

"இவ்வளவு கடமை யுணர்ச்சி உள்ள ஒரு மகனது மனத்தைக் கெடுத்துப் புண்படுத்த எந்தத் தந்தையும் விரும்பமாட்டான். நான் இப்போது தலைகீழாக மாறி விட்டேன். உன் மாமா உடன்படுவதாயிருந்தால், நீ அல்லியையே மணந்து கொள்ளலாம். நான் மனமார ஒத்துக்கொள்கிறேன்."

"அப்பா.........அப்பா.........!"

"சரி, போய் அம்மாவிடமும் சொல்லிக் கொள்ளு. அடுத்து ஆகவேண்டியதைக் கவனி."

என்று அப்பா சொன்னதும், எனது மகிழ்ச்சிக்கு எல்லையே யில்லை. ஆனால் மாமாவை ஒத்துக்கொள்ளச் செய்ய வேண்டுமே. இப்போது எனக்குக் கால்பங்கு தான் காரியம் கைகூடி யிருக்கிறது; இன்னும் முக்கால் பங்கு கைகூடியாக வேண்டும். அதாவது, அப்பாவிடம் காரியம் முடிப்பது மிக எளிது; மாமாவிடமோ மிக அரிது. எதுவும் முயன்றால் முடியும் என்ற நம்பிக்கையுடன், நடந்ததையெல்லாம் அன்னையிடம் அறிவிக்கச் சென்றேன்.



# 6

அல்லி என்ன நிலைமையில் இருக்கிருளோ? தன் தந்தையிடம் எந்த அளவு முயற்சி செய்திருக்கிருளோ என்ற எண்ணம் அன்று முழுவதும் அலைமோதிக்கொண்டிருந்தது. பிற்பகல் நான்கு மணியளவில் தேநீர் அருந்திவிட்டுத் தெருப்பக்கம் வந்து நின்றேன். என்னல் நம்பவே முடியவில்லை: எதிர்பாராதவிதமாக அல்லியின் தங்கை—சிறுமி ஓடிவந்து, அக்கா கொடுத்துவிட்டு வரச் சொல்லிற்று என்று கூறி ஒரு கடிதத்தை என் கையில் கொடுத்துவிட்டுத் திரும்பிப் பாராமல் ஓடோடியும் விட்டாள்.

என்ன எழுதியிருப்பாள்? மாமா மறுத்து விட்டதாக எழுதியிருப்பாளா! அல்லது உடன்பட்டதாக எழுதியிருப்பாளா! அல்லது, தேர்தலில் தோற்றுவிட்டதனல் எரிச்சலும் புகைச்சலுமா யிருக்கிருர் என்று எழுதியிருப்பாளா? ஒருவேளை, உங்கள் பெண் வேண்டாம்; பரியத்தை நிறுத்தி விடலாம் என்று மாப்பிள்ளை வீட்டார் சொல்லியனுப்பி யிருக்க, அதைப் பற்றி ஏதாவது எழுதியிருப்பாளா? அல்லது நம் அப்பா ஒத்துக்கொண்டாரா—இல்லையா என்று விசாரித்து எழுதியிருப்பாளா? இல்லை—பட்டணத்துக்கு எப்பொழுது புறப்படுகிறீர்கள் என்று கேட்டு எழுதியிருப்பாளா? ஒருவேளை, இன்ன இடத்தில் இன்ன நேரத்தில் தன்னை வந்து சந்திக்கும்படி எழுதியிருப்பாளா? அல்லது, மாமா உடன்படாததால், தன்னை மறந்துவிடும்படி எழுதியிருப்பாளா? என்று என் மனம் என்னென்னவோ எண்ணிக்கொண் டிருந்தது. என் கால்களோ, வேகமாகப் படிகளைக் கடந்து வீட்டு மேல் மாடியை அடைந்தன. கைகளோ விரைந்து உறையைக் கிழித்துக் கடிதத்தை எடுத்துப் பிரித்தன. கண்களோ பரபரப்புடன் படிக்கத் தொடங்கின:

அன்புள்ள அத்தான்!

வணக்கம்.

நேற்று ஊர்வலத்திலிருந்து வீட்டிற்குள் நுழைந்ததும், நான் நேரே அப்பாவிடம் ஓடினேன். அவர் பைத்தியம் பிடித்தவர்போல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார். 'அப்பா' என்று குரல் கொடுத்தேன். 'அம்மா அல்லி' என்று அன்போடு என்னை அழைத்தார்; 'வந்து விட்டாயா' என்று பரிவோடு கேட்டார். 'இப்போதுதானப்பா வந்தேன். ஏன் படுத்துக்கொண்

டிருக்கிறீர்கள்—உடம்புக்கு ஒன்றுமில்லையே' என்று கேட்டேன்.

"உடம்புக்கு ஒன்றுமில்லையம்மா! உள்ளம்தான் சரியாயில்லை."

"நடந்ததைப் பற்றிக் கவலைப்படாதீர்கள் அப்பா. வாழ்க்கையில் வெற்றியும் தோல்வியும் இயற்கை என்பது உங்களுக்குத் தெரியாததா?"

"இப்போது தெரிந்து விட்டது அல்லி."

"நாமும் எவ்வளவோ முயற்சி செய்தோம். இன்னும் ஒரு வாக்கு கிடைத்திருந்தால் கூட நமக்குப் போதும்—வெற்றி பெற்றிருப்போம். என்ன செய்வது! நடந்தது நடந்தாய் விட்டது."

"அல்லி! நீ பெண்குழந்தையா யிருந்தும், இந்தத் தேர்தலில் எனக்காக எவ்வளவோ பாடுபட்டாய். பெண்களிடமெல்லாம் போய்க் கேட்டுக் கொண்டாய். உன் முயற்சியால்தான் பாதி வாக்குக்களாயினும் கிடைத்தன. உனக்கு நான் என்ன செய்தாலும் தகும்—எவ்வளவு செய்தாலும் தகும் அல்லி!"

"மகள் தந்தைக்குச் செய்யவேண்டிய கடமையைத் தான் செய்தேனப்பா."

"உன்னைச் சிறக்கக் கட்டிக்கொடுத்து, உன் மனம் போல மகிழ்ச்சியாக வாழவைக்கப் போகிறேன்—நீ கேட்டதெல்லாம் செய்யப்போகிறேன் அல்லி!"

"நீங்கள் இருக்கும்போது எனக்கு என்னப்பா குறைவு? ஆனல் நீங்கள் இப்போது கவலையை விட்டு

மகிழ்ச்சியாக இருக்க வேண்டும்—அது தான் எனது முதல் தேவை."

"நடந்ததை என்னால் மறக்கவே முடியவில்லையே. நான் வேறு யாரிடமாவது தோற்றிருந்தால் இவ்வளவு கவலைப்பட மாட்டேன். அந்தப் பகையாளி அம்பலவாணனிடம் தோற்றதுதான் என்னவோபோல் இருக்கிறது. இந்த மானக்கேட்டைத் தாங்கிக் கொண்டு நான் எப்படி ஊரில் நடமாடுவேன்."

"உங்களுக்கு ஒரு குறைவும் நேர்ந்துவிட வில்லையே. இருவருக்கும் சமமான வாக்குகள் கிடைத்திருக்கின்றன. திருவுளச் சீட்டின் மூலம் கிடைத்த வெற்றி ஒரு வெற்றியாகாது—தோல்வி ஒரு தோல்வியாகாது. என்னைப் பொறுத்தவரையில், நீங்கள் இருவருமே வெற்றி பெற்றவர்கள்—அல்லது இருவருமே தோற்றவர்கள்."

"எனக்கு ஆறுதல் செய்ய உன்னைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள் அல்லி? இவ்வளவு அன்பும் அறிவும் ஆற்றலும் உடைய உனது திருமணத்தின்போது என் மனம் மகிழ்ச்சியாக இருப்பதற்கில்லையே. நான் வெற்றி பெற்றிருந்தால், நாளை மறுநாள் நடக்கவிருக்கும் உன் பரியத்தை இன்னும் எவ்வளவோ சிறப்பாக நடத்துவேனே. நல்ல காரியம் நடக்க இருக்கும்போது சகுனம் சரியாக இல்லையே."

"ஆமாம்பா, சகுனம் சரியாயில்லைதான். இவ்வளவு மனத் துயரத்தோடு எப்படி ஒரு நல்ல காரியத்தை நடத்துவது? எனக்கும் மனம் ஒன்றும் நன்றாக இல்லை. இன்னொன்று செய்யலாமே."

"என்னம்மா அது?"

"இந்தப் பரியத்தை இப்போது நடத்தாமல் ஒத்திப் போட்டுவிட்டால் என்ன?"

"அது எப்படி அல்லி முடியும்? எல்லா ஏற்பாடும் செய்தாய் விட்டது. இனி மாப்பிள்ளை வீட்டார் ஒத்துக் கொள்வார்களா?"

"ஒத்துக் கொள்ளத்தான் செய்யவேண்டும்."

"அது எப்படியம்மா முடியும்? நடத்தித்தான் ஆகவேண்டும். ஒருவிதமாக நடத்தி விடுகிறேன். முன் வைத்த காலைப் பின்வைக்கலாமா?"

"அப்பா! நான் உங்களிடம் ஒன்று சொல்லலாமா?"

"என்ன அது?"

"சொல்ல அச்சமாயிருக்கிறது."

"பரவாயில்லை, சொல்லு."

"ஒரு வாரமாகவே சொல்லவேண்டும் என்றிருந்தேன்—வாய்ப்பு நேரவில்லை. இப்பொழுது உங்களுக்கும் மனம் சரியாய் இல்லாததால் சொல்லத் துணிகிறேன்."

"எதுவாயிருந்தாலும் அஞ்சாது சொல்லு."

"நாளை மறுதினம் நடக்கவிருக்கும் பரியத்தைத் தள்ளிப்போடுவது மட்டுமல்ல—அதை நிறுத்தியே விட வேண்டும்—அந்தப் புது உறவையும் முறித்துக்கொள்ள வேண்டும் — என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேனப்பா".

"என்ன! ஏன் இப்படிச் சொல்லுகிறாய்?"

"அந்தப் போலீசு மாப்பிள்ளையை எனக்குப் பிடிக்கவில்லையப்பா. ஒரு போலீசுகாரருக்கு மனைவியாக நான்

விரும்பவில்லை. இளமையிலிருந்தே போலீசுகாரர் என்றால் நான் அஞ்சுவது உங்களுக்குத் தெரியாதா?"

"அதை அன்றைக்கே சொல்லியிருக்க வேண்டும். எல்லா ஏற்பாடும் ஆன பிறகு இன்றைக்குச் சொல்லி என்ன பயன்?"

"எனக்கு அந்த மாப்பிள்ளை வேண்டவே வேண்டாம்பா—அதைவிட என்னை ஒரு பாழுங் கிணற்றில் பிடித்துத் தள்ளி விடுங்கள்".

"பாழுங் கிணற்றில் பிடித்துத் தள்ளுவதற்காகவா உன்னைப் பெற்று வளர்த்துப் பெண்ணாக்கி விட்டேன்? சரி, போலீசு வேலை பார்ப்பவர் வேண்டாம் என்றால், வேறு எந்த வேலை பார்ப்பவர் வேண்டுமாம்? அதையும் இப்போதே சொல்லிவிடு. ஏனென்றால், அப்புறம் டாக்டரும் வேண்டாம்—வழக்கறிஞரும்—இஞ்சினீயரும் வேண்டாம் — அவன் வேண்டாம் — இவன் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டேயிருப்பாய். அதனால், வேறு எவன் வேண்டும் என்று இப்பொழுதே சொல்லி விடம்மா தாயே".

"நம் அத்தை மகன் அழகனைத்தான் நான் கட்டிக் கொள்வேன்".

"என்ன! அழகனையா? வெந்த புண்ணில் வேல் கொண்டா எறிகிறாய்? பைத்தியக்காரப் பெண்ணே! இராத்திரி முழுவதும் இராமாயணம் கேட்டாலும்—விடிந்ததும் பெருமாள் கோயிலை இடித்தாலும். இந்நேரம் நான் வயிறெரிந்து கொண்டு பேசியதென்ன—நீ மீண்டும் அந்தப் பகையாளி உறவை விரும்புகிறாயே!"

"கட்டிக்கொண்டால் அத்தான் அழகனைத்தான் கட்டிக்கொள்வேன்; இல்லா விட்டால் எனக்குத்

திருமணமே வேண்டாம்; கன்னியாகவே காலங்கழித்து விடுகிறேன்".

"ச்சீ அசட்டுப் பெண்ணே! இந்தப் பூச்சாண்டியெல்லாம் இந்த மாயாண்டியிடம் பலிக்காது. நான் முடிவுகட்டியது முடிவுகட்டியதுதான். என் போக்கை யாராலும் மாற்ற முடியாது என்பது இதுவரை உனக்குத் தெரியாதா? நாளை மறுநாள் நடக்க வேண்டிய பரியம் நடக்கவேண்டியது தான்—நடந்தே தீரும்."

என்று கன்னத்தில் அறைவதுபோல் ஏசிப் பேசிவிட்டு அப்பா எழுந்து சென்று விட்டார். தேம்பித்தேம்பி அழுதுகொண்டே சென்று, அடுப்பங்கரையில் இருந்த அம்மாவிடம் நடந்ததைச் சொன்னேன். "இந்த நேரத்தில் அப்பாவிடம் நீ சொல்லலாமா? ஏன் எனக்குத் தெரியாமல் வாயைக் கொடுத்தாய்?" என்று அம்மா என்னைக் கடிந்து கொண்டார்கள். அன்றிரவு முழுவதும் தூக்கமே வரவில்லை. தங்களை எண்ணி எண்ணி ஏங்கி அழுதுகொண்டே படுக்கையில் கிடந்தேன்.

பொழுது விடிந்தது. இன்று காலையிலிருந்தே, நாளைய பரியத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை அப்பா கவனித்துக்கொண் டிருந்தார். நடைப்பிணமாக நான் வீட்டில் உலவிக்கொண்டிருந்தேன்.

முற்பகல் பத்துமணி இருக்கலாம். யாரோ ஒருவர் வீட்டிற்கு வந்து அப்பாவிடம் ஏதோ பேசியிருந்து விட்டுச் சென்றார். அதிலிருந்து அப்பாவின் தோற்றத்திலும் பேச்சிலும் செயலிலும் பெருத்த மாறுதல் காணப்பட்டது. எங்களுக்கு ஒன்றுமே விளங்க வில்லை. அப்பா குணந்தான் எல்லோருக்கும் தெரியுமே! யாரும் எதுவும்

கேட்க வில்லை. என்ன நடக்க விருக்கிறதோ என்று அம்மாவும் நானும் விழித்துக்கொண்டிருந்தோம்.

என்னால் இதற்குமேல் எழுத முடியவில்லை அத்தான்! என்னவென்று இதை எழுதுவது! எழுதினால் நம்புவீர் களா அத்தான்! இதோ எழுதிவிடுகிறேன். புயல் வீசிய இடத்தில் அமைதி—துன்பம் குடி கொண்டிருந்த இடத்தில் இன்பம்—சாக இருந்த சமயத்தில் வாழ்வு. ஆமாம் அத்தான்! ஒரு மணி நேரத்துக்குமுன் அப்பா என்னை அன்போடு அழைத்தார். "அல்லி! உன் மனம் போலவே எல்லாம் நடக்கின்றன. அந்தப் போலீசு மாப் பிள்ளையின் தொடர்பு கத்தரித்துக் கொண்டது. இனி உனக்கு அவன் இல்லை. ஆனாலும், நாளைய பரியத்துக் காக எல்லாம் தயாராக இருப்பதால், அந்த நல்ல வேளையில், வேறு மாப்பிள்ளைக்கு உன்னை உறுதிப்பாடு செய்துகொடுக்க விரும்புகிறேன். அந்த மாப்பிள்ளை உன் அத்தான் அழகன்தான். ஆனால், முதலில் அவனை நானே நேரில்கண்டு அவனது விருப்பத்தைத் தெரிந்து கொண்ட பின்புதான், அவனுடைய பெற்றோர்களுக்குச் சொல்லியனுப்ப வேண்டும். ஆகவே, அவன் இப் பொழுது இங்கே வந்தாகவேண்டும். நான் சொல்லி யனுப்பினால் அவன் நம்பமாட்டான்—வரமாட்டான். எனவே, நான் வரச்சொன்னதாகக் கடிதம் எழுதியனுப்பு. இருட்டின பிறகு, தன் தாய் தந்தையருக்குத் தெரியாமல் புறப்பட்டு வரச்சொல்லி எழுதியனுப்பு. உடனே செய்."

என்று அப்பா என்னிடம் கனிவோடு—குழைவோடு, அன்போடு—பரிவோடு சொன்னார். அதைக் கேட்டதுமே இன்பத்தின் எல்லையை எட்டிவிட்டேன். ஆடினேன், பாடினேன், அகமிக மகிழ்ந்தேன். மாப்பிள்ளையாக

இன்றைக்கே அத்தானை வீட்டில் வரவேற்க வாய்ப்பு கிடைத்ததை எண்ணி எண்ணி இறுமாந்தேன். அத்தானுக்கு என்ன சிற்றுண்டி செய்துவைக்கலாம் என்று அம்மாவிடம் ஓடிக் கேட்டேன். அத்தான் காஃபி சாப்பிடுமா—டீ சாப்பிடுமா? அல்லது ஆர்லிக்சு கொடுக்கலாமா? ஓவல் பிடிக்குமா? என்று ஓயாது அம்மாவைத் தொண தொணத்தேன். அத்தான்! அழகாக உடுத்துக்கொண்டு, மாப்பிள்ளை கோலத்திலேயே வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நான் எப்படி அழகு செய்துகொள்ள? எந்த நிறச் சேலை கட்டிக்கொண்டால் அத்தானுக்குப் பிடிக்கும்? நேர் வாக்கு எடுத்துத் தலைவாரினால் பிடிக்குமா? கோணல் வாக்கு எடுக்கவா? இரட்டைப் பின்னல் போட்டால் அத்தானுக்கு நன்றாக இருக்குமா? அல்லது ஒற்றைப் பின்னல் போதுமா? மல்லிகைப் பூ சூடிக் கொள்ளவா? கதம்பம் வைத்துக்கொள்ளவா?

அப்பாவின் முன்னால் அத்தானை நான் எப்படி பார்ப்பேன்? எப்படி காஃபி கொடுப்பேன்? ஊகூம், எனக்கு வெட்கமாக இருக்கிறது. நான் அறையைவிட்டு வெளியே வரமாட்டேன். அத்தான் என்னைப் பார்க்க முடியாது. அம்மா கொடுக்கும் காஃபியைக் குடித்துவிட்டு, அப்பாவிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போக வேண்டியதுதான்.

இல்லையில்லை—நான் வெளியே வராவிட்டாலும், பலகணி வழியாக எப்படியாவது அத்தானைப் பார்த்து விடுவேன். அம்மாவைக் காஃபி போடவிடமாட்டேன். நான்தான் தயாரித்துக் கொடுத்தனுப்புவேன். நான் போடும் காஃபியைப் பற்றி அத்தான் என்ன

சொல்லுமோ! கற்பகம் போடும் காஃபி மாதிரியா அத்தானுக்கு என் காஃபி இருக்கும்?

அத்தான்! இருட்டினதும் சரியாய் ஏழுமணிக்கு வீட்டிற்கு வந்துவிடுங்கள். நான் சொன்னது நினைவிருக்கட்டும்—நன்ருக உடுத்துக்கொண்டு அழகாக ஆடம்பரமாக வரவேண்டும். உங்களைப் பார்த்ததும் அப்படியே அசர்ந்து போகவேண்டும்—நான் அல்ல—அப்பா. பார்ப்பதற்கு அவ்வளவு படாடோபமாக வரவேண்டும். ஆனல் கறுப்புக் கண்ணுடியை மாட்டிக்கொண்டு வந்துவிடாதீர்கள்—அப்போது வெய்யில் இருக்காது, இருட்டு நேரம்—அப்புறம் அப்பா கேலி பண்ணுவார்.

எழுதின வெல்லாம் நினைவிருக்கட்டும் அத்தான்! தயவுசெய்து உரிய நேரத்தில் தவருது வந்துவிடுங்கள். இந்த வேண்டுகோளை மறுக்கவோ—மறக்கவோ வேண்டாம். நீங்கள் வரப்போகும் திக்கையே நான் பார்த்துக்கொண்டிருக்கிறேன். வருக! வணக்கம்!

இப்படிக்கு,
**உங்கள் அல்லி.**

அல்லியின் நீண்ட கடிதத்தைப் படித்து முடித்தேன். அவளுடைய நல்ல வாய்ப்பை எண்ணி வியந்தேன்—மகிழ்ந்தேன். என்னையே மணந்து கொள்ள வேண்டுமென்று அவள் விரும்பினுள்—முயன்ருள்—வெற்றியும் பெற்ருள். நாங்கள் இருவரும் மணந்து கொள்ள என் தந்தையும் ஒத்துக்கொண்டார்—அவள் தந்தையும் ஒத்துக்கொண்டார். இரு துருவங்களும் இணைந்தன—கீரியும் பாம்பும் விளையாடத் தொடங்கி விட்டன—இரண்டு குடும்பங்களும் இணைந்தாயிற்று. எங்கள் திருமணமே முடிந்த மாதிரிதான்.

—நான் மிகவும் கவர்ச்சியாக உடுத்து அணி செய்து கொள்கிறேன். அல்லி வீட்டிற்குள் நுழைகிறேன். அத்தையும் மாமாவும் அரச வரவேற்பு தருகிறார்கள். அல்லியும் நானும் மேல் மாடிக்குச் செல்லுகிறோம். அவளை நான் முத்தமிட நெருங்குகிறேன். அவள் அகப்பட மாட்டேன் என்கிறாள்—தூணைச் சுற்றிச் சுற்றி ஆட்டங் காட்டுகிறாள்—துரத்திக் கொண்டேயிருக்கிறேன் நான். சிற்றுண்டி வருகிறது. ஊஞ்சலில் உட்காரவைத்து என் வாயில் ஊட்டுகிறாள் அல்லி. கொஞ்சுகிறோம்—குலவுகிறோம்—கூடிக் களிக்கிறோம்—

இவ்வளவும் இன்னும் நடக்கவில்லை—அத்தனையும் உருவெளித் தோற்றம்—அல்லியின் இல்லத்தை அடைவதற்கு முன்பே, நான் என்னையும் அறியாது காணும் பகற் கனவுகள். பகற்கனவு என்று இதற்கு முன்பு கேள்விப்பட்டிருக்கிறேன். அது இந்த இனம்தான் போலும்! 'என்ன தான் இருந்தாலும் இப்படியா பறப்பது?—கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டு போய்விடும்?' என்று என் மனத்துக்குச் சொல்லி அமைதி பண்ணிவைத்தேன்.

இனி நான் உண்மையாகவே புறப்பட்டாக வேண்டும். அல்லி வழிமேல் விழிவைத்து எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். நான் என்ன உடுத்துக் கொண்டால்—எப்படி அணிசெய்து கொண்டால் அவளுக்குப் பிடிக்கும்! கால்சட்டையும் மேல்சட்டையும் வெள்ளையாக இருக்கலாமா? வேறு நிறமுடையதாக இருக்கலாமா? கால் உறை மாட்டி 'பூட்சு' போட்டுக் கொள்ளவா? அல்லது வெறும் 'பஞ்சாப் சாண்டல்' போட்டுக்கொண்டால் போதுமா?

வேண்டாம், வேண்டாம். மாப்பிள்ளையாகப் போகிறேன் ஆதலால், வேட்டி கட்டிக்கொண்டு போவதுதான்

சிறப்பு. அருமையான சரிகை வேட்டி கட்டிக்கொண்டேன். பளபளப்பான பட்டு சட்டை போட்டுக்கொண்டேன். தோளின்மேல் வெண்பட்டு விசிறிமடி—கையில் கடிகாரம்—விரல்களில் மோதிரம்—முகத்திற்குச் செய்யவேண்டிய 'மராமத்து' எல்லாம் முன்னமேயே முடிந்துவிட்டன. போட வேண்டிய சோப்பெல்லாம் போட்டுச் சுரண்டித் தேய்த்துக் கழுவி, தடவ வேண்டியதெல்லாம் தடவி, பூசவேண்டியதெல்லாம் பூசியாய் விட்டது. இனி புறப்பட வேண்டியதுதான். புகைவண்டி நிலையம் வரையும் போய் உலாத்திவிட்டு வருவதாக அப்பா அம்மாவிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டும் விட்டேன்.

இருட்டி விட்டது. மாமா வீட்டை நெருங்கினேன். அல்லியின் தம்பியும் தங்கையும் தெருவாயிற்படியில் என்னைக் கண்டதும், அத்தான் வருகிறது—அத்தான் வருகிறது என்று 'பராக்' போட்டுக்கொண்டே 'பைலட்' போல் உள்ளே ஓடினார்கள். நான் வருவதை அறிந்து கொள்வதற்காக அல்லி செய்து வைத்துக்கொண்ட 'சிக்னல்' ஏற்பாடாக இருந்தாலும் இருக்கலாம் இது! மாமியார் வீட்டுக்கு மருவுண்ணப் போகும் மாப்பிள்ளையாகவே என்னை நினைத்துக்கொண்டு உள்ளே நுழைந்தேன். ஒரே அமைதி!

மாமா கூடத்தில் நாற்காலியில் அமர்ந்திருந்தார். பாட்டி ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். அத்தை மாமாவின் பக்கத்தில் ஒரு தூணில் சாய்ந்துகொண்டு நின்றிருந்தார்கள். அல்லி இருக்குமிடமே தெரியவில்லை.

என்னைக் கண்டதும், 'வா தம்பி!' என்று அன்பு ததும்ப அத்தை அழைத்தார்கள். 'வாடா அழகா' என்ற

குரல் பாட்டியிடமிருந்து வந்தது. 'வாங்க மாப்பிள்ளை !' என்று அதட்டுவதுபோல் மாமா அழைத்தார்.

'வாங்க மாப்பிள்ளை' என்று மாமா அழைத்ததும் என் வெட்கத்துக்கு அளவேயில்லை. அவர் இதற்கு முன்பு என்னை வாடா போடா என்றுதான் அழைப்பது வழக்கம். இப்போதோ 'வாங்க' என்று உயர்வுப் பன்மையில் அழைத்திருக்கிறார். என்னை இளமையிலிருந்தே பெயர் சொல்லியே அழைத்துப் பழக்கப் பட்டவர், இப்போது 'மாப்பிள்ளை' என்று முறை கொண்டாடி அழைத்திருக்கிறார். அதைக் கேட்டதும் நான் கூச்சப்படாமல் எப்படியிருக்க முடியும்? நங்கையரைப் போல நாணிக் கோணி வளைந்து தயங்கி மயங்கி நின்றேன். ஒரு நாற்காலியைக் கொண்டு வந்து, 'உட்காரு தம்பி' என்று சொல்லி அத்தை உட்கார வைத்தார்கள்.

ஏண்டா அழகா! பட்டணத்திலேயா படிக்கிறாய்?' என்று பாட்டி கேட்டாள். நான் பதில் சொல்வதற்கு முன்பு, 'ஆமாம், மாப்பிள்ளை பட்டணத்தில்தான் படிக்கிறார்; இப்போது திருமணம் செய்துகொண்டு போவதற்காகக் கல்லூரியை விட்டு வந்திருக்கிறார்' என்று மாமா சொன்னார். 'அவர் இவர்' என்று எனக்கு மதிப்பு கொடுத்து மாமா சொல்லச் சொல்ல எனக்கு என்னவோபோல் இருந்தது. மாமா இப்பொழுதே இவ்வளவு மதிப்பு கொடுக்கிறாரே—மகளைக் கொடுத்து விட்ட பிறகு இன்னும் எவ்வளவு மதிப்பு கொடுப்பாரோ என்று மலைத்தேன்—மகிழ்ந்தேன்.

"ஏன் மாப்பிள்ளை! அல்லியைக் கட்டிக்கொள்ள நீங்கள் மிகவும் ஆசைப்படுகிறீர்களாமே, உண்மை

தானு?" என்று மாமா கேட்டார். நான் அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டே வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டேன். "உங்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கட்டாயம் கொடுத்து விடுகிறேன் மாப்பிள்ளை! ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று மறுபடியும் மாமா சொன்னுர்.

அப்போது அத்தை காஃபி எடுத்துக்கொண்டு வந்து, 'இந்தா தம்பி! இதைச் சூடாகச் சாப்பிடு' என்று நீட்டினுர்கள். "இரு இரு! நீ கொடுக்காதே! நான் சூடாகக் கொடுக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே மாமா எழுந்து வந்து, என் இரு கன்னங்களிலும் பளீர் பளீர், பளீர் பளீர் என்று மாறி மாறி அறைந்தார். "அல்லி யாடா வேண்டும் உனக்கு அல்லி, அயோக்கியப் பயலே! காதலாம் காதல் கழுதைப்பையனுக்கு" என்று சொல்லிக்கொண்டே காலால் எட்டி எட்டி உதைத்தார் கழுதை மாமா. எனக்கு ஒன்றுமே ஓடவில்லை.

ஐயோ, அடிக்காதீர்கள் அடிக்காதீர்கள் என்று அத்தை அலறினுர்கள். வேண்டாமடா வேண்டாமடா என்று பாட்டி பதைபதைத்தாள். இதை எப்படியோ அறிந்து கொண்ட அல்லி, கூட்டை விட்டு விண்ணென்று வெளியே புறப்பட்ட புருவைப்போல எங்கிருந்தோ சுழன்று ஓடிவந்தாள்; "அப்பா அப்பா! இதற்குத்தானு வஞ்சகமாக வரச்சொன்னீர்கள்? ஒன்றும் செய்யா தீர்கள் அத்தானை" என்று ஓலமிட்டாள். ஒரே அழுகை.

அழுவதா—அந்த இடத்தை விட்டு ஓடிவிடுவதா? எனக்கு ஒன்றும் புரியவில்லை. செய்வதறியாது திகைத்தேன். கண்கள் கலங்கின—மானக்கேட்டால் முகம் வெளுத்தது — கைகால்கள் நடுங்கின — எண் சாண் உடம்பும் ஒருசாண் உடம்பாகக் குன்றிப்போய் விட்டது

அல்லியை ஏறெடுத்துப் பார்க்க வெட்கமாய் இருந்தது. என்னை அழைத்த குற்றத்திற்காக வருந்தி மன்னிப்பு கேட்பவள்போல், அவள் ஏக்கத்துடன் என்னை நோக்கினாள். நானோ சாகாமல் செத்துக்கொண்டிருந்தேன்.

இந்த நிலையில், "இவனை வெறுங்கையால் அடித்தால் பெருமை பெற்று விடுவான்; இந்த நாயைச் செருப்பால் அடிக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே ஓடி ஒரு செருப்பைக் கையில் எடுத்துக் கொண்டு வந்தார் மாமா.

என் சிந்தனை வேலை செய்யத் தொடங்கிற்று. அவரோ பெரியவர்; அம்மானுக்கு அம்மான்; அத்தை கணவனுக்கு அத்தை கணவன். அவரை மன்னிப்பதா— எதிர்ப்பதா? அதாவது, மாமாவிடம் செருப்படி படுவதா அல்லது அதே செருப்பைப் பிடுங்கிக் கொண்டு அவரை அடிப்பதா? என் இளமைக்கும் வன்மைக்கும் ஒரு குத்து விட்டால் மாமா மல்லாந்து விடுவார். அதிலும் மனவெழுச்சி தோன்றி விட்டால் மதயானையின் ஆற்றல் வந்துவிடும். உளநூல் படித்து இதைத் தெரிந்து கொண்டிருந்தேன் — இப்போது அநுபவத்திலேயே இதை ஒத்திட்டுப் பார்த்து விடலாமா என்று எண்ணினேன்.

பொறுமையின் பெருமையும், மன்னிப்பதின் மாண்பும் என் நினைவிற்கு வராமல் இல்லை. 'தோண்டுபவர்களையும் தாங்கும் நிலம்போல, துன்புறுத்துபவர்களைப் பொறுத்துக் கொள். துன்பம் செய்தவர்களை மன்னிப்பது மட்டுமல்ல, மேலும் அவர்களுக்கு இன்பம் செய்' என்ற வள்ளுவரின் வாய்மொழிகள் சில விநாடிகளே

என் உள்ளத்தை வெல்ல முடிந்தது. மாமாவின் செருப்படி நெருங்க நெருங்க, மான உணர்வு அலைகடலெனப் பொங்கிற்று.

அடிக்க வந்த மாமாவின் செருப்புக் கையை என் இடக்கையால் தடுத்து, வலக்கையால் அந்தச் செருப்பைப் பிடுங்கிக்கொண்டு அவரை அடிக்க ஓங்கினேன். 'அப்பாவை அடிக்காதீர்கள் அத்தான்—அப்பாவை அடிக்காதீர்கள்' என்று சொல்லிக்கொண்டே அல்லி என் கையைப் பிடித்துக் கொண்டாள். எனக்கும் மனம் மாறிவிட்டது. மாமாவை நோக்கி இரக்கப்பட்டேன்.

'என்னையாடா அடிக்க வந்தாய்? தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டோம் என்ற திமிரா?' என்று சொல்லி, எண்ணெயில் போட்ட பண்ணியம்போல் மாமா குதித்தார். 'யாரங்கே? ஓடிவாருங்கள்!' என்று உரக்கக் கூவி யாருக்கோ குரல் கொடுத்தார். உடனே தெருப்பக்கத்திலிருந்து இரண்டு குண்டர்களும், தோட்டத்துப் பக்கத்திலிருந்து இரண்டு முண்டர்களும் ஓடிவந்தார்கள். நான் எதிர்த்து அடிக்காமல் இருப்பதற்காகவும், தெருப்பக்கமாகவோ—தோட்டத்துப் பக்கமாகவோ ஓடி வெளியேறி விடாமல் இருப்பதற்காகவும் மாமா செய்து வைத்த முன்னேற்பாடுபோலும் இது?

'இவனைப் பிடித்துத் தூணில் கட்டுங்கள்!' என்று மாமா அவர்களுக்கு ஆணையிட்டார். கயிற்றுடன் நால்வரும் என்னை நெருங்கினர். 'முண்டனுக்கு இரண்டு ஆள்' என்பார்கள். நான்கு தடியர்களிடம் நான் ஒருவன் என்ன செய்ய முடியும்? அவர்கள் என்னைக் கட்டிப் பிடித்தார்கள். என் வன்மை கொண்ட மட்டும் திமிறி உதறினேன். கையால் குத்து குத்து என்று குத்தினேன்

—காலால் உதை உதை என்று உதைத்தேன். இருந்தாலும் என்னல் முடியுமா? நாடகமா இது, ஒருவன் நூறுபேரைக் கொல்ல! நாடகத்தில், கதைத் தலைவன் வலக்கையை நீட்டிஞலே அந்தப் பக்கம் ஐம்பது பேர் விழுந்து செத்துப்போவார்கள்—இடக்கையை நீட்டிஞல் இந்தப் பக்கம் ஐம்பது பேர் விழுந்து இறந்து போவார்கள். அது நாடக 'தருமம்.' ஆனல் நானே நன்ருக அகப்பட்டுக் கொண்டேன். என்னைப் பிடித்துக் கூடத்துத் தூணில் இறுகக் கட்டி விட்டார்கள்.

'நீங்கள் அடித்தாலும் அடியுங்கள், அவர்களை விட்டு அடிக்கவைக்காதீர்கள் அப்பா! நீங்களும் அடிக்காதீர்கள்!' என்று அல்லி தன் தந்தையின் காலில் விழுந்து கெஞ்சிஞள். அத்தையும் பாட்டியும் அவரை வைது கொண்டே யிருந்தார்கள்.

அந்த நான்கு கைக் கூலிகளையும் மாமா மறுபடியும் பழைய இடத்திற்கு அனுப்பி, 'பாரா உஷார்' பார்த்துக் கொள்ளச் செய்தார். பிறகு மாப்பிள்ளைக்கு மரியாதை செய்யத் தொடங்கிஞர். 'என்னையாடா செருப்பால் அடிக்கப் பார்த்தாய்? என் மகளா உனக்கு வேண்டும், மானங்கெட்ட பயலே' என்று சொல்லி, என் முகத்தில் காறிக் காறித் துப்பிக் கும்பாபிடேகமே செய்து விட்டார். கீழே விழுந்து கிடந்த செருப்பை எடுத்து, என் தலை மேலே அடி அடி என்று அடித்தார். காளத்தியப்பனுக்குக் கண்ணப்பர் இப்படித்தான் செய்தாராம். செருப்புக் கால்களால் உதைத்தாராம்—வாயிலிருந்து நீரை உமிழ்ந்து அப்பனைத் திருமுழுக்கு ஆட்டிஞராம். எனக்கு வாய்த்த கண்ணப்பரோ, இவ்வளவு போதாதென்று, இடுப்பில் கட்டியிருந்த வார்ப்பட்டையை

அவிழ்த்துக்கொண்டு, என் உடம்பு முழுவதும் வாங்கு வாங்கு என்று வாங்கிக்கொண்டிருந்தார்.

வலி பொறுக்க முடியாது துடிதுடித்தேன். வாய் விட்டு அழ மானம் இடந்தரவில்லை. ஈ, எறும்பு மொய்க் காது என்னை வளர்த்த அன்னையையும், மனங்கோணது கேட்டவையெல்லாம் வாங்கித் தந்து வளர்த்த தந்தை யையும் நினைத்து நினைத்து நெஞ்சம் பிளந்தேன். அவர் களிடம் சொல்லியிருந்தால் அனுப்பி யிருக்கமாட்டார்கள் —இந்த நிலை எனக்கு நேர்ந்திராது—என்ன செய்வேன்! யாரிடம் சொல்வேன்! பெற்றோரைப் புறக்கணித்து மறைத்து வஞ்சிக்கும் பிள்ளைகளின் நிலை இதுதான் போலும்!

இன்னும் மாமா விட்டாரில்லை. "ரயிலிலிருந்து நேரே எங்கள் வீட்டிற்கு வந்து, நாங்கள் இல்லாத சமயத்தில் அல்லியிடம் பேசி மயக்கிவிட்டுப் போனு யாமே? நீயும் உன் அப்பனும் சேர்ந்துகொண்டு, நாளைக்கு நடக்கவிருந்த பரியத்தைக் குருசாமி மூலம் கலைத்து விட்டீர்களாமே! அங்கிருந்து வந்தவர் எல்லாம் எனக்குச் சொன்னர். போதாக்குறைக்கு, விழாவின்போது, மலையடிவாரத்து மரச்செறிவிலே அல்லியை நீ தனியாகக் கண்டு காதல் விளையாட்டு விளையாடினுயாமே! உங்களைத் தற்செயலாகப் பார்த்து விட்ட என் நண்பர் ஒருவர் காலையில் வந்து இந்தச் செய்தியைச் சொன்னர். என் மானமே போய்விட்டது. நான் எப்படியடா வெளியில் நடமாடுவது? உன்னைக் கொன்ருலும் என் சினம் தீராது" என்று சொல்லிச் சொல்லி மாமா என்னை மேலும் மேலும் தாக்கிக் கொண்டே யிருந்தார்.

வேதனை தாங்கமுடியவில்லை—வெம்பினேன்—வெய்துயிர்த்தேன். மயக்கம் வருவதுபோல் தலை சுற்றிற்று. கண்கள் இருண்டன. நிமிர்ந்திருந்த தலை சோர்ந்து தொங்கிவிட்டது. அதன் பிறகுதான் மாமா அடிப்பதை நிறுத்தினார். இறந்துவிடுவேனோ என்னவோ என்று அஞ்சி விட்டுவிட்டிருப்பார் போலும்! அத்தையும் அல்லியும் கத்தி எடுத்துக்கொண்டுவந்து கயிற்றை அறுத்து, கட்டிலிருந்து என்னை விடுவித்தார்கள். நான் துவண்டு சுருண்டு கீழே விழுந்துவிட்டேன். அதன் பிறகு என்ன நடந்ததென்று எனக்குத் தெரியாது.

சிறிதுநேரம் சென்றிருக்கும்—விழித்துப் பார்த்தேன். அத்தையின் மடிமேல் என் தலை இருந்தது. கால் மாட்டில் பாட்டி அமர்ந்து பரிவுடன் தடவிக்கொண்டிருந்தாள். அல்லி என்னென்னவோ எனக்குச் செய்து கொண்டிருந்தாள். 'முதல் உதவி' செய்யும் முறையை அவளுக்குப் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொடுத்திருந்தார்கள். அது இப்போது பயன் தந்திருக்கிறது. மனக் கலக்கங் கொண்ட மாமா, இவற்றையெல்லாம் கண்டும் காணாததுமாய் மலைபோல் நாற்காலியில் சாய்ந்திருந்தார்.

அல்லி காஃபி எடுத்துக்கொண்டுவந்து குடிப்பாட்ட முயன்றாள். அந்தநேரத்தில் அவர்கள் வீட்டுக் காஃபி என் உள்ளே இறங்குமா? அவ்வளவு மானங்கெட்டவளா நான்? அத்தனை சூடு சுரணை இல்லாதவளா நான்? அல்லியின் கையை எத்தி, காஃபியை இடறித்தள்ளி விட்டேன். அது மாமாவின் முகத்தில் அடித்தது.

மெள்ள எழுந்து உட்கார்ந்தேன். அத்தையின் கலக்கத்துக்கு அளவேயில்லை. என் வீட்டில் பிறந்து

பெண் அல்லவா அவர்கள்? தாய் வீட்டிலிருந்து ஒரு நாய்க்குட்டி வந்தாலும், அதைத் தம் பிள்ளையினும் பெரிதாகப் பெண்கள் போற்றுவார்களே!

“உடம்பு எப்படி கண்ணு இருக்கிறது? நீ ஏன் இங்கே வந்தாய்? உனக்கு மாமா குணம் தெரியாதா? உன் அம்மாவும் அப்பாவும் உன்னைத் தவங்கிடந்து பெற்றார்களே! ஒரே ஓர் ஆண்பிள்ளை என்று செல்வமாக வளர்த்தார்களே—இங்கே வந்து சீரழிந்து விட்டாயே, செல்வமே! ஐயோ, அண்ணனுக்கும் அண்ணிக்கும் நான் என்ன பதில் சொல்வேன்! யாது செய்வேன்! அவர்கள் கேள்விப்பட்டால் துடித்துச் செத்துவிடுவார்களே!” என்று அத்தை அழுது புலம்பினார்கள்.

அல்லியோ, தன் கணவன் கோவலனுக்காகப் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் வழக்கிட்டு வாதாடிய கண்ணகியைப் போல, ஏதேதோ சொல்லம்புகளால் தன் தந்தையைத் தாக்கிக்கொண்டிருந்தாள். இடித்த புளிபோல் இருந்தார் அவர். பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாதல்லவா?

நான் மெள்ள எழுந்து நின்றேன். அத்தையும் அல்லியும் இருபக்கமும் தாங்கிக்கொண்டே கூட எழுந்து நின்றார்கள். எங்கள் வீட்டை நோக்கிப் புறப்பட்டேன்.

“மாமா அடித்துவிட்டதாக அப்பாவிடமும் அம்மாவிடமும் சொல்லாதே அழகா! அடிபட்ட காயத்தைப் பார்த்து அவர்கள் கேட்டால், நடுத்தெருவில் நடந்துகொண்டிருந்த பொழுது ஆரோ அடித்துவிட்டதாகச்

சொல்லு என்றைக்கிருந்தாலும் அல்லி உனக்குத் தான்! மாமா உன் மாமனுர்தான்! அதனுல் அவரை இப்போது உன் பெற்ருேரிடம் காட்டிக்கொடுக்காதே! பிறகு பெரிய போரே மூண்டுவிடும்—இரண்டு குடும்பங்களுமே தொலைந்துபோகும்! தயவுசெய்து என் வேண்டுகோளைப் புறக்கணிக்காதே அழகா" என்று உருக்கமாக அத்தை வேண்டிக்கொண்டார்கள். 'ஆமாம் அத்தான்!' என்று அல்லியும் பின்பாட்டு பாடினுள். கடுங்காவல் தண்டனைபெற்ற அந்தச் சிறைக்கூடத்திலிருந்து ஒருவிதமாக வெளியே வந்தேன்.

நடக்க முடியவில்லைதான். குடிகாரனைப்போலத் தள்ளாடித் தள்ளாடி நடந்து போனேன். எதிரே வருபவர்கள் என் நிலைமையைப் புரிந்துகொள்ளாதபடி நடித்துக்கொண்டே நடக்க வேண்டியதாயிற்று. எதிரியின் வாள் வீச்சுக்குத் தாக்குப் பிடிக்க முடியாமல் புறமுதுகிட்டு ஓடிவரும் வேந்தனைப்போலே, வெட்கம் பிடுங்கித் தின்ன வெலவெலத்து வீட்டிற்குள் புகுந்தேன்.

நல்லவேளை—முன்கட்டில் யாரும் இல்லை. புது நாட்டாண்மைக்காரர் ஆதலால், ஊர்க் காரியங்களைக் கவனிப்பதற்காக அப்பா குமரக்கோட்டம் சென்றிருந்தார். படிப்புக்காகப் பட்டணத்திற்குச் செல்லவிருக்கும் எனக்குக் கொடுத்தனுப்புவதற்காக அம்மாவும் கற்பகமும் அடுப்பங்கரையில் சிற்றுண்டி வகைகள் செய்து கொண்டிருந்தார்கள். நான் யாருக்கும் தெரியாமல் படுக்கையறைக்குள் நுழைந்தேன்; இறுகப் போர்த்திக் கொண்டு கட்டிலின்மேல் படுத்துக்கிடந்தேன்.

அறையில் என்னவோ எடுக்கவந்த 'யார் படுத்திருக்கிறது? அண்ணவா!' ...த்

தாள். பதில் கிடைக்கவில்லை. 'இதற்குள்ளாகவா தூங்கிவிட்டாய்? வெளியே யிருந்தாயே! எப்போது அண்ணா வந்தாய்? ஏன் சாப்பிடாமல் படுத்துக்கொண் டாய்?' என்று கேட்டபடியே கிட்டே வந்தாள். இதற்கும் நான் அசையவில்லை. தூங்குபவனை எழுப்ப லாம்—விழித்துக் கொண்டிருப்பவனை எழுப்ப முடியுமா? அதிலும் வேதனைப்பட்டுக்கொண் டிருப்பவனை எழுப்பவே முடியாதே! "தூங்குகிறாயா அண்ணா?" என்று மேலே கையை வைத்துக் கற்பகம் எழுப்பினாள். நான் என்னையும் அறியாமல் 'ஆ—ஊ' என்று கூவிக் கொண்டே நெளிந்தேன். "ஏன் அண்ணா என்னவோ போல் நெளிகிறாய்? உடம்புக்கு என்ன?" என்று கேட்டாள். அடிபட்ட தழும்பின்மேல் அவள் கை பட்டதும், உயிர் போவது போல் வலி எடுத்தது எனக்கல்லவா தெரியும்! 'உடம்புக்கு ஒன்றுமில்லை கற்பகம்! ஏதோ கனவு கண்டு பிதற்றி யிருக்கிறேன்; நீ போய் வேலையைக் கவனி' என்றேன். சாப்பிட வர வில்லையா என்றாள். எனக்குச் சாப்பாடு வேண்டாம், நீ போ என்றேன். ஏன் வேண்டாம் என்றாள். 'வேண்டாம் என்றால் வேண்டாம்! போ என்றால் போய்த் தொலை யேன். ஏன் உயிரை வாங்குகிறாய்!' என்று எரிந்து விழுந்தேன். மாமாவிடம் வாங்கிக் கட்டிக்கொண்ட வயிற்றெரிச்சலைக் கற்பகத்திடம் கொட்டி ஆற்றினால் அவள் என்ன பண்ணுவாள்! அடுப்பங்கரைக்கு ஓடியே விட்டாள்.

சிறிது நேரத்தில் அம்மாவும் அப்பாவும் புடைசூழ்ந்து வர, கற்பகம் மீண்டும் படையெடுத்து வந்தாள். அவள் அம்மாவி[illegible] சாப்பாடு வேண்டாம் என்று நான் படுத் திருக்கி[illegible] சொல்லியிருக்கிறாள்; அதற்குள் வெளியே போயி[illegible]வும் வந்துவிட்டிருக்கிறார். இப்படி யாக[illegible]றுகையிட்டுக் கொண்டார்கள்.

'உடம்புக்கு என்னடா அழகா? ஏன் இதற்குள் போர்த்திக்கொண்டு படுத்துவிட்டாய்?' என்று அப்பா கேட்டார். 'சாப்பாடே வேண்டாம் என்றுயாமே!' என்று அம்மா கரைந்தார்கள். உலாத்தச் சென்றிருந்தபோது, புகைவண்டி நிலையத்திலுள்ள உணவுக்கடையில் நான் நண்பர்களுடன் சிற்றுண்டி அருந்தினேன்; அதனால் பசி இல்லை. நேற்று தேர்தல் வேலை பார்த்ததாலும், விழாவிற்காக வெகுநேரம் பாடுபட்டதாலும் உடம்பு அலுப்பாயிருக்கிறது; அதனால் சீக்கிரம் படுத்துக்கொண்டேன். எனக்கு ஒன்றும் வேண்டாம். நீங்கள் போய்ச் சாப்பிட்டுவிட்டுப் படுங்கள்" என்று சமாளித்தேன். "நான் மேலே கை வைத்ததும், 'ஆ—ஊ' என்று அண்ணன் கத்திற்று. ஏன் என்று கேளுங்கள்" என்று கற்பகம் வத்தி வைத்தாள். 'ஏன், சுரம் அடிக்கிறதா?' என்று கேட்டுக்கொண்டே, அம்மாவும் என் உடம்பின்மேல் கை வைத்துத் தடவினார்கள். நான் வாய் திறந்து கத்தாமல் உள்ளேயே சாம்பி, அப்படியும் இப்படியும் நெளிந்து கொடுத்தேன். 'ஏதோ தழும்புபோல் தட்டுப்படுகிறதே! என்ன இது? ஏதாவது காயமா?' என்று ஓர் இடத்தைச் சுட்டிக்காட்டி அம்மா கேட்டார்கள். எங்கேயாவது விழுந்து விட்டாயாடா?' என்று அப்பா அடி எடுத்துக் கொடுத்தார். "ஆமாம் அப்பா—ஆமாம் அப்பா! நானும் என் நண்பனும் சைக்கிளில் போனோம் —வழியில் ஓரிடத்தில் வழுக்கி வண்டியோடு விழுந்து விட்டோம். கீழே கற்கள் நீட்டிக் கொண்டிருந்ததால் உடம்பில் சில இடங்களில் கீறிவிட்டன" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டேன். "பொழுது போன பிறகு புகைவண்டி நிலையத்துக்கு ஏன் போனீர்கள்? சரி சரி தூங்கு!" என்று சொல்லிக்கொண்டே அப்பா

அகன்றார். கற்பகம் அப்பொழுது செய்திருந்த தின் பண்டம் ஒன்றைக் கொண்டுவந்து கையில் தந்தாள். வேண்டாம் என்று சொல்லாமல், படுத்தபடியே அதை வாயில் போட்டுக் குதப்பினேன். அடுத்து, அம்மா கொண்டுவந்த பாலையும் குடித்து வைத்தேன். அதன் பிறகுதான் அவர்கள் இருவருக்கும் நிறைவு ஏற்பட்டது போலும்! முற்றுகை தளர்ந்தது. தனியாக விடப் பட்டேன்.

எனக்கு ஏது தூக்கம்! அப்பா விடும் குறட்டை நன்கு கேட்கிறது. நேரம் ஆக ஆக, எனக்கு உடம்பில் வேதனையும் பெருகிக் கொண்டே யிருந்தது. காதல் தந்த பரிசல்லவா? எவ்வளவோ விழிப்புடன் இருந்தும், நீந்தத் தெரிந்திருந்தும் எப்படியோ சுழலில் சிக்கிக் கொண்டேனே! அந்தச் சுழலோ, அடித்துக்கொண்டும் போகாமல், கரையும் ஏற்றிவிடாமல் தனக்குள்ளேயே சுற்றவைத்துத் திக்குமுக்காடச் செய்கிறது. பெற்றோர் அறியாமல் பெண் வீட்டிற்குச் செல்லும் பேதைகளுக்கு—இல்லை—பேடிகட்கு என் எடுத்துக்காட்டு ஓர் அறை கூவல் போலும்! நெஞ்சப் பாறையில் எண்ணங்கள் அலைமோதிச் சிதைந்து சிதறிக் கொண்டிருந்தன. இந்த இடத்தில் உள்ளத்துக்கு ஓய்வு ஏது—உறக்கம் ஏது? பத்து—பதினொன்று—பன்னிரண்டு எனக் கடிகாரம் அடித்த மணிகளையெல்லாம் எண்ணிக்கொண்டே யிருந் தேன். நள்ளிரவு கடந்த பின் இரவில் அயர்ந்து உறங்கி யிருக்கிறேன்.

காலையில் கதிரவன் காயத் தொடங்கிய பிறகே படுக்கைவிட் டெழுந்தேன். அப்பா வைகறையிலேயே எழுந்துவிடுவது வழக்கம். சில நாட்களில் ஆற்றுக்குப் போய்க் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு வருவார்.

நான் படுக்கைவிட் டெழுந்தபோது அப்பா வீட்டில் இல்லை. அவர் வெளியிலிருந்து மீண்டும் வீட்டிற்குள் நுழைந்தபோது, நான் உடம்பைப் போர்த்தியபடியே பல் துளக்கிக்கொண் டிருந்தேன். அவர் முகத்தில் கோபக் கனல் கொழுந்துவிட் டெரிந்தது. வாயிலிருந்து கடுஞ்சொற்கள் தீப்பொறிகளாகப் பறந்து வந்தன.

"ஏண்டா இன்னும் போர்த்திக்கொண் டிருக்கிறாய்? உள்ளதைச் சொல், உடம்பில் என்ன காயம்?"

"இராத்திரிதான் சொன்னேன் அப்பா, சைக்கிளிலிருந்து விழுந்துவிட்டேன் என்று."

"தெரியுமடா திருட்டுப் பயலே! எவன் அடித்து அனுப்பினான்?"

"அடித்தா? என்னையா?"

"இன்னுமா மறைக்கிறாய்? இராத்திரி உன் மாமன் உன்னை வீட்டில் கட்டிவைத்து அடித்தானா இல்லையா?"

"மாமனா! அவர் ஏன் என்னை அடிக்க வேண்டும்? நான் ஏன் அங்கே போகிறேன்?"

"நானும் அதுதான் கேட்கிறேன். எனக்குத் தெரியாமல் நீ ஏன் அங்கே போனாய்?"

"நான் போகவில்லை அப்பா! யார் சொன்னது?"

"எல்லாம் எனக்குத் தெரிந்து விட்டதடா! நான் ஆற்றுக்குப் போயிருந்தபோது, நான் இருப்பது தெரியாமல் ஒரு மரத்துக்கு அப்பால் இருவர் பேசிக் கொண்டிருந்தனர். அதாவது, உன்னைப் பிடித்துத் தூணில் கட்டிய நால்வருள் ஒருவன் தன் நண்பன் ஒருவனிடம் நடந்த கதையெல்லாம் சொல்லிக்கொண்

டிருந்தான். அது உன் கதையேதான். சிறிதும் ஐயமில்லை. இப்போது என்ன சொல்லுகிறாய்?"

"யாரோ பேசிக்கொண்டிருந்த எதையோ கேட்டு விட்டு என்னை மிரட்டுகிறீர்களே! அவர்கள் யாரைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்களோ."

"இன்னுமா ஒத்துக்கொள்ள மாட்டேன் என்கிறாய்? எதிர்கால மாமனார் அல்லவா? நீ எப்படி மாயாண்டியைக் காட்டிக்கொடுப்பாய்? அவன் உதைத்துமா உனக்குப் புத்தி வரவில்லை? உள்ளதைச் சொல்லி விடு!"

"அப்படி எதுவும் நடக்கவில்லை யப்பா!"

"சரி, நீ சொல்ல வேண்டாம். பெற்றவனுக்கு மறைக்கிற பிள்ளையின் தகப்பனை யிருப்பதைவிட மறைந்து விடுவது மேல். நான் எங்கேயாவது போய் ஒழிந்து விடுகிறேன். நீ மாயாண்டி மகளைக் கட்டிக் கொண்டு, அவன் காலடியில் விழுந்து கிட!"

"அப்படிச் சொல்லாதீர்கள் அப்பா! நான் இருக்கும் போது நீங்கள் எங்கேயும் போக வேண்டாம்.. நான் உள்ளதைச் சொல்லி விடுகிறேன்."

என்று சொல்லி நடந்த நிகழ்ச்சிகள் அத்தனையும் அப்பாவிடம் விவரமாகச் சொன்னேன். நான் ஒத்துக் கொண்டால் அவரது சினம் அடங்கும் என்று எண்ணி னேன்; அதற்குப் பதிலாக அதிகப்பட்டு விட்டது.

"சரி, சரி, நான் அவனைப் பார்த்துக் கொள்ளு கிறேன். அவன் வீட்டுப் பரியத்தை நான் நிறுத்தியது—அவனைத் தேர்தலில் தோற்கடித்தது—எல்லாவற்றையும் நினைத்துக்கொண்டு அவன் உன்னைப் பழிவாங்கி

யிருக்கிறன். இருக்கட்டும்—நான் அவனைப் பழிக்குப் பழி வாங்காவிட்டால் என்பெயர் அம்பலவாணன் அல்ல."

"வேண்டாமப்பா வேண்டாம். மாமாவை மன்னித்து விடுங்கள். என்றைக் கிருந்தாலும் நீங்கள் இருவரும் மைத்துனர்கள் தானே. இனியும் முட்டி மோதிக் கொள்ளாமல், இதோடு விட்டு விடுங்கள். நம் மாமாதானே என்னை அடித்தார். நான் உங்களை அறியாமலும் அவரை அறியாமலும் அல்லியை விரும்பினேன். என் குற்றத்திற்கு ஏற்ற தண்டனை கிடைத்து விட்டது. இனிமேல் நான் இதுபோன்ற காரியங்களில் ஈடுபட மாட்டேன். இதை இனி மறந்து விடுங்கள் அப்பா".

"மறந்து விடுவதா! நீ செய்த குற்றத்துக்கு அவன் தண்டனை கொடுத்தான். அவன் செய்த குற்றத்துக்கு நான் அவனுக்குத் தண்டனை கொடுக்க வேண்டு மல்லவா!" என்று சொல்லி அப்பா தோட்டத்துக்குப் போனர். இதை யறிந்த அம்மாவும் கற்பகமும் அலறித் துடித்தார்கள்—அழுது புலம்பிக் கண்ணீர் வடித்தார்கள். என் காயங்களில் ஏதேதோ தடவினர்கள். உடம்புக்கு ஒத்தடம் கொடுத்தார்கள். வாய்ச்சண்டை போட்டுக் கொள்பவர்கள் 'உடம்பு ஒத்தடம் கேட்கிறதா?' என்று ஒருவரை யொருவர் விடைப்பது உலகியல். அந்த 'வைபவம்' இப்பொழுது எனக்கு நடந்தே விட்டது.

கொஞ்ச நேரத்தில் குல்லூகபட்டர் குருசாமி வந்தார். இன்றைக்கு நடக்கவிருந்த பரியம் நின்று விட்டது—இனி ஆகவேண்டிய காரியத்தைக் கவனிக்க வேண்டுமென்று அப்பாவுக்கு நினைவு படுத்தினர். "கலிங்கநத்தம் மாப்பிள்ளை வீட்டிற்குச் சென்று,

முத்தைய முதலியாரைச் சந்தித்து, கற்பகத்துக்கும் இன்சுபெக்டர் பாண்டியனுக்கும் என்றைக்குப் பரிய விழா செய்யலாம் என்று நாள் குறித்து வா!" என்று சொல்லி அப்பா குருசாமியை அனுப்பிவைத்தார்.

அன்று பகலெல்லாம் அப்பா அதிகம் வீடு தங்க வில்லை. என்னவோ ஏற்பாடு செய்துகொண்டிருப்பவர் போல் தோன்றியது. நாட்டாண்மைக்காரர் ஆதலால், ஊர்க்காரியம் ஏதோ பார்க்கிறார் என்று நாங்கள் எண்ணிக்கொண் டிருந்தோம்.

அன்று முன்னிரவு ஒன்பது மணியளவில் ஒரு முரடன் வீட்டிற்கு வந்து அப்பாவிடம் வெற்றி விருதுகள் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போனான். அவர்களின் பேச்சைக் கொண்டு, நடந்ததை நன்றாக நான் விளங்கிக் கொண்டேன்.

அப்பாவின் ஏற்பாட்டின்படி, பத்துப் பதினைந்து குண்டர்கள் இருட்டினதும் மாமா வீட்டிற்குச் சென்று அவரைத் தாக்க முயன்றிருக்கிறார்கள். இதை ஏற்கெனவே எதிர்பார்த்த மாமா, முன்கூட்டியே தாமும் பத்துப் பன்னிரண்டு ஆட்களைத் தயார்பண்ணி வைத் திருக்கிறார். இருதரப்பினரும் கை கலக்கக் கடும்போரே நடந்திருக்கிறது. வெற்றி தோல்வி யார் யாருக்கோ!

அப்பாவும் மாமாவும் பகைத்துக் கொள்ள, அவர் களுக்காக அயலார்கள் அடித்துக்கொள்வது எவ்வளவு அறியாமை. 'கொண்டானும் கொடுத்தானும் சம்பந்தி, குறுக்கே இருந்தவன் அம்பலம்' என்பார்களே! இவர் களுக்கு ஏன் இந்த வம்பு! காசுக்காக உதைவாங்க வேண்டுமா? பணக்காரப் பேய்களைத்தான் எடுத்துக்

கொள்வோமே! அப்பாவிகளுக்குக் காசு கொடுத்து அனுப்பி, எதிரியை அடித்துவிட்டு வரச் செய்கிறார்கள். இந்த அப்பாவிகள் அதே பழக்கத்தில் தங்களையும் வந்து தாக்கிக் காசு கேட்கலாமல்லவா? இதுவும் நடக்கத் தான் செய்கிறது. பாய்ந்த மடையாலேயே வடிவதும் உண்டுதானே! எனவே, இந்தப் பழக்கமெல்லாம் எனக்கு அறவே பிடிப்பதில்லை. உள்ளுக்குள் அப்பாவை நொந்து கொண்டேன்—அவருக்காக இரக்கமுங் கொண்டேன்; ஏன்? மாமாவின் ஆட்கள் அப்பாவைத் தாக்க என்றைக்கு எங்கள் வீட்டிற்கு வர இருக்கிறார்களோ!

கற்பகத்திற்குத் திருமண ஏற்பாடு செய்யக் கலிங்க நத்தம் சென்றிருந்த குல்லூகபட்டர் குருசாமி மறுநாள் வீட்டிற்கு வந்தார். அப்பா ஆவலுடன் நடந்ததை வினவினார். காரியம் கைகூடவில்லை என்று கை விரித்தார் குருசாமி. ஏமாற்றத்துடன், ஏன் கைகூடவில்லை? என்று அப்பா கேட்டார். குருசாமி விவரமாகச் சொன்னார்:—

மாப்பிள்ளை பாண்டியனுடைய தகப்பனார் முத்தைய முதலியார் குடும்பத்துடன் கலிங்கநத்தம் என்னும் தம் மூரில் குடியிருக்கிறார். பாண்டியனோ, கோட்டைத்தளம் என்னும் ஊரில் இன்சுபெக்டர் வேலை பார்க்கிறார். பிள்ளையிருக்கும் இடம் வேறு—பெற்றோர் இருக்கும் இடம் வேறு. முத்தைய முதலியார், "உம் மகள் எங்களுக்கு வேண்டாம்? எனவே பரியத்தை நிறுத்தி விடவும்" என்று மாயாண்டிக்கு ஆள் மூலம் செய்தியனுப்பியது இன்சுபெக்டர் பாண்டியனுக்குத் தெரியாது. தம் அப்பா மலைச்சாரல் என்னும் ஊருக்குச் சென்று, மாயாண்டி மகள் அல்லியைத் தமக்கு உறுதிப்பாடு

செய்திருப்பார் என்று பாண்டியன் நினைத்துக்கொண்டிருந்தார். மாயாண்டிக்கு ஆள் அனுப்பிய பின்பு, மகனை நேரில் கண்டு விவரம் தெரிவிப்பதற்காக முத்தைய முதலியார் கோட்டைத்தளம் சென்றார்:

"மாயாண்டி முதலியாரின் மகளை நிறுத்திவிட்டு, முதலில் பார்த்துவந்த அம்பலவாண முதலியார் மகளையே மீண்டும் ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்று தந்தை மைந்தனிடம் தெரிவித்தார். 'அது முடியாது; எனக்கு மாயாண்டி மகள் அல்லியேதான் வேண்டும்' என்று பாண்டியன் அடம்பிடித்தார். "முதலில் அம்பலவாண முதலியாருக்கே வாக்கு கொடுத்திருந்ததால் அதை நிறைவேற்ற வேண்டும் என்று துணிந்துவிட்டேன்; மேலும் அவர் தம் சொத்தில் பாதியை உனக்கு எழுதிவைப்பதாகச் சொல்லுகிறார். மாயாண்டி இவ்வளவு தருவதாகச் சொல்லவில்லை. ஆதலால் நாம் இந்த வாய்ப்பை நழுவ விடக்கூடாது. என் பேச்சை மறுக்காமல் ஒத்துக்கொள்" என்று முத்தைய முதலியார் மகனுக்கு எவ்வளவோ சொன்னார். அவ்வளவும் செவிடன் காதில் ஊதிய சங்கு ஆயிற்று. "கற்பகத்தைவிட அல்லிதான் அழகில் சிறந்தவள். எனக்குச் சொத்து வேண்டாம். கண்ணுக்கு நிறைந்த மனைவியே வேண்டும். அம்பலவாண முதலியார் தம் சொத்து முழுவதையுமே எழுதிவைப்பதாயிருந்தாலும் அவர் மகள் கற்பகம் எனக்கு வேண்டவே வேண்டாம். மாயாண்டி முதலியார் ஒன்றுமே கொடுக்கவில்லையானாலும், என் சொத்து முழுவதையும் நான் அவருக்குக் கொடுத்தாவது, அவருடைய அழகு மகள் அல்லியைத்தான் மணந்து கொள்வேன். இதில் யாரும் குறுக்கிட வேண்டாம்—

குறுக்கிடவும் முடியாது. நான் நினைத்ததை நிறை வேற்றியே தீருவேன்" என்று பாண்டியன் ஒரே அடியாய் அடித்து விட்டார். மகன் போட்ட அதிர் வேட்டுக்குக் கிடுகிடாய்த்துப் போன முத்தைய முதலியார், 'சரி, பொறுத்துப் பார்ப்போம்' என்று சொல்லி ஊருக்கு வந்து விட்டார். படித்த மகனிடம்—அதிலும் இன்சு பெக்டர் வேலை பார்க்கும் மகனிடம் இதற்குமேல் ஒரு தந்தை என்ன செய்வது!

—இந்த விவரங்களை யெல்லாம் குருசாமி என் தந்தையிடம் சொன்னார். கற்பகத்திற்காக எடுத்துக் கொண்ட முயற்சி இரண்டாவது முறையும் தோல்வி யடைந்து விட்டதே என்று கலங்கினார் அப்பா. "நீங்கள் கவலைப்படவேண்டாம்; பொறுங்கள்! சித்திரை வைகாசி வந்ததும் மீண்டும் முயற்சி செய்வோம். அதற்குள் நானும் என் படிப்பை முடித்துக்கொண்டு வந்துவிடு கிறேன்" என்று அப்பாவுக்கு ஆறுதல் சொல்லி வைத் தேன் நான்.



# 7

உடம்பை ஒருவாறு தேற்றிக்கொண்டு சென்னைக்குப் புறப்பட்டுக் கல்லூரி வந்து சேர்ந்தேன். இன்னும் இரண்டு மாதங்களில் தேர்வு நடந்து முடியும். அத்துடன் எனது பி. ஏ. படிப்பும் முடிவுறுகிறது.

" இந்தக் கவலைகளை யெல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டும், அல்லியையே நினைத்துக்கொண்டும், படிப்பைக் கோட்டைவிட்டு விடாதே.!" என்றெல்லாம் அப்பாவும் அம்மாவும் அறிவுரைகளைக் கூடை கூடையாய் என்மேல் கொட்டி அனுப்பி யிருந்தார்கள். அவர்கள் நினைக்கிற அளவுக்குப் படிப்பு எனக்குக் கடுமையான தாகவோ—கவலை யளிப்பதாகவோ தோன்றவில்லை. பி. ஏ. தேர்வில் வெற்றி பெறுவோமா — மாட்டோமா என்ற ஐயப்பாடும் எனக்கு ஏற்பட வில்லை. ஏன்?

நான் இன்றைக்கே—ஏன், என்றைக்குமே தேர்வு எழுதத் தயார். அந்த அளவுக்குப் பாடங்களை யெல்லாம் படித்து முடித்திருந்தேன். நான் எப் போதுமே காலத்தை வீணாக்குவதில்லை. "பொன்னினும் சிறந்த தொரு பொருள் அருங்காலமே" என்னும் பொன் மொழி பொறித்த அட்டை, என் அறை முகப்பில் என்றும் தொங்கிக்கொண்டிருக்கும். புகை பிடித்தல்— அளவு மீறிப் படம் பார்த்தல்—நினைத்த நேரங்களில் எல்லாம் உணவுக் கடைக்குள் புகுந்து கண்டதை விழுங் குதல்—ஊர் சுற்றுதல் போன்ற எந்தக் கெட்ட பழக்க மும் எனக்குக் கிடையாது. இவற்றால், பொருளுக்குப் பொருள் கேடு—உடல் நலத்திற்கு உடல் நலக் கேடு— காலத்துக்குக் காலக்கேடு—வேலைக்கு வேலைக்கேடு என்று எனக்கு நன்றாகத் தெரியும். குறித்த நேரத்தில் குறித்த வேலையை முடித்து விடுவேன்—எதையும் காலந் தாழ்த்திச் செய்ய மாட்டேன் — பின்நாள் செய்ய வேண்டியதையுங் கூட முன்நாளே முடித்துவைத் திருப்பது எனது இரத்தத்தில் ஊறிய இயல்பு! இத்தகைய நான், ஏன் இன்றைக்கே தேர்வு எழுத முடியாது?—ஏன் முதல் வகுப்பில் வெற்றி பெற முடியாது? முடியும். எடுத்துக் கொண்ட நல்ல காரி யத்தில் தன்னம்பிக்கையும் தன் முயற்சியும் மன உறுதி யும் கொள்ளும் இயல்புடைய எனது படிப்பை, அப்பா நினைக்கிறபடி, எந்தப் புறச் சூழ்நிலையும் கலைத்துக் கெடுத்துவிட முடியாது. எனவே, வழக்கம்போல் என் அலுவல்களை ஆற்றி வந்தேன்.

ஒரு நாள் கடிதம் ஒன்று வந்தது—அல்லியிடமிருந்து தான். படித்தேன் :—

அன்புள்ள அத்தான்! வணக்கம்.

நீங்கள் நன்றாகப் படித்து வெற்றியுடன் தேர்வு எழுதவேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன். உங்கள் படிப்புக்கு இடையூறாக இக்கடிதம் எழுத நேர்ந்தமைக்கு மன்னிக்கக் கோருகிறேன். கடிதம் எழுதி உங்கள் அமைதியைக் கலைக்கக் கூடாது என்று தான் நானும் பொறுத்திருந்து பார்த்தேன். என்றாலும் முடியவில்லை. எழுதவேண்டிய நெருக்கடி ஏற்பட்டு விட்டது. எழுதிவிட்டேன்.

சில நாட்களாக அப்பா என்னைக் கடுமையாகக் கண்காணித்து வருகிறார். 'நீ அழகனை மணக்க முடியாது; எப்படியாவது உன்னை அந்தப் பாண்டியனுக்கே கட்டிக் கொடுப்பேன். மனத்தை மாற்றிக்கொள்' என்று என்னை நாளுக்குநாள் கரைக்க முயன்றார். அப்பாவுக்கு நான் கொடுத்துக்கொண்டு வந்த பதில் கண்ணீர் ஒன்றுதான்! போதாக் குறைக்கு, அந்தப் போலீசுக்காரப் பாண்டியன் நம் ஊர்ப் போலீசு நிலையத்துக்கே இன்சுபெக்டராக வந்துவிட்டார். இயற்கையாகத்தான் அவரை இங்கு மாற்றினார்களோ? அல்லது என்னைப் பழிவாங்குவதற் காக அவராகவே இங்கு மாற்றிக்கொண்டு வந்துவிட் டாரோ? என்னவோ தெரியவில்லை.

தந்தைக்குக் கட்டுப்படாமல், மாயாண்டி முதலியார் மகளைத்தான் கட்டிக்கொள்வேன் என்று அவர் குரங்குப் பிடியாய் இருப்பதை அப்பா எப்படியோ தெரிந்து கொண்டார். அப்பாவும் பாண்டியனும் இப்பொழுது நகமும் சதையுமாக இழைகிறார்கள். அப்பா அடிக்கடி பாண்டியன் தங்கியிருக்கும் இடத்துக்குப்போய்வருகிறார். அவரும் எங்கள் வீட்டிற்கு வந்துபோகத் தொடங்கிவிட் டார். என்ன செய்வதென்று எனக்குப் புரியவில்லை.

அவருக்குக் காஃபி கொண்டுவந்து கொடுக்கும்படியாக வும் அப்பா ஆணை போடுகிறார். நான் ஒரு நாளும் கொடுப்பதில்லை. அந்த வேலையை அம்மா தலையில் விடியவைத்து விடுவேன்.

பாண்டியன் வீட்டிற்கு வந்துபோவதைப்பற்றிக் கேள்விப்பட்டால் நீங்கள் என்னைப்பற்றி என்ன நினைப் பீர்களோ என்று அஞ்சினேன். அதற்காகவே தங்களுக்குக் கடிதம் எழுதவேண்டும் என்றுகூட என்றைக்கோ எண்ணினேன். இருப்பினும், நீங்கள் என் உறுதியில் ஐயப்பட மாட்டீர்கள் என்று தெளிந் தேன். "அல்லி! உன்மேல் எனக்கு உள்ள உறுதியில் உனக்கு நம்பிக்கை யில்லையா? உன்மேல் நான் ஐயப் படுவேன் என்று என்மேல் நீ எப்படி ஐயப்படலாம்?" என்று என்மேல் நீங்கள் சினங்கொண்டால் என்ன செய்வது என்று அஞ்சியும் கடிதம் எழுதாமல் சும்மா இருந்தேன். இருந்தும் இப்பொழுது எழுதவேண்டி வந்துவிட்டது.

பாண்டியன் தகப்பனார் முத்தைய முதலியார் வேறு வழியில்லாமல் மகனுடைய விருப்பத்துக்கு ஒத்துக் கொண்டார். பாண்டியன் என்னை மணந்துகொள்வ தென்று முத்தைய முதலியாரும் அப்பாவும் மீண்டும் முடிவுசெய்து உறுதி எடுத்துக்கொண்டார்கள். முன்பு ஒருமுறை பரிய விழா தவறிவிட்டதால், இனி மீண்டும் ஒருமுறை அந்தச் சடங்கைச் செய்யவேண்டிய தில்லை. வாய் உறுதியே போதும். ஒரேயடியாகத் திருமணத்திற்கே நாள் குறித்து நடத்திவிடலாம் என்று ஏற்பாடு செய்துகொண்டார்கள். மேலும், திருமண மாதங்களாகிய சித்திரை வைகாசி வரும்வரை காத்துக் கொண்டிருக்கவும் தேவையில்லை; பங்குனி பத்தாம்

தேதியே நடத்திவிடலாம் என்று திருமணத்திற்கு நாளும் குறித்துவிட்டார்கள்.

யார் எந்த ஏற்பாடு செய்தாலும் நான் ஒத்துக் கொள்ள வேண்டுமே! அப்பாவிடம் அமைதியாக என் மறுப்பைத் தெரிவித்தேன். அவர் ஏற்றுக் கொள்ள வில்லை. மேலும் கடுமையாகத் தெரிவித்துப் பார்த்தேன். அவர் அதற்குமேலும் கடுமையாக என்னை வற்புறுத்தி நெருக்கினார். நான் கண்டிப்பாகச் சொல்லி விட்டேன் :— "அப்பா! நான் மணந்தால் அத்தானைத் தான் மணந்து கொள்வேன்—இல்லாவிட்டால், இந்தப் பாண்டியன் என்றல்ல—வேறு எவரையுமே மணந்து கொள்ள மாட்டேன்—கன்னியாகவே காலங்கழிப்பேன் —இது உறுதி" என்று சொல்லிக் கண்ணீரும் கம்பலையுமாய் அவர் காலைக் கட்டிக்கொண்டேன்.

அப்பாவுக்கு ஒன்றும் ஓடவில்லை; செய்வதறியாது திகைத்தார். "அப்படி யென்றால் நான் அவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதி என்ன ஆவது?" என்று என்னை மடக்கினார். "அவர்கள் உங்களுக்கு முதலில் கொடுத்த வாக்குறுதி என்ன ஆயிற்று? அதைக் காற்றில் பறக்க விட்டுப் பரியத்தை நிறுத்தினார்கள் அல்லவா? அது போல இப்போது நீங்களும் வாக்குறுதியை மீறலாமே" என்று நான் அப்பாவை மடக்கினேன். சிறிது நேரம் யோசித்தார். "அது முடியாது. நான் முத்தைய முதலியார் முகத்தில் எப்படி விழிப்பது? உன் திருமணம் கைகூடிக் கைகூடிக் கலைந்து கொண்டே போனால் நாலுபேர் என்னை எப்படி மதிப்பார்கள்? ஊரில் நான் எப்படித் தலை காட்டுவது? எனக்குப்

பெருத்த மானக்கேடா யிருக்கிறது. பெண்ணைப் படிக்க வைத்ததினுல்தான் தகப்பன் சொல்லைத் தட்டிப் பேசுகிருள் என்று ஊரார் தூற்றிப் பேசுவார்கள். அதனுலே, நான் சொல்வதைத் தட்டாதே அல்லி" என்று அப்பா என்னைக் கெஞ்சினுர். அவர் 'சுருதி' இறங்கிவிட்டது.

அப்பா கெஞ்சத் தொடங்கவே, நான் மிஞ்சத் தொடங்கினேன். "என்னைப் பாண்டியனுக்குக் கட்டிக் கொடுத்து அணு அணுவாகக் குத்திக் கொல்வதற்கு முன் நானே ரயிலடியில் விழுந்து மாண்டு போகிறேன்" என்று சொல்லி நகர்ந்தேன்.

அப்பாவின் முகத்தைப் பார்க்க என்னவோபோல் இருந்தது. பெருத்த ஏமாற்றமும் ஏக்கமும் தென்பட்டன. பழைய கடுமை—கண்டிப்பு—கொடுமை—கோபம் எல்லாம் இருந்த இடம் தெரியவில்லை. குழந்தைபோல் தேம்பினுர். "அல்லி! நீ ரயிலடியில் விழுந்து இறக்க வேண்டாம். அதற்காகவா நான் உன்னைப் பெற்று வளர்த்தேன்? நீ உன் அத்தானையே மணந்துகொண்டு மனம்போல் வாழு! ஆனுல், 'வாக்குறுதி மீறியவன்' என்ற பட்டத்தை எனக்குச் சூட்டி, எனக்கு ஏட்டிக்குப் போட்டியாக என் எதிரியின் மகனை நீ மணந்துகொள்ளப் போவதைப் பார்த்துக்கொண்டிருக்க ஒருகாலும் என் மனம் இடந்தராது. இதோ நான் போய் ரயிலடியில் விழுந்து இறந்து விடுகிறேன்" என்று சொல்லிப் பைத்தியம் பிடித்தவர்போல் ஓடத் தொடங்கினுர். "வேண்டாமப்பா, வேண்டாமப்பா" என்று சொல்லி நான் ஓடி அவர் கையைப் பிடித்துக் கொண்டேன். அம்மா ஒரு கையைப் பிடித்துக்கொண்டார்கள். இருவரும் இழுக்க முடியாமல் இழுத்துவந்து சாய்வு நாற்காலியில் படுக்கச் செய்தோம்.

இந்த நிலையில், ஒரு பெண் மனம் எப்படியிருக்கும்— என்ன பாடு படும் என்று நீங்களே கற்பனை பண்ணிப் பாருங்கள் அத்தான்! அப்பாவை நிறைவு செய்வதா? என் மனத்தை நிறைவு செய்வதா? பெற்றோர் விருப் பத்தையே' பெரிதாகப் பேணி நிறைவேற்றுவதே பிள்ளைகள் கடமை என்று நீங்களே ஒரு முறை உரைத் திருக்கிறீர்களே! இதன்படி பார்த்தால், எனக்குக் கடமை பெரிதா? காதல் பெரிதா? கடமை தவறினல் காதல் கைகூடும்—காதலைத் தியாகம் செய்தால் கடமை நிறைவேறும். இரண்டினுள் ஒரு பெண்ணுக்கு எது இன்றியமையாதது? இரண்டையும் எடைபோட்டுப் பார்த்தேன். துல்லியமாக நிறுத்து ஒரு முடிவுக்குவர முடியாமல் தவித்தேன். ஒரு சமயம் இந்தத் தட்டும் மறுசமயம் அந்தத் தட்டும் மாறி மாறித் தாழ்வதும் எழுவதுமாக இருந்தன. ஒருவரை மனத்தில் மண வாளனுக வரித்துக்கொண்ட பிறகு, செடிக்குச் செடி ஆடு தாவுவது போன்று அவரைக் கைவிட்டு வேறொருவரிடம் தாவுவது கற்புக்கு இழுக்கு—இது வேசியரின் செயல் என்று ஒருசமயம் எண்ணுவேன். தன்னலத்திற்காக— தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக, தன் தந்தையை—தன்னைப் பெற்று வளர்த்துப் பெண்ணுக்கி விட்ட பெரியவரைச் சாகக்கொடுப்பது அதனினும் இழுக்கு—கொடுமையிலும் கொடுமை என்று மறுசமயம் எண்ணுவேன். இவ்விதம் மாறிமாறி எழுந்த எண்ணச் சூறுவளி சுழன்று சுழன்று . என்னைப் பந்தாடியது. உணர்ச்சி அலைகளால் எத்துண்டு மொத்துண்டு துரும் பெனத் தத்தளித்தேன். பைத்தியமே பிடித்துவிடும் போல் இருந்தது.

மன்னிக்க வேண்டும் அத்தான், மன்னிக்க வேண்டும். வெகுநாளாக விடியாதிருந்த பொழுது விடியத் தொடங்கி

விட்டது; விடிவெள்ளி முளைத்தாயிற்று. புயல் தணிந்தது; புழுதி யடங்கிற்று. ஆலையில் அகப்பட்ட கரும்பெனக் கசங்கிய என் நெஞ்சம் இப்பொழுது நிறைமதியென நிறைவு பெற்று விட்டது. ஒரு முடிவுக்கு வந்து விட்டேன் அத்தான், ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். தன்னலத்தைவிட பிறர் நலமே பெரிது என்ற முடிவுக்கு வந்து விட்டேன்—பிள்ளையின் விருப்பத்தைவிட பெற்ருேர் விருப்பமே பெரிது என்ற முடிவுக்கு வந்து விட்டேன்—காதலைவிட கடமையே பெரிது என்ற முடிவுக்கு வந்து விட்டேன். அப்பாவின் விருப்பத்தை நிறைவேற்றுவதாக அவருக்கு வாக்குக் கொடுத்து விட்டேன் அத்தான், வாக்குக் கொடுத்து விட்டேன். பாண்டியனுக்கும் அல்லிக்கும் பங்குனி மாதம் பத்தாம் தேதி திருமணம். உங்களால் இதனை நம்ப முடியவில்லையா அத்தான்? ஆம், எப்படி வாக்குக் கொடுத்தோம் என்று என்னுலேயே நம்ப முடியவில்லைதான். இருந்தாலும் இது நடக்கப்போகிற உண்மை—இமாலய உண்மை! எனவே, என்னை மன்னித்து விடுங்கள் அத்தான். இதனுல் நம் அன்பு குறைந்துவிட வேண்டாம். என்றைக்கிருந்தாலும் நாம் அத்தை பிள்ளை—அம்மான் பிள்ளையல்லவா? நீங்களும் என்னைப்போலவே ஒரு பெண்ணுயிருந்திருந்தால், அல்லது நானும் உங்களைப் போலவே ஓர் ஆணுயிருந்திருந்தால், நமக்குள் மாமன்—மச்சான் அல்லது மைத்துனிகள் என்ற உறவும் பற்றும் எந்த அளவு இருக்குமோ அந்த அளவு தொடர்பு எப்போதும் இருக்கட்டும். இதைத்தான் நான் தங்களிடம் கேட்டுக்கொள்கிறேன். நம் காதல் உறவிலிருந்து விடைபெற்றுக் கொள்ளத் தங்கள் ஒப்புதலை வேண்டுகிறேன். வணக்கம்.

இப்படிக்கு,
**அல்லி.**

கடிதத்தைப் படித்து முடித்தேன். சிறிது நேரம் கண்ணும் புரியவில்லை—மண்ணும் தெரியவில்லை. எதிர் பாராத இந்தச் செய்தி எனக்குப் பெரிய ஏமாற்றத்தை யும் எரிச்சலையும் தந்தது. உண்மையாகவே மணந்து கொண்ட மனைவியைப் பறிகொடுத்ததுபோன்ற உணர்வு தோன்றியது. மானக் கேடாகவும் இருந்தது. அதிலும் அல்லியே அயலானை மணந்துகொள்ள மனம் ஒப்பியதை எண்ண எண்ணத் தலை சுழன்றது. இந்த நேரத்தில் இராமாயணக் கதை நினைவிற்கு வந்தது. இராவணனால் மனைவியை யிழந்த இராமரது நிலையை எண்ணி இரக்கப் பட்டேன். அயலானிடம் இருந்த சீதைமேல் அவர் ஐயம் கொண்டதும் இயற்கைதான் என்று சரிபார்த்துக் கொண்டேன். உலகில் அயலானிடம் மனைவியைப் பறி கொடுத்த ஆடவர் சிலர், எப்படித்தான் உடம்பில் உயிரை வைத்துக் கொண்டு வாழ்கிறார்களோ என்று வியந்தேன். அவர்கள் உடம்பில் உயிர் எப்படி ஒட்டிக் கொண்டிருக்கிறதோ—அந்த உயிர் எங்கே ஒளிந்து கொண்டிருக்கிறதோ என்று இறும்பூது எய்தினேன். பல்லை நெரித்துக்கொண்டு, கண்களை இறுக மூடிக் கொண்டேன்—ஏன்? என்னைப் பார்த்துக் கொள்ள எனக்கே வெட்கமாக இருந்தது—எனக்கு யானே இரக்கப்பட்டுக் கொண்டேன். இவ்வளவுக்கும் இன்னும் அல்லி எனக்கு மனைவியாக வில்லை. எங்கள் பெற்றோர் களும் ஒத்துக்கொள்ளவில்லை. எங்கள் இருவர் உள்ளங் களுக்குள் ஏற்பட்ட உறவே என்னை இந்த அளவு ஆட்டிப் படைத்து விட்டது. இந்த உறவைத்தான் காதல்—புனித மான காதல்—தெய்வீகக் காதல் என்று உலகம் உரைக் கின்றதோ! இத்தகைய காதலுக்கு இடையூறு வரும் பொழுதுதான் சிலர் தற்கொலை புரிந்துகொள்ளுகிறார் களோ! அல்லது தங்கள் வாழ்வில் குறுக்கிட்ட எதிரியைக்

கொலை செய்து விடுகிறார்களோ! இஃது ஒருவகை உயிரியல் போலும்.........!

இல்லையில்லை; எனக்குத் தோன்றிய இத்தனை உணர்வுகளும் வெறும் மனமயக்கமே! தனக்கு உரியதல்லாத ஒரு பொருளை முறையற்ற நெறியில் விரும்புவதற்குப் பெயர் காதலா?—இல்லை, அது கள்ளத்தனம். அந்தப் பொருளுக்குரியவர்கள் அளிக்க ஒத்துக் கொள்ளாது மறுத்துங் கூட, அதை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருப்பதற்குப் பெயர் தெய்வீகக் காதலா?—புனிதமான காதலா? இல்லை, அதற்குப் பெயர் போக்கிரித்தனம்—சண்டித்தனம்—புலன் உணர்ச்சிக்கு அடிமைப்பட்டு வெல்ல முடியாமல் புறமுதுகு காட்டும் கோழைத்தனம் என்றுதான் சொல்ல வேண்டும்.

இப்போது என் மன மயக்கம் தெளிவடைந்து விட்டது. நான் மீண்டும் பழைய அழகனாகி விட்டேன். கையிலிருந்த கடிதத்தை மகிழ்ச்சியோடு—மனநிறைவோடு மீண்டும் ஒரு முறை படித்துப் பார்த்தேன். கண்களில் நீர் துளித்தது—அது அழுகைக் கண்ணீர் அன்று—'ஆனந்தக் கண்ணீர்' என்கிறார்களே—அது தான் அது!

அல்லிக்கு என்மேல் இருந்த பித்தம் தெளிந்தது குறித்துப் பெருமகிழ்வு எய்தினேன். அவள் உள்ளத்தில் கவிந்திருந்த பழைய பற்று என்னும் பனி மூட்டம் விலகியதை எண்ணி நிறைவுற்றேன். அவள் திருப்திக்காக அவளை மணந்துகொள்ள நான் இடையிலே வலிந்து மேற்கொண்ட பெரு முயற்சிக்கும் அதனாலேற்பட்டு வந்த பெருந் துன்பங்களுக்கும் ஒரு முடிவு நெருங்கியதே என்றெண்ணி இன்புற்றேன். எங்களால் எங்கள்

குடும்பங்களுக்கிடையே தொடர்ந்து ஏற்படவிருந்த மோதல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டதாகவும் மகிழ்ந்தேன்.

அல்லிக்குத் திருமணம் கூடியதற்காக நான் மகிழ்கிறேன் என்பதனால், அவள் மேல் எனக்குப் பற்றில்லை என்று பொருளில்லை. அவளை மணந்து கொள்வதில் எனக்குக் கொள்ளை விருப்பம். அதற்காக முயன்றும் பார்த்தேன்; முடியவில்லை. அதற்கு மேல் என்ன செய்வது! 'முயன்றால் முடியாததில்லை' என்பார்கள் சிலர். 'முடியாது' என்ற சொல்லை அகராதியிலிருந்தே எடுத்து விட வேண்டும் என்று நெப்போலியன் சொன்னதாக அவர்கள் கூறுவர். இருக்கலாம்; ஆனால், முயற்சிக்கும் ஓர் எல்லை யுண்டு. நாம் எந்தப் பொருளுக்காக முயலுகிறோமோ, அந்தப் பொருளின் இன்றியமையாமை—கட்டாயத் தேவை முதலியவற்றைப் பொறுத்தே முயற்சியின் அளவும் எல்லையும் இருக்க வேண்டும். வானத்திலுள்ள முழுமதியைப் பிடித்துக்கொண்டு வர முயலுவது முட்டாள்தனமல்லவா? அல்லது ஒரு கடையில் தன்னைக் கவர்ந்த—தன் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட ஒரு மலரையோ அல்லது ஒரு கனியையோ தான் வாங்கப் போனபோது, தனக்கு முன் வேறொருவன் அதனை வாங்கிக்கொண்டு போய்விடின், எனக்கு வேறு மலரோ—கனியோ வேண்டாம், அதுவேதான் வேண்டும் என்று அடம்பிடித்துச் சிறுபிள்ளைத்தனம் செய்வது அதனினும் முட்டாள்தனமல்லவா?

அல்லியைத் தவிர வேறு யாரையும் மணந்துகொள்ள மாட்டேன் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? அது அறிவுடைமையாகுமா? அவளைத் தவிர வேறு பெண்களே உலகில் பிறக்கவில்லையா? ஒருவேளை அல்லியே பிறந்

திருக்கவில்லை என்ருல், நான் வேருெருத்தியைத் தானே நாட வேண்டும்? இதேபோலத்தான் அவளுக்கு நானும்!

இந்தக் காலத்தில் நாகரிகம்—சீர்திருத்தம் என்ற மயக்கம் கொண்டவர் சிலர், காதலின் பெருமையறியாத கயவன் என்று என்னை இழித்துரைக்கலாம். எனது கருத்தினை, கர்நாடகம்—கண்மூடித்தனம்—பகுத்தறிவிற்கு ஒவ்வாதது—பத்தாம்பசலிக் கொள்கை என்றெல்லாம் எள்ளி நகையாடவும் செய்யலாம். நான் சொல்வேன், என் கருத்துத்தான் பகுத்தறிவிற்கு ஏற்றது; இருக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப—வாய்ப்பு வசதிகளுக்கு ஏற்ப வாழ்க்கையை வளப்படுத்தக் கூடியது; பிறர் சொல்வதுதான் கண்மூடித்தனம்—என்று.

எனவே, அல்லி என்னை மறந்து, தன் தந்தையின் விருப்பப்படி பாண்டியனை மணந்துகொள்ள ஒத்துக் கொண்டது மிகவும் பொருத்தமான—அறிவுடைய செயலாகும். அதுபோலவே, அவளை மறந்து, என் பெற்ருேர் விருப்பப்படி வேருெருத்தியை மணந்துகொள்ள வேண்டியதும் எனக்கு அறிவுடைமையாகும்.

ஒருவிதமாக இந்தக் கவலையும் நீங்கி விட்டதால், என் முழுக்கவனத்தையும் படிப்பில் செலுத்தினேன். வெற்றியுடன் பி. ஏ. தேர்வு எழுதி முடித்தேன். மூட்டை முடிச்சிகளைக் கட்டிக் கொண்டு சென்னையிலிருந்து எங்கள் ஊர் மலைச்சாரலை நோக்கிப் புகை வண்டியில் புறப்பட்டேன்.



# 8

ஊர் நோக்கி வந்துகொண் டிருந்தபொழுது அல்லி பற்றிய பழைய நினைவு திரும்பியது. அவளுக்காக அவள் தகப்பனிடம் நான் பட்ட அடியை எண்ணியபோது உடம்பு சிலிர்த்தது. ஒரு கணம் செயலற்றுப் போனேன். இந்த வேதனையான உணர்வுகளையெல்லாம் தேர்வு சமயத்தில் மறந்திருந்ததற்காக என்னையே நான் பாராட்டிக் கொண்டேன். மறதி பொல்லாதது என்று சிலர் சொல்லுவர். ஆனால், மறதி இயற்கையின் அருட் கொடை—ஒரு வரப்பிரசாதம் என்று உளநூல் வல்லுநர் கூறியிருப்பதிலுள்ள உண்மை இப்போது தான் எனக்கு நன்கு புரிந்தது. பழைய கவலைகளை மறந்திருந்ததனால் தான், என் உள்ளத்தின் வேதனை குறைந்தது-படிக்கவும் முடிந்தது. அந்த மறதிக்கு ஒரு நன்றி!

அல்லி இப்பொழுது திருமணமானவள். நான் முன் போல் அவளைப் பார்க்க முடியாது—அவளிடம் பழகவும் முடியாது. அவள் கணவன் கண்டிப்பான பேர்வழியாயும் இருக்கலாம். இப்போது தாய் வீட்டில் இருப்பாளா—அல்லது கணவன் வீட்டில் இருப்பாளா? எங்கேயாவது இருக்கட்டும். எப்படியாவது அவள் நல்ல விதமாக வாழ்ந்தால் போதும். அவளைப்போலவே, கற்பகத்துக்கும் மணம் செய்து வைத்து விட்டால் என் கவலை நீங்கி விடும். இவ்வாறு எண்ணியபடியே பயணம் செய்தேன்.

புகைவண்டி வழியில் விழுப்புரம் சந்திப்பில் அரை மணி நேரம் நின்றது. வண்டியில் என் பக்கத்தில் அமர்ந்துகொண்டு வந்த ஒருவர், தம் பொருள்களையும் தாம் உட்கார்ந்திருக்கும் இடத்தையும் சிறிது நேரம் பார்த்துக் கொள்ளும்படி என்னிடம் சொல்லிவிட்டு, தேநீர் அருந்துவதற்காகக் கீழே இறங்கிச் சென்றார். அவரால் என்னிடம் அடைக்கலம் கொடுக்கப்பட்ட அந்த இடத்தில், புதிய இளைஞர் ஒருவர் ஏறி உட்கார வந்தார். அந்த இளைஞர் என்னைப் போலவே வாட்ட சாட்டமாயிருந்தார். "இது மற்றொருவருடைய இடம்; அவர் தேநீர் பருகச் சென்றுள்ளார்; தயவு செய்து இவ்விடத்தில் உட்கார வேண்டாம்" என்று நான் வந்தவரைக் கேட்டுக் கொண்டேன். "இது அவருடைய இடம் என்று எழுதி ஒட்டியிருக்கிறதா? இந்த இடத்தை அவர் கிரயம் செய்துகொண்டாரா? போய்யா போ! காலியாயிருக்கிற எந்த இடத்திலும் எவர் வேண்டுமானாலும் உட்காரலாம்" என்று சொல்லிக்கொண்டே வந்த இளைஞர் வகையாக உட்கார்ந்து விட்டார். நான் மேலும் சிறு எதிர்ப்பு தெரிவித்தேன். அவர் ஒன்று சொல்ல—நான் ஒன்று

சொல்ல எங்களுக்குள் சலசலப்பு ஏற்பட்டது. இருவருக்குமே இளமை முறுக்கு அல்லவா? அங்கிருந்தவர்கள் எங்களை அமைதி பண்ணிவிட்டார்கள்.

வண்டி எங்கள் ஊர் மலைச்சார்ல் நிலையத்தை அடைந்ததும் நான் இறங்கினேன். அந்த இளைஞரும் அதே நிலையத்தில் இறங்கி, நிலையத் தலைவரிடம் ஏதோ சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். நான் வெளியில் வந்து, அங்கிருந்த ஒரே மாட்டு வண்டியை வாடகைக்கு அமர்த்தி என் பொருள்களை ஏற்றப்போனேன். அப்போது அந்த இளைஞர் வந்து, "வண்டி வருகிறாயா—இல்லையா?" என்று வண்டிக்காரனை அதட்டினார். அவன் அஞ்சி நடுங்கி அவரை ஏற்றிக்கொண்டான். வண்டி பட்டாளப் பறந்து விட்டது. நான் ஏமாந்த சோணகிரியாய் வெறிக்க நின்றுகொண்டிருந்தேன். பின்னர், தற்செயலாய் அங்கு வந்த வேறொரு வண்டியை அமர்த்திக்கொண்டு வீடு நோக்கிப் புறப்பட்டேன்.

வீடு வந்து சேர்ந்து விட்டேன். படிப்பை முடித்துக் கொண்டு வந்ததில் என் அம்மாவுக்குப் பெருமகிழ்ச்சி. இனிமேல் வீட்டை விட்டு மகன் எங்கேயும் போக மாட்டான்; கூடவே இருப்பான் என்பதை எண்ணியபோது, அம்மாவுக்கு ஒரு புது மகனே பிறந்திருப்பது போல் தோன்றியிருக்கலாம். மகன் தனக்குத் துணையாக இருந்து, குடும்பத்தையும் நிலபுலங்களையும் கவனித்துக் கொள்வான் என்றெண்ணி அப்பாவும் மகிழ்ந்திருப்பார். ஆனால், என்பாடு திண்டாட்டமாயிருந்தது. ஊரோடு தங்கி வீட்டு வேலைகளைக் கவனிப்பதா? அல்லது ஏதேனும் வெளியூர் அலுவலகத்தில் வேலை பார்ப்பதா? என்று என் மனம் ஊசலாடியது. பெற்றோர் இருவரும்,

'உள்ளது போதும், ஊரோடு தங்கி விடு' என்றுதான் சொல்லுவார்கள். கற்பகத்திற்குத் திருமணம் முடியும் வரை நான் ஊரிலேயேதான் இருந்தாக வேண்டும். வந்த அன்றைக்கே இவ்வளவும் எண்ணிப் பார்த்தேன். இந்த மனத்துக்கு ஏன்தான் இத்தனை பறப்போ—தெரியவில்லை.

சாப்பாடு முடிந்ததும், கற்பகத்தை மெள்ள விசாரிக்கத் தொடங்கினேன் — அல்லியைப் பற்றித் தான்!

"கற்பகம்! அல்லி இப்போது எங்கேயிருக்கிறாள்?"

"அல்லியா? எங்கே இருப்பாள்? இது என்ன கேள்வி அண்ணா!"

"இல்லை......தாய் வீட்டில் இருக்கிறாளா—அல்லது கணவன் வீட்டில் இருக்கிறாளா என்று கேட்டேன்".

"கணவன் வீடா! அது எந்த வீடு? நீதான் அவள் கணவன்!"

"என்ன கற்பகம் விளையாடுகிறாய்?"

"விளையாடுவது நானா, அண்ணா?"

"நீ சொல்வது எனக்குப் புரியவில்லை, கறபகம்!"

"நீ சொல்வதும் எனக்குப் புரியவில்லை, அண்ணா!"

"அல்லிக்குத் திருமணம் ஆகிவிட்டதால், இப்போது கணவன் வீட்டில் இருக்கிறாளா? அல்லது தாய் வீட்டிற்கு வந்திருக்கிறாளா? என்று கேட்டேன்."

"அல்லிக்குத் திருமணம் ஆகிவிட்டதா? எப்போது? எங்கே? யாரை மணந்து கொண்டாள்? உனக்கு யார் அழைப்பு அனுப்பியது?"

"அல்லியேதான் எனக்குக் கடிதம் எழுதியிருந்தாள். தான் பாண்டியனை மணக்க ஒத்துக் கொண்டதாகவும், பங்குனி பத்தாம் தேதி திருமணம் என்றும் எழுதியிருந்தாள். இதோ பார் அந்தக் கடிதத்தை! இதன்படி என்றைக்கோ அவளுக்குத் திருமணம் ஆகிவிட்டிருக்குமே! உனக்குத் தெரியாதா? ஒருவேளை, யாருக்கும் தெரியாமல் வெளியூரில் போய்த் திருமணத்தை நடத்தி விட்டார்களா?"

"அல்லி உனக்குக் கடிதம் எழுதியிருந்தாளா? அவள் எழுதியதுவரையும் உண்மைதான். ஆனால் அதன்படி திருமணந்தான் நடக்கவில்லை."

"ஏன் நடக்கவில்லை? நம் அப்பா முந்தி பரியத்தைக் கலைத்ததுபோல் இப்போதும் திருமணத்தைக் கலைத்து விட்டாரா?

"நம் அப்பா ஒன்றும் கலைக்கவில்லை. அல்லியின் அப்பாவேதான் நிறுத்திவிட்டாராம்,"

"அவரே முயற்சி செய்து பிறகு நிறுத்தியது எதற்காக?

"ஊரில் என்னென்னவோ சொல்வதாக நம் அப்பாவும் அம்மாவும் பேசிக்கொண்டிருந்தார்கள்."

"என்ன அது?"

"நம் மாமா மாயாண்டி முதலியார், மகள் திருமண ஏற்பாட்டை, செங்கல்பாளையத்திலிருக்கும் தம் தம்பிக்கு—அதாவது நம் சின்ன மாமாவுக்குத் தெரிவித்து விட்டு வருவதற்காகப் புகைவண்டியில் சென்று

கொண்டிருந்தாராம். அப்போது வழியில் ஓர் ஊரில் அவருடைய நண்பர் ஒருவர் வந்து வண்டியில் ஏறினாராம். அவர்களுக்குள் ஏதோ பேச்சு நடந்திருக்கிறது:—

"வாங்க சின்னசாமி செட்டியார்வாள்! எவ்வளவு தூரம் போகிருப் போலே?"

"வருகிறேன் மாயாண்டி முதலியார்வாள்! நான் கலிங்கநத்தம் வரையும் போகிறேன். முதலியார் எவ்வளவு தூரம் போகிருப்போலே?"

"நான் செங்கல்பாளையத்துக்கு என் தம்பியைப் பார்த்துவிட்டு வரப் போகிறேன். கலிங்கநத்தத்துக்குச் செட்டியார்வாள் என்ன வேலையாய்ப் போகிருப் போலே?"

"நானா? கலிங்கநத்தத்தில் என் தங்கை வீட்டுக்குப் போகிறேன். பர்மாவிலிருந்து வந்து கலிங்கநத்தத்தில் குடியேறியிருக்கிறாரே முத்தையன்—அவரை உங்களுக்குத் தெரியுமா? அவர்தான் என் தங்கை கணவர். ஒரு காரியமாக அவரைப் பார்க்கத்தான் போகிறேன்."

"என்ன, முத்தையனா? எந்த முத்தையன்?

"எந்த முத்தையனா? கலிங்கநத்தத்தில் எத்தனை முத்தையன் இருக்கிறார்களோ? ஏன், உங்களுக்கு யாரையாவது தெரியுமா?"

"ஒரு முத்தையனைத் தெரியும். அவர் பிள்ளையின் பெயர் பாண்டியன். அந்தப் பிள்ளை போலீசு இன்சுபெக்டராக இருக்கிறார்."

"ஆமாம் ஆமாம், அதே முத்தையன்தான் என தங்கையின் கணவர்"

"என்ன! உம் தங்கை கணவரா? நீங்களோ செட்டியார் இனத்தைச் சேர்ந்தவர். அவரோ முதலியார் இனத்தைச் சேர்ந்தவர்—அதாவது எங்கள் இனத்தைச் சேர்ந்தவர். அவரை நாங்கள் முத்தைய முதலியார் என்றுதான் அழைப்பது வழக்கம். அவர் எப்படி உமக்கு மைத்துனராக இருக்க முடியும்? இருவரும் வெவ்வேறு குலத்தவ ராயிற்றே!"

"அதுவா, அது ஒரு தனிக் கதை."

"என்ன அது?"

"முத்தைய முதலியார் பர்மாவில் இருந்தபோது என் தங்கையைக் காதலித்துக் கலப்புமணம் செய்து கொண்டார். தங்கையென்றால், உடன் பிறந்த சொந்தத் தங்கையல்லள்-என் பெரியப்பா மகள். என் பெரியப்பா மட்டும் முதலில் இந்தக் கலப்பு மணத்துக்கு ஒத்துக் கொள்ள வில்லையாம். பிறகு வெளிநாட்டில் வேறு என்ன செய்வது? இருக்கிற தமிழர்களுக்குள் சாதி வேற்றுமை பாராட்டாமல் மணந்துகொள்ள வேண்டியதுதானே? இதில் தவறு ஒன்றுமே இல்லையே! கலப்பு மணம் செய்துகொண்டாலும் நலமாகவே வாழ்ந்துவந்தார்களாம். இரண்டாவது உலகப் பெரும் போர் நடந்த பொழுது, இருந்த பணத்தை எடுத்துக்கொண்டு, மனைவியையும், சிறுவன் பாண்டியனையும் அழைத்துக் கொண்டு முத்தைய முதலியார் நம் நாட்டுக்கு வந்து விட்டார். தம் முன்னோர்களின் ஊராகிய கலிங்க நத்தத்திலேயே குடியேறினர். பையன் பாண்டியனையும் படிக்கவைத்து நல்ல நிலைக்குக் கொண்டுவந்துவிட்டார். இதுதான் அவர் வரலாறு."

கேள் அண்ணு! இந்தவிதமாக முத்தைய முதலியார் வரலாற்றைச் சின்னசாமி செட்டியார் சொல்லக் கேட்டதும், நம் மாமா மாயாண்டி முதலியாருக்கு மயக்கமே வந்துவிட்டதாம். அவரோ கர்நாடகமானவர்—மிகவும் வைதிகம்—பழமை விரும்பி—ஒரு பத்தாம் பசலி—நம் இனத்தாருக்குள்ளேயே உயர்ந்த குடி, தாழ்ந்த குடி என்று பாகுபாடு பார்க்கக்கூடியவர். அத்தகைய மாயாண்டி முதலியார் ஒரு முதலிக்கும் செட்டிப் பெண்ணுக்கும் பிறந்த பாண்டியனுக்குத் தம் மகள் அல்லியைத் தர உடன்படுவாரா? தெரிந்த பின்னும் செய்வாரா? உடனே ஊருக்குத் திரும்பி வந்தார். அல்லிக்கு உடல் நலம் இல்லையெனவும், திருமணத்தை வெறுக்கிருள் எனவும், மீறிக் கட்டிக்கொடுத்தால் தற்கொலை செய்து கொள்வதாகக் கூறுகிருள் எனவும் ஏதேதோ சாக்குப் போக்குகளை மாப்பிள்ளை வீட்டாருக்குச் சொல்லி யனுப்பித் திருமணத்தையே முறித்துவிட்டார். இனி மேல் மாயாண்டி முதலியார், அந்தப் போலீசு மாப்பிள்ளை பாண்டியன் பக்கம் தலைவைத்துக்கூட படுக்கமாட்டார். எனவே, அல்லிக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை.''—என்று நடந்த விவரம் முழுவதையும் தான் கேள்விப் பட்டபடி அப்படியே கற்பகம் என்னிடம் ஒப்பித்தாள். அல்லி பாண்டியனை மணந்துகொண்டு பழைய பாட்டி யாகி யிருப்பாள் என்று எண்ணிக்கொண்டிருந்த எனக்கு, இந்தச் செய்தி பெரும் வியப்பைத் தந்தது. இன்னும் என்னென்ன நடக்க இருக்கின்றனவோ என்று எண்ணிப் பெருமூச்சு விட்டேன்.

பட்டணத்தில் தங்கிப் படிப்பை முடித்துவிட்டு இப்பொழுதுதான் ஊருக்குத் திரும்பி யிருக்கிறேன்.

ஆதலால், தொடக்கத்தில் சில நாட்கள் விறுவிறுப் பாகவே கழிந்தன. தாய் தந்தையரோடும் தங்கை யோடும் அளவளாவுவதும், நண்பர்களோடு உரையாடி மகிழ்வதும், ஊரின் சுற்றுப்புறத்துள்ள இயற்கைக் காட்சிகளைக் கண்டு சுவைப்பதுமாகச் சில நாட்கள் வாழ்க்கையை இன்பமாகக் கழித்தேன். இரவு பகலாகக் கண்விழித்துப் பாடுபட்டுப் படித்துத் தேர்வு எழுதிய எனக்கு இந்த ஓய்வும் உவகையும் தேவைதானே! இடையிடையே அல்லியைப் பற்றிய நினைவும் நெஞ்சை உறுத்தத் தொடங்கியது.

ஒருநாள் மாலை உலாத்துவதற்காக வெளியில் சென்றிருந்தேன். அப்போது வழியில் ஒருவன் வந்து வம்புக் கிழுத்தான். வாய்ச்சண்டையா யிருக்கும்போதே முதலில் அவன் என்னைக் கைதீண்டி விட்டான். நான் விடுவேனா? பதிலுக்கு ஓர் அறை அறைந்தேன். ஓர் அறைக்கே அவன் ஐய்யோ முறையோ என்று கத்தி, கொல்கிறானே—கொல்கிறானே என்று கூவிக்கொண்டே கீழே விழுந்துவிட்டான். என்மேல் ஏதாவது பழிசுமத்த வேண்டுமென்று திட்டமிட்டு அவன் வேண்டுமென்றே கீழேவிழுந்தது போல் எனக்குத் தோன்றியது. இல்லா விடின், ஓர் அறை கொடுத்ததுமே, கொலை செய்வதாக அவன் கூவியிருக்க வேண்டியதில்லை. ஓர் அறையைக் கூட தாங்கமுடியாத அளவுக்குக் கையாலாகாதவன் என்னிடம் வம்புக்கே வந்திருக்க வேண்டியதில்லையே! இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கவேண்டுமென்று என் மனம் எண்ணியது.

இந்த நேரத்தில், "யாரது சண்டை போட்டுக் கொள்வது? யாரோ யாரையோ கொல்லுவதாகக் கூச்சல் கேட்டதே! அந்தக் கொலைத் தொழில் செய்தது

யார்?" என்று கேட்டுக்கொண்டே இரண்டு போலீசுக் காரர்கள் என்னை நெருங்கினார்கள். அவர்களுள் ஒருவர் இன்சுபெக்டராகவும், இன்னொருவர் முன்னவரின் கீழ் வேலை செய்யும் ஒரு காவலராகவும் காணப்பட்டனர். இன்சுபெக்டரை இதற்குமுன்பே எங்கேயோ பார்த்த தாக நினைவு வந்தது. ஆம், அவரேதான்—நான் புகை வண்டியில் வந்துகொண்டிருந்த பொழுது விழுப்புரம் சந்திப்பில் என்னிடம் தகராறு செய்தாரே; அவரேதான் —எங்கள் ஊர்ப் புகைவண்டி நிலையத்தில் நான் அமர்த்திய வண்டியை எனக்குப் போட்டியாகத் தட்டிக் கொண்டு போய்விட்டாரே, அவரே தான்! எங்கள் ஊர் இன்சு பெக்டர் என்று தெரியாமல் அப்போது நான் அவரோடு தகராறு செய்து விட்டிருப்பதை இப்போது உணர்ந் தேன். மேலும், கற்பகத்துக்கும் அல்லிக்கும் மாப் பிள்ளையாக மாறி மாறி வரவிருந்து தவறவிட்ட அந்தப் பாண்டியன் இவர்தான் என்றும் புரிந்து கொண்டேன்.

கீழே விழுந்து கிடந்தவன், தன்னை நான் கொல்ல முயன்றதாக இன்சுபெக்டரிடம் முறையிட்டான். உடனே என்னைக் காவல் (போலீசு) நிலையத்திற்கு அழைத்துச் சென்றார்கள். "ஏன் அவனைக் கொல்லப் போனாய்?" என்று இன்சுபெக்டர் பாண்டியன் கேட்டார். "நான் அப்படி யொன்றும் செய்யவில்லை; அவனாகவே என்னை வம்புக்கிழுத்தான்; இதில் ஏதோ சூது இருக்கிறது" என்று நடந்ததை விவரமாக நான் சொன்னேன். "யாரிடம் பொய் சொல்லுகிறாய்? உண்மையை உரைக்கி றாயா—அல்லது உதை கொடுக்கவா?" என்றார் பாண்டி யன். "நான் உண்மையை உரைத்தாய் விட்டது; நீங்கள் எது வேண்டுமானாலும் செய்யலாம்" என்று சொன்னேன் நான். "மயிலே மயிலே இறகு போடு

என்ருல் போடாது; இவனை அந்த அறைக்குள் தள்ளுங்கள் —கொடுக்கவேண்டியதைக் கொடுத்தால்தான் இவன் உண்மையைக் கக்குவான்" என்ருர் பாண்டியன். நான் அறைக்குள் அழைத்துச் செல்லப்பட்டேன். பாண்டியன் இடி இடித்துப் பேய்மழை பொழிந்தார். வெளிச் செய்தியிலிருந்து சொந்தச் செய்திக்கு வந்து விட்டார்.

"டேய்! உன்னை நான் வெகுநாளாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என் வாழ்க்கையில் குறுக்கிட உனக்கு என்ன துணிச்சல்?"

"நான் ஒன்றும் உங்கள் வாழ்க்கையில் குறுக்கிட வில்லையே. என்றுமே எவர் வாழ்க்கையிலுமே குறுக்கிடுவதில்லையே."

"மாயாண்டி முதலியார் மகளை நான் மணந்து கொள்ள முடியாதபடி நீயும் உன் அப்பனும் சேர்ந்து கொண்டு கெடுத்து விட்டீர்கள் அல்லவா?"

"நாங்கள் என்ன செய்வோம்! உங்களை யார் மணந்துகொள்ள வேண்டாம் என்றது?"

"இந்தப் பூனையும் பால் குடிக்குமா! ஒன்றும் தெரியாதவன்போல் பேசுகிருன். நடக்கவிருந்த பரியத்தை நிறுத்துவதற்காக, குருசாமியை என் தந்தையிடம் அனுப்பி, பாதி சொத்து தருவதாகச் சொல்லி அவர் மனத்தை மாற்றிக் கலைத்து விட்டீர்கள் அல்லவா? பிறகு எனது வற்புறுத்தலால் மீண்டும் திருமணம் கூடியது. நீ அல்லியை மயக்கிக் கெடுத்ததனுல், அவள் என்னை மணந்துகொள்ள மாட்டேன் என்று மறுத்திருக்கிருள். அதனுல் மாயாண்டி முதலியார் திருமணத்தையே நிறுத்தி விட்டார். எனவே, எல்லாவற்றுக்கும் காரணம் நீ தான். என் இன்ப வாழ்விற்கு எமனைக் குறுக்கிட்டவன் அல்லவா நீ?"

"அப்படி யொன்றும் அல்லியை நான் மயக்கவும் இல்லை—உம்மை மணக்காதபடிக் கெடுக்கவும் இல்லை. இன்னும் கேட்டால், அவள் உம்மை மணந்துகொள்ளும் படியாக அறிவுறுத்தியும் இருக்கிறேன். என்ன காரணத் தாலோ உங்கள் திருமணம் கைகூட வில்லையென்றால், அதற்கு நான் என்ன செய்வது?"

"தெரியுமடா உன்னை, திருட்டுப் பயலே! குடி கேடா! ஒரு குடும்பப் பெண்ணை இப்படித்தான் கலைப் பதா? நடக்கவிருந்த திருமணத்தை இப்படித்தான் முறிப்பதா? அயோக்கியப் பயலே! இதுபோல் இன்னும் எத்தனை குடும்பங்களைக் கெடுத்திருக்கிறாய்?"

"குடும்பங்களைக் கெடுக்கிற வேலை எனக்கில்லை. இன்சுபெக்டர் அவர்களே! மரியாதையாகப் பேசும். நானும் உம்மைப்போல் மனிதன்தான்! எனது பொறுமைக்கும் எல்லை உண்டு."

"என்னடா எதிர்த்துப் பேசுகிறாய்! இந்தா வாங்கிக்கொள்!"

என்று சொல்லிக் கொண்டே, பாண்டியன் என் கன்னத்தில் பளீர் என ஓர் அறை விட்டார். எங்கள் இருவரைத் தவிர அந்த அறையில் வேறு யாரும் இல்லை. போலீசு காவலர் சிலர் வெளியில் இருக்கிறார்கள். என்னைத் தாக்குவதற் கென்றே பாண்டியன் இந்த ஏற்பாடு செய்து தனியறையில் தள்ளிக்கொண்டிருக் கிறார் என்பதை உணர்ந்தேன். நான் அவரிடம் அடிபட வேண்டிய காரணமே இல்லை. தண்டனைக்கேற்ற குற்றம் நான் எதுவும் செய்திருக்கவில்லை. இந்த நிலையில் என் கன்னத்தில் அறை விழுந்திருக்கிறது. இப்பொழுது நான் செய்ய வேண்டுவது என்ன? விழப்போகும்

அடிகளை எண்ணிக்கொண்டே யிருப்பதா? அல்லது எதிர்த்து அடிப்பதா? எதிர்த்து அடிப்ப தென்றால் பாண்டியன் இப்பொழுது தனியாக இல்லை—அவருடைய ஆட்கள் வெளியில் நின்றுகொண் டிருக்கிறார்கள்; எல்லோரும் சேர்ந்து என்னை அடித்துத் துவைத்துக் கூழாக்கி விடுவார்கள். எனவே நான் என்ன செய்வது? பொறுத்து மன்னிக்க வேண்டியதுதான் — வேறு வழியில்லை. இந்த நேரத்தில், "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நல்நயம் செய்து விடல்" என்ற வள்ளுவர் குறளும், "ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தைக் காட்டு" என்ற ஏசுநாதரின் இன்னுரையும் நினைவிற்கு வந்தன. இந்த அறிவுரைகள், பிறரைத் திருத்த உதவுவதற்குமுன், உதையிலிருந்து நம்மைக் காத்துக்கொள்ளவும் உதவுகின்றன. நான் பாண்டியனைத் திருப்பித் தாக்குவேனே யானால், எனக்கு மேலும் மேலும் பரிசு கிடைத்துக்கொண்டே யிருக்கும். எனவே, இதுபோன்ற சமயங்களில் வரட்டு வீரம் காட்டி வாங்கிக் கட்டிக்கொள்வதைவிட, அமைதியாய் இருந்து விடுவதே அறிவுடைமை என்ற முடிவுக்கு வந்தேன். அந்த நேரத்தில் இரண்டாவது அறை விழுந்தது.

இரண்டாவது அறை விழுந்ததும் பழைய கொள்கை பறந்து விட்டது. முந்திய குறள் இருந்த இடத்தை, "மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார், உயிர் நீப்பர் மானம் வரின்" என்ற குறள் பிடித்துக்கொண்டது. உயிர் போனாலும் போகட்டும்—மானம்போக விடக் கூடாது. நான் ஓர் ஆண்பிள்ளை—ஒருவன் அடிக்க அடிக்க வாங்கிக்கொண்டிருப்பதா? இது என்க்கு மட்டுமில்லை—எங்கள் குடும்பத்திற்கே பெரிய மானக் கேடு. அந்த அறைக்குள்ளே ஒரு ஹீரோவும் வில்லனும் உருவாகிக்கொண்டிருப்பதாக உணர்ந்தேன்.

முதல் அறை எனது இடக் கன்னத்தில் விழுந்தது —இரண்டாவது அறை வலக்கன்னத்தில் விழுந்தது— இனி மூன்ருவது அறை எனது முறை. பாண்டியனது கன்னத்தில் பதில் அறை அறைந்தேன். உதைகளும் குத்துகளும் பரிமாறிக் கொள்ளப்பட்டன—இருவரும் கட்டிக்கொண்டு உருண்டு புரண்டோம் — ஒருவரை யொருவர் தூக்கி எறிந்தோம்.

ஒரு போலீசு இன்சுபெக்டரை, போலீசு நிலையத் திலேயே இப்படித் தாக்குவேன் என்று நானும் எதிர் பார்க்கவில்லை — பாண்டியனும் எதிர்பார்த்திருக்க மாட்டார். பாண்டியனைப் போலவே நானும் நல்ல கட்டுள்ள இளைஞன். இளமையிலிருந்தே உடற்பயிற்சி செய்து உரமேறி யிருந்தது என் உடல். ஒரு போலீசு இன்சுபெக்டருக்கு இருக்கவேண்டிய உடலமைப்பு முழுதும் எனக்கும் உண்டு. இன்னும் கேட்டால், பாண்டியனைவிட மல்லன் என்றே என்னைச் சொல்ல லாம். எதிர்பாரா விதமாய் என்னிடம் அகப்பட்டுக் கொண்டு அவர் திணறிவிட்டார். 'ஓடி வாருங்கள்—ஓடி வாருங்கள்' என்று உதவிக்குத் தம் துணையாட்களைக் கூவியழைத்தார்.

சும்மா சாத்தியிருந்த கதவைத் திறந்து கொண்டு சில காவலர் உள்ளே ஓடிவந்தனர். இவனைப் பிடித்துக் கட்டுங்கள் என்று இன்சுபெக்டர் ஆணையிட்டார். யாரும் என்னருகே நெருங்கவில்லை. மீண்டும் மீண்டும் அவர்களை வற்புறுத்தினர். அவர்கள் அசையவில்லை. "கோழைகளே! பயந்தாங் கொள்ளிகளே! ஒருவனைப் பிடித்துக்கட்ட இத்தனை பேரால் முடியாதா?" என்று இடி முழக்கம் செய்துபார்த்தார். ஒன்றும் நடக்கவில்லை.

அவர் என்னிடம் வந்தால் நான் அறையும் குத்தும் விடுவேன் ஆதலால் அவரும் நெருங்கவில்லை.

போலீசு காவலர்கள், இன்சுபெக்டர் ஆணையை மீறி இப்படி நடந்துகொள்வார்கள் என்று நான் கனவிலும் கருதவில்லை. எல்லோரும் சேர்ந்து என்னைப் பிடித்துக்கட்டி நையப் புடைப்பார்கள் என்றே எண்ணினேன். ஆனால் அது நடக்கவில்லை. ஏன்?

பாண்டியனைத்தவிர மற்ற போலீசார் எல்லோரும் பல நாளாக எங்கள் ஊரில் இருப்பவர்கள். என்னையும் என் தகப்பனாரையும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அவர்களுள் சிலர் எங்கள் மனையில் குடியிருக்கிறார்கள்; சிலருக்கு எங்களிடம் பற்று வரவும் உண்டு. இந்தக் காரணத்தால் அவர்கள் என்னை ஒன்றும் செய்யாது சும்மா இருக்கவில்லை. இதனால் அவர்கள் சும்மா இருந்திருப்பார்களே யானால், அது, தலைவனுக்குக் கீழ்ப்படியாத தவறாகக் கருதப்படும். ஆனால், அவர்கள் எங்களைப் பற்றி நன்றாகப் புரிந்துவைத்திருந்தார்கள். நாங்கள் நல்லவர்கள்—எந்த வீண் வம்புக்கும் போகாதவர்கள்—யாரொருவருக்கும் நன்மையைத் தவிர, சிறு தீமையும் செய்தறியாதவர்கள்—என்பதை அவர்கள் அநுபவவாயிலாகப்புரிந்து வைத்திருக்கிறார்கள். இதனால் மட்டும் அவர்கள் என்னை ஒன்றும் செய்யாது விடவில்லை. பாண்டியன் சொந்த விவகாரம் காரணமாகவே நேர்மையின்றி என்னைத் தாக்குகிறார் என்பதை அவர்கள் நன்றாகப் புரிந்துகொண்டதனாலேயே அவரோடு ஒத்துழைக்காமல்—தம் தலைவராயிருந்தும் அவர் ஆணைக்குக் கட்டுப்படாமல் சும்மா இருந்துவிட்டார்கள். இதுவும் சரிதானே! நீதியின் முன் எல்லோரும் ஒன்றுதானே

அவர்களுடைய நல்ல ஒத்துழைப்பு இல்லாமல் மேற்கொண்டு பாண்டியன் எதுவும் செய்துவிட முடியாது.

பாண்டியன் வருமுன் னிருந்த இன்சுபெக்டர்கள் பலரும் நல்லவர்களே—என் தந்தையாருக்கு நெருங்கிய நண்பர்களாகவும் இருந்திருக்கிறார்கள்—ஊரிலும் அவர்களுக்கு நல்ல பெயர் இருந்தது. ஏன், பாண்டியனுக்குக்கூட ஊரில் நல்ல பெயர் என்றுதான் கேள்விப்பட்டிருந்தேன். ஆயினும், அவர் தம் சொந்தக் காழ்ப்பு காரணமாகவே என்னிடம் முறைதவறி நடந்துவிட்டார். இன்னும் அவருடைய சினம் அடங்கவில்லை.

"இப்பொழுது தப்பித்துக் கொண்டாய்! சரி போ! உன்னை இன்னொரு முறை பார்த்துக்கொள்கிறேன்" என்று பாண்டியன் நஞ்சைக் கக்கினார். "என்னை எப்பொழுதுமே யாருமே எதுவுமே செய்யமுடியாது—மடியில் கனம் இருந்தால்தானே வழியில் பயம் இருக்கும்? நீ உன்னால் ஆனதைப் பார்த்துக்கொள்ளலாம்" என்று பதிலுரைத்தேன் நான். "என்றைக்காவது ஒரு நாள் என் காலில் விழுந்து கெஞ்சும்படி உன்னைச் செய்கிறேன்" என்று அவர் வஞ்சினம் கூறினார். "என் உயிர் போவதாயிருந்தாலும், ஒருபோதும் நான் உன் காலில் விழவும் மாட்டேன்—கெஞ்சவும் மாட்டேன்" என்று கூறிப் பதில் சூள் எடுத்துக் கொண்டேன். அவர் கறுவினார். நான் முறுவினேன். பின்னர் அவ்விடத்தை விட்டு வீடு நோக்கி நடந்தேன்.

அப்பாவிடம் நடந்தவற்றை ஒன்றுவிடாமல் விவரித்தேன். அவர் உணர்ச்சி வயப்பட்டார். "அவனை நம்புவதற்கில்லை; என்றைக்கிருந்தாலும் அவன் பழிவாங்காது விடமாட்டான்; ஆதலால், அவனுக்குமுன் நாம்

முந்திக்கொள்ள வேண்டும்; அவன் இன்சுபெக்டராய் இருந்தால் நமக்கென்ன? அவன்மேல் இப்பொழுதே வழக்குத் தொடுத்துவிட வேண்டும். அவனை நீதி மன்றத்தில் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்று அப்பா துடித்தார். "அப்படியொன்றும் நடந்துவிடாது; தலைக்கு மிஞ்சி வெள்ளம் வரும்போது பார்த்துக் கொள்வோம்" என்று சொல்லி நான் தடுத்துவைத்தேன்.



# 9

இப்படி காலம் ஓடிக்கொண்டிருந்த பொழுது வீட்டிற்கு ஒரு நாள் குருசாமி வந்தார். தாழையூரிலிருந்து கற்பகத்துக்கு மாப்பிள்ளை பார்த்துவிட்டு வந்திருப்ப தாகச் சொன்னார். இன்னும் இரண்டு மூன்று இடங் களையும் குறிப்பிட்டார். அப்பாவும் அதே கவலையாய் இருந்து வந்ததனால், குருசாமி குறிப்பிட்ட இடங்களை ஊன்றிக் கவனித்து, தாழையூர் மாப்பிள்ளையையே தேர்ந் தெடுத்தார். மாப்பிள்ளை படித்தவராம்—அழகாயும் இருப்பாராம்—போதிய பணமும் இருக்கிறதாம்—குணமும் உள்ளவராம். இவற்றினும் இன்னும் என்ன வேண்டும்? அப்பாவுக்குப் பிடித்துவிட்டது. மேற் கொண்டு ஆகவேண்டியதைக் கவனிக்கும்படி சொல்லிக் குருசாமியை அனுப்பினர்.

இதை ஒட்டுக் கேட்டுக்கொண்டிருந்த கற்பகம், மாடியில் இருந்த என்னிடம் ஓடிவந்தாள். தனக்குத் திருமணமே வேண்டாம் என்று மறுக்கத் தொடங்கினாள்:—

"எனக்குத் திருமணமே வேண்டாம் அண்ணா! அப்பாவிடம் சொல்லி எல்லா ஏற்பாட்டையும் நிறுத்தி விடு."

"ஏன் கற்பகம் வேண்டாம் என்கிறாய்?"

"ஆமாம், எனக்கு வேண்டாம் என்றால் வேண்டாம் தான்."

"தாய் தந்தையரின் கீழ் இருக்கும் நாம் அப்படி யெல்லாம் சொல்லலாமா?, அவர்கள் நமக்கு நல்லதே தேடுவார்கள். அவர்களுக்கு நாம் கட்டுப்பட்டுத்தான் நடக்கவேண்டும்."

"என் திருமணத்தை எதிர்பார்க்காமல் நீ முதலில் செய்துகொண்டு அப்பா அம்மாவை நிறைவு செய் அண்ணா! நான் வேண்டுமானால் பிறகு செய்துகொள் கிறேன்."

"கன்னியிருக்கக் காளை மணை ஏறக்கூடாது என்று உலகம் சொல்லுமே! உனக்கு மணம் ஆகாதிருக்கும் போது எனக்கென்ன கற்பகம் அவசரம்?"

"வேண்டாம் அண்ணா! நான் கன்னியாகவே இருந்துவிடுகிறேன்."

கற்பகம்! உன் உள்ளக்குறிப்பு எனக்குப் புரிகிறது. என்னிடம் ஒளிக்காமல் சொல்லு!"

"நான்தான் இதற்கு முன்பே உன்னிடம் சொல்லி யிருக்கிறேனே அண்ணு! முதல் முதல் அந்தப் போலீசு மாப்பிள்ளை பாண்டியன் என்னைப் பார்க்கவந்தார். நான் அவருக்குக் காஃபி கொடுத்தேன். எங்கள் திருமணமும் முடிவாயிற்று. அவர்தான் என் கணவர் என்று நான் நம்பிவிட்டேன். பிறகு அந்த முடிவு தவறிவிட்டது. நான் ஏமாந்து போனேன். எனவே, கட்டிக்கொண்டால் அவரையே கட்டிக்கொள்வது—இல்லாவிடின் கன்னி யாகவே இருந்துவிடுவது என்று தீர்மானித்துவிட்டேன். இந்த உறுதியை என்னுல் மாற்றவே முடியாது அண்ணு! அப்பாவிடம் சொல்லிவிடு!"

"நீ சொல்வது புரிகிறது—ஒத்துக்கொள்கிறேன் கற்பகம்! ஆனுல் இதில் எத்தனையோ சிக்கல்கள் உள்ளன. முதலாவது, அந்தப் பாண்டியன் உன்னை விரும்பவில்லை—அல்லியின்மேலேயே கண்ணுயிருக்கிருர். இரண்டாவது, நான் அவரைப் போலீசு நிலையத்திலேயே தாக்கிவிட்டு வந்துவிட்டேன்; அதனுல் அவர், என் தங்கையாகிய உன்னை மணந்துகொள்ள உடன்பட மாட்டார். மூன்ருவது, அப்பாமேலும் அவர் வெறுப்பா யிருக்கிருர். அல்லியின் பரியத்தை முன்பு நம் அப்பா கலைத்துவிட்டாரல்லவா? நான்காவதோ எல்லா வற்றினும் கடுமையானது. அதாவது, முன்பு நடந்ததை யெல்லாம் மறந்துவிட்டு அந்தப் பாண்டியனே உன்னை வலிய மணப்பதாக வந்தாலும், நம் அப்பா அதற்கு ஒத்துக்கொள்ள மாட்டார். கலப்புமணம் செய்து கொண்டவர்களுக்குப் பிறந்தவரல்லவா பாண்டியன்? சாதிமத உயர்வுதாழ்வுகளில் ஆழ்ந்த நம்பிக்கைகொண்ட நம் பெற்ருேரும் உற்ருர் உறவினரும் இத் திருமணத்திற்கு

உடன்படவே மாட்டார்கள். அதனால், நீ உன் மனத்தை மாற்றிக்கொள்ள வேண்டியதுதான் !"

"நீயுமா அண்ணா இப்படிச் சொல்கிறாய்?"

"நான் என்ன செய்வது கற்பகம்! நம் பெற்றோர் இல்லாமல், நீ என் பொறுப்பில்மட்டும் இருப்பதாயிருந்தால் நான் உன் எண்ணத்தை ஈடேற்றிவிடுவேன். நிலைமை வேறுமாதிரியா யிருக்கிறதே !"

"கலப்புத் திருமணத்தைப்பற்றி நான் கட்டுரைகளில் படித்திருக்கிறேன். உண்மையில் இது போன்றதைக் கலப்புத் திருமணம் என்று சொல்வதற்கில்லை. மனித இனத்திற்கும் மிருக இனத்திற்கும்—அல்லது—மிருக இனத்திற்கும் பறவை இனத்திற்கும் உறவு ஏற்பட்டால் அதுதான் கலப்புத் திருமணம்; வெவ்வேறு இனம் கலக்கிறது; ஆனால் மனித இனத்துக்குள்ளே ஏற்படும் உறவு எப்படி கலப்பு எனப்படும்? எல்லோரும் ஒருகுலம். யார் யாரை வேண்டுமானாலும் மணந்துகொள்ளலாம்—என்று பல கட்டுரைகளில் நான் படித்திருக்கிறேன். அவையெல்லாம்கூட நீ வாங்கி வந்து தந்த இதழ்களிலிருந்து படிக்கப்பட்டவையே! அல்லாமலும், நான் வேறு நிறத்தாரையோ—மொழியாரையோ—சாதிசமயத்தாரையோ மணந்து கொள்ளப் போவதாகக் கூறவில்லையே! நம் இனத்தவராகிய முத்தைய முதலியார் மகனைத்தானே மணக்க விரும்புகிறேன். தாய் மட்டும்தானே வேறு குலத்தைச் சேர்ந்தவர்? எத்தனையோ குடும்பங்களில் இத்தகைய சீர்திருத்தத் திருமணங்கள் நடந்திருப்பது அண்ணாவுக்கும் தெரியுமே! எனக்காக நம் பெற்றோரிடம் அண்ணா போராடக்கூடாதா? இது பற்றி உன் கருத்து என்ன அண்ணா?"

"முன் ஏர் போவது போலத்தான் பின் ஏரும் போகும் என்பார்கள். இத்தகைய சீர்திருத்தக் கருத்துக்கள் எல்லாம் என்மூலம் நீ பெற்றவையே! நானும் ஒத்துக்கொள்கிறேன்–உடன்படுகிறேன்; ஆனால், இந்தக் கோரிக்கையை எடுத்துக்கொண்டு நம் அப்பாவிடம் நெருங்கவே முடியாது!"

"பெண்பிள்ளையால்தான் முடியாது. ஆண்பிள்ளை நீ இருக்கிறாயே அண்ணா! நீ எனக்கு அண்ணன் மட்டும் அல்ல–தாய்தந்தை எல்லாம் நீதான் அண்ணா எனக்கு!"

"ஒட்டாரம் செய்யாதே கற்பகம்! உன் எண்ணம் ஈடேற வேண்டுமானால், இடையிலே எத்தனையோ இமய மலைகளையும்—பசிபிக் பெருங்கடலையும் கடக்கவேண்டும். நானே பாண்டியனுக்குப் பகைவனாகி விட்டேன். அதைக்கூட சரிகட்டி விடலாம்; ஆனால் அப்பாவைத் தான் சரிகட்ட முடியாது. ஒன்று, நம் அப்பா இறக்க வேண்டும்—அல்லது, அவரை மீறி—அவரைப் பகைத்துக் கொண்டு—அவரைப் பிரிந்து நான் உனக்கு இந்தத் திருமணத்தை முடித்துவைக்க வேண்டும். வேறு வழியில்லை கற்பகம்!"

"அண்ணா அண்ணா! அப்படிச் சொல்லாதே அண்ணா! அப்பா இறந்தபின்போ, அல்லது அவரைப் பகைத்துக்கொண்டோ செய்துகொள்ளும் திருமணத்தை நான் விரும்பவில்லை. எதற்கும் அப்பாவிடம் முயற்சி செய்துபார் அண்ணா! எந்தத் தங்கையும் தன் அண்ணனிடத்தில் தன் திருமணத்தைப்பற்றி நாணமில்லாமல் இவ்வளவு வெளிப்படையாகப் பேசமாட்டாள். இளமையிலிருந்தே நீ என்னை நண்பனைப்போல் பழக்கிப் புரட்சிகரமாக—சீர்திருத்தமாக வளர்த்து வந்ததனாலேயே

நான் உன்னிடம் இதுபற்றி மனம்விட்டுப் பேசுகிறேன். அடுப்பங்கரையில் அடைபட்டுக் கிடக்கும் பெண்ணின் மனத்தை அப்பாவிடம் எடுத்துச்சொல் அண்ணு! பெண்களுக்கும் மனம் உண்டு--மனவெழுச்சிகளாகிய இன்பம், துன்பம் எல்லாம் உண்டு என்று நினைவுசெய்துவை அண்ணு! ஒருவனுக்குக் காஃபியும் தாம்பூலமும் கொடுத்துவிட்டு, இன்னொருவனை மணந்துகொள்ள எல்லாப் பெண்களுமே உடன்பட மாட்டார்கள். வருவார் போவாரிடமெல்லாம் காட்டிப் பேரம்பேசப் பெண்கள் என்ன ஆடா? மாடா? என்று அப்பாவிடம் கேட்டுவை அண்ணு! இனி எந்தப் பயலை அழைத்துக் கொண்டு வந்தாலும், நான் அவனெதிரே ஆடிக் காட்டவோ--பாடிக் காட்டவோ முடியாது. வருபவன் எவனும் என்னைப் பார்க்கவும் முடியாது. இதையும் அப்பாவிடம் சொல்லிவிடு அண்ணு!"

என்று சொல்லி விம்மி வெதும்பிக்கொண்டே கற்பகம் அப்பால் அகன்று சென்றுள். அவள்மேல் எனக்கிருந்த அன்பு முன்னிலும் பெருகியது. மிகவும் இரக்கப் பட்டேன். பெண்மனம் எத்தகையதென்று புரிந்து கொண்டேன். குரு குசனைப் பார்க்கிருன். குசன் சுக்கிரனைப் பார்க்கிருன், சுக்கிரன் சூரியனைப் பார்க்கிருன், நான் உன் பையிலுள்ள பணத்தைப் பார்க்கிறேன் என்று சோதிடர்கள் சொல்வதுபோல, கற்பகம் பாண்டியனைப் பார்க்கிருள், பாண்டியனே அல்லியைப் பார்க்கிருன், அல்லியோ என்னைப் பார்க்கிருள், நானே என் தலையெழுத்தைப் பார்க்கிறேன். என்ன செய்வது!

சிறு வயதிலிருந்தே அண்ணன் தங்கை என்ற முறையில் இல்லாது, நண்பனைப்போல வேடிக்கை விளையாட்டுகளுடன் கற்பகத்திடம் பழகிவந்த

என்ருலேயே அவள் இவ்வளவு உறுதியாக இருப்பாள் என்று முன்கூட்டி உணரமுடியவில்லை. அப்பா எங்கே உணரப்போகிருர்? நம் நாட்டில் பெண்மனத்தைப் புரிந்து மதித்து நடக்கும் அளவுக்குப் பெற்ருேர்கள் இன்னும் தயாராகவில்லை. ஆண்மக்களாயினும் பெற்ருேர்களை அச்சுறுத்திக் காரியத்தை முடித்துக் கொள்கிருர்கள். பெண்மக்கள் யாது செய்வர்? பெற்ருேர்கள், பிள்ளைகளின் மனவெழுச்சிகளைப் புரிந்து மதித்து அவற்றிற்குத் தக்க போக்குக் காட்டாது, அவற்றினை அடக்கி ஒடுக்கி நசுக்குவார்களேயாயின், அம்மனவெழுச்சிகள் நீறுபூத்த நெருப்பே போல உள்ளேயே கனிந்துகொண்டிருந்து, உறுமீன் வருமளவும் வாடியிருக்கும் கொக்கைப்போல உரிய காலம் வந்ததும் உரிய உருவத்தைக் காட்டத்தான் செய்யும்!

நான்தான் இளிச்சவாயன். பிள்ளைகள் முதலில் பெற்ருேர் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்—பிறகு தான் தம் விருப்பத்தைக் கவனிக்க வேண்டும்—பெற்ருேர்க்காக எந்தத் தியாகமும் செய்ய வேண்டும் என்று நான்தான் சொல்லிக்கொண் டிருக்கிறேன். உலகில் எல்லாப் பிள்ளைகளுமே இப்படி யிருப்பார்களா? எனவே, பிள்ளைகளின் நிலையறிந்து—அதிலும் பெண் மனம் அறிந்து பெற்ருேர்களுந்தான் விட்டுக்கொடுக்க வேண்டும். இந்தத் திருத்தங்கள் எல்லாம் நம் நாட்டில் ஏற்பட இன்னும் எத்தனை நூற்ருண்டுகள் ஆகுமோ?

கற்பகத்தின் கட்டைத் தூக்கிக்கொண்டு, அவளுடைய வழக்கறிஞனக அப்பாவிடம் வாதாடச் சென்றேன். செவ்வியறிந்து அவரிடம் மெல்ல நிலைமையை எடுத்துச் சொன்னேன். 'இப்படியொரு பெண்ணும் எனக்குப் பிறந்திருக்கிருளா?' என்று அவர் மூக்கின்மேல்

விரல்வைத்துக் கொண்டார். இதை என்னிடம் வந்து சொல்வற்கு உனக்கு வெட்கமாக இல்லையா? நீங்கள் இருவரும் எனக்குத்தான் பிறந்தீர்களா? இல்லையா? என் உயிர் இருக்கும்வரை, சாதிகெட்ட பயலுக்கு என் பெண்ணைக் கொடுக்க நான் உடன்படவே மாட்டேன். நமக்குப் போட்டியாக வந்த மாயாண்டியே விலகிவிட்டிருக்கும்போது நான் மட்டும் ஏமாந்தவனா?"

"இல்லப்பா! வந்துப்பா........!"

"என்ன இல்லை! வந்து! ஒரே பெண்ணாயிற்றே என்று நான் கற்பகத்தின்மேல் உயிரையே வைத்திருந்தேன். இப்பொழுது அவளை மிகவும் மட்டமாக மதிக்கிறேன். முன்பின் அறியாத ஒருவனிடம் இவளுக்கு என்ன காதல் வேண்டியிருக்கிறது? காமுகி! பெண்ணா இவள்? இல்லை—பேய்—பிசாசு!"

"அவளை அவ்வளவு மட்டமாக மதிக்கவேண்டாம் அப்பா! கற்பகம் கற்புக்கரசி! கற்பு அகம் கொண்ட கற்பகம் அவள்! அவளுடைய கற்பு அகமே—கற்பு உள்ளமே அவளை இந்த முடிவுக்குக் கொண்டுவந்திருக்கிறது. முதலில் பாண்டியனுக்குக் காஃபியும் தாம்பூலமும் தந்து, தானும் அவன் உள்ளத்தில் இடம்பெற்று, அவனுக்கும் தன் உள்ளத்தில் இடங்கொடுத்து விட்டாள். உலகம் அறியாதவள் ஆதலின், அவனே தன் கணவன் என நம்பிவிட்டாள். மேலும் அவள் இளமையிலிருந்தே போலீசு இன்சுபெக்டரை மணந்துகொள்ளப் போவதாக விளையாட்டாகச் சொல்லி வந்தாள் அல்லவா? இப்போது அது பலித்து விட்டதாகவும் எண்ணி இறுமாந்து எக்களிப்புக் கொண்டிருந்தாள். இந்நிலையில் அவள் எண்ணத்தில் மண் விழுந்துவிட்டது. வேட்டைக்காரர்கள்,

முன்னர் இன்னிசை எழுப்பி அசுணப் பறவைகளை மயங்கச்செய்து, பின்னர் பறைகொண்டு வல்லோசை முழக்கி அவற்றைக் கொல்லுதல்போல, நாம் இப்போது அவளைக் கொல்லாமல் கொன்று வருகிறோம். அவள்மேல் ஒன்றும் தவறில்லை—இது நம்முடைய தவறுதான்— 'ஆசைகாட்டி மோசம் செய்த குற்றம்' நம்முடையதுதான் அப்பா நம்முடையதுதான். நீங்கள் அப்போது பாண்டியன்முன் அவளை அனுப்பியிருக்கக் கூடாது— அவனுக்கு ஒன்றும் கொடுக்கவைத்திருக்கக் கூடாது. இது மிகவும் கெட்ட பழக்கம். இப்பொழுதும் கற்பகம் என்ன சொல்லுகிறாள் தெரியுமா? நீங்கள் நினைக்கிறபடி அவள் ஒன்றும் காமப்பித்து கொண்டவள் அல்லள். கற்பு நெறியிலேயே நிற்கிறாள். கட்டிக்கொண்டால் பாண்டியனைக் கட்டிக்கொள்வது—அல்லது கன்னியாகவே காலம் கழிப்பது என்ற முடிவில்தான் இருக்கிறாள். இனி எந்த மாப்பிள்ளை பார்க்க வந்தாலும் அவள் வெளியே வரமாட்டாளாம்—அவளை யாரும் பார்த்து விட்டுப் போக முடியாதாம். அது சரிதானே?—சூடுண்ட பூனையல்லவா? ஆனால், வருகிற எந்த மாப்பிள்ளையும் பெண்ணைப் பார்க்காமல் மணந்து கொள்ள இந்தக் காலத்தில் ஒத்துக் கொள்ளப் போவதில்லை. இதற்கு என்ன செய்வது? நீங்களே சொல்லுங்கள் அப்பா!"

"நான்தான் சொல்லிவிட்டேனே! உற்றார் உறவினருக்கு நான் பதில் சொல்லியாக வேண்டும். இந்த உடம்பிலே உயிர் ஒட்டிக்கொண்டிருக்கிற வரைக்கும் நான் இந்தக் கலப்பு மணத்துக்கு ஒத்துக்கொள்ள முடியாது: நீயாயிற்று—அவளாயிற்று. வேண்டுமானால்,

நானும உன் அம்மாவும் காசி இராமேசுரம் போய்விடு கிறோம். நீங்கள் இருவரும் உங்கள் விருப்பப்படி நடந்து கொள்ளுங்கள். அவ்வளவுதான் நான் சொல்லலாம்."

என்று வருத்தத்துடன் சொல்லிக்கொண்டே அப்பா நாற்காலியைவிட்டு எழுந்தார். அம்மாவும் அப்பாவையே ஆதரித்துப் பேசினார்கள். நான் அறை வாயிற்படியண்டை நின்றுகொண்டிருந்த கற்பகத்தைப் பார்த்தேன்—கற்பகம் என்னைப் பார்த்தாள்—இருவரும் 'பேந்த பேந்த' விழித்தோம். கண்ணைக் கசக்கிக் கொண்டே கற்பகம் என் கண்ணிலிருந்து மறைந்தாள். நானும் கண் கலங்கினேன்.

இந்த நேரம் பார்த்து, கலிங்கநத்தத்திலிருந்து காளியப்பன் என்பவர் வந்தார். முத்தைய முதலியார் அனுப்பியிருப்பதாக அப்பாவிடம் கூறினார். என்ன செய்தி என்று அப்பா வேண்டா வெறுப்புடன் கேட்டார்.

"தம் மகன் பாண்டியன் திருமண விவகாரமாக அவர் உங்களிடம் என்னை அனுப்பினார்."

"இதற்கு முன்பு இரண்டுமுறை எங்களோடு செய்துகொண்ட ஏற்பாட்டை முறித்துக்கொண்டாரே, மீண்டும் ஏன் எங்களிடம் வருகிறார்? 'சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்தான் ஆண்டி' என்றபடி அவர் கெடுத்தவரையும் போதாதா? அவமானப் படுத்தியது போதாதா? விளையாடுகிறாரா என்ன? பெண் என்று நினைத்தாரா? அல்லது கத்தரிக்காய் பேரம் என்று எண்ணிக்கொண்டாரா? அவருக்கும் அவர் மகனுக்கும் 'எங்கள் வீட்டுப்பெண் பிடிக்காதே! இன்னும் பெரிய

இடமாக—அரம்பை ஊர்வசியாகப் பார்ப்பார்களே! நாங்கள் எங்கே போவோம்? இன்னொரு வீடு போய்ப் பார்க்கச் சொல்லும்!"

"நான் சொல்வது முழுமையும் பொறுமையாகக் கேளுங்கள்! அவர் முன்னைய முத்தைய முதலியார் அல்லர்—இப்போது புது முத்தைய முதலியாராக ஆய்விட்டார். முந்தி நடந்து போனதற்காக மிகவும் வருத்தப்பட்டார். உங்களிடம் ஆறுதல் சொல்லச் சொன்னார். இப்போது முடிவாக உங்கள் மகளையே கட்டுவதென்று உறுதிபூண்டுவிட்டார். இனி இந்த முடிவு மாறாது."

"எப்படி இந்த முடிவுக்கு வந்தார்?"

"அதுவா? மாயாண்டி முதலியார் தம் மகளைக் கொடுப்பதாகச் சொல்லித் திடீர் என்று மறுத்துவிட்டாரல்லவா? அதனால் அவருக்குப் போட்டியாக உங்கள் மகளையே கட்டி அவரை அவமானப் படுத்தவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டார்."

"எனக்குப் போட்டியாக வந்த மாயாண்டியே பெண் கொடுக்க மறுத்துவிட்டபோது, நான்மட்டும் எப்படிக் கொடுக்க முடியும்? அவன் ஏன் கொடுக்கவில்லை தெரியுமா?"

"தெரியும்—தெரியும்! நாங்கள் பிறகு கேள்விப் பட்டோம். முத்தைய முதலியாரின் மனைவி வேறு குலத்தைச் சேர்ந்த பெண் என்பதால் கொடுக்கவில்லையாம்."

"அப்படியென்றால் நான்மட்டும் எப்படிக் கொடுப்பேன்? நான் என்ன சாதிகெட்ட சடையனா?"

"நீங்கள் சொல்வது சரியன்று. இங்கே ஓர் உண்மை இருக்கிறது; அதை யாரும் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை."

"என்ன அது?"

"பாண்டியன், முத்தைய முதலியாருக்கும் இப்பொழுதுள்ள மனைவிக்கும் பிறந்த பிள்ளை இல்லை. முத்தைய முதலியாருக்கு இப்பொழுது இருப்பவள் இரண்டாந் தாரம்--கலப்புமணம் செய்துகொண்டவள். அவருடைய முதல்தாரத்துப் பையன்தான் பாண்டியன். முதல்தாரத்து மனைவியோ, உங்கள் குலமாகிய முதலியார் வகுப்பைச் சேர்ந்த பெண்தான். நீங்கள் நன்றாக விசாரித்துப் பார்த்தால் உண்மை தெளிவாகும். இரண்டாவது மனைவி, தனக்குப் பிள்ளையில்லாததால், தன் சொந்த மகனாகவே கருதிப் பாண்டியனை வளர்த்து வந்தாள். பாண்டியனும் அவளை மாற்றாந்தாயாகக் கருதாமல் சொந்தத் தாயாகவேகருதி வளர்ந்துவந்தான். இதுதான் உண்மை. சத்தியம் வேண்டுமானாலும் செய்கிறேன்."

"ஓ, அப்படியா! இருந்தாலும் இருக்கலாம். ஆனாலும், முத்தையமுதலியார் நடுவில் சாதிவிட்டுச் சாதி தாண்டித்தானே இருக்கிறார்."

"அதனால் என்ன? சாதிகெட்டுப் பிறந்த பிள்ளைக்கு நீங்கள் பெண் கொடுக்கப்போவதில்லையே! மேலும் இரண்டாவது மனைவிக்குப் பிள்ளையே கிடையாது. இந்தத் தலைமுறையோடு இந்த வடு நீங்கிவிடும். அப்புறம் எதைப்பற்றி உங்களுக்குக் கவலை?"

"நீர் சொல்வது சரிதான். ஆனால் முத்தைய முதலியார் மட்டும் ஒத்துக்கொண்டால் போதுமா? அவர் மகன்

பாண்டியன் ஒத்துக்கொள்ள வேண்டுமே! முந்திகூட மாப்பிள்ளை தானே மறுத்துவிட்டார்? அதுவுமல்லாமல், என் மகனும் பாண்டியனும் ஒரு நாள் மோதிக்கொண் டிருக்கிறார்கள். இந்த நிலையில் அவர் எப்படி ஒத்துக் கொள்வார்? பழையபடி வேதாளம் முருக்க மரத்தில் ஏறிக்கொண்டால் என்ன செய்வது?"

"மகனையும் கலந்துகொண்டுதான் முத்தைய முதலி யார் என்னை உங்களிடம் அனுப்பியுள்ளார். முதலில் மகன் ஒத்துக்கொள்ளவில்லைதான். மாயாண்டி முதலி யார் மகளையே கட்டவேண்டும் என்று சொன்னார், அதற்கு முத்தைய முதலியார் மகனைப் பார்த்து. 'பாண்டியா! மாயாண்டி மகள் அல்லி உன்னை வெறுக் கிறாள் என்றும், அம்பலவாண முதலியார் மகள் கற் பகமோ உன்னைத் தவிர வேறு யாரையும் மணப்பதில்லை என்று இருக்கிறாள் என்றும் குருசாமி என்னிடம் கூறி யிருக்கிறார். தானாக வருகிற திருமகளைக் காலால் உதைத்துத் தள்ளாதே' என்று தாங்க உரைத்தார். இதைக் கேட்டதும், பாண்டியன் மனம் மாறிவிட்டது. படித்த பிள்ளையல்லவா? 'என்ன! அல்லி என்னை வெறுக்கிறாள்; கற்பகம் என்னையே விரும்புகிறாளா? அப்படியென்றால் அந்தப் பெண்ணைத்தான் மணந்து கொள்வேன். என்னை விரும்பும் பெண்ணோடு நடத்தும் இல்லறமே இனிப்பாயிருக்கும்' என்ற முடிவுக்குப் பாண்டியன் வந்தார். தந்தையிடம் தன் உடன்பாட்டை யும் தெரிவித்தார். ஆனால் ஒரே ஒரு கட்டாயம் விதித் திருக்கிறார். அதை நிறைவேற்றினால் உங்கள் பெண்ணை அவர் மணந்து கொள்வாராம்."

"என்ன கட்டாயம் அது?"

"உங்கள் மகன் அழகன் காவல் நிலையத்தில் பலர் முன்னிலையில் பாண்டியனைத் தாக்கி அவமானப்படுத்தி விட்டாராம். அப்போது பாண்டியன் அழகனைப் பார்த்து, 'உன்னை என்றைக்காவது ஒருநாள் என் காலில் விழுந்து கெஞ்சச் செய்கிறேன்' என்று வஞ்சினம் கூறினாராம். 'உயிர் போனாலும் உன் காலில் விழவேமாட்டேன்' என்று உங்கள் மகன் பதிலுக்குச் சொல்லிவிட்டு வந்தாராம். எனவே, உங்கள் மகன், தன் காலில் விழுந்து மன்னிப்பு கேட்டுக்கொண்டால் கற்பகத்தை மணந்து கொள்வதாகப் பாண்டியன் சொல்லிக்கொண் டிருக்கிறார். இவ்வளவுதான் நான் சொல்ல வந்தது. இனி, நீங்களாயிற்று—அவர்களாயிற்று."

இவ்வாறு காளியப்பன் சொல்லி முடித்ததுமே, அப்பா—அம்மா—கற்பகம் எல்லோருமே கலவரத்துடன் என்னை நோக்கினார்கள். கற்பகத்தின் திருமணமே என் கையில் இருப்பதாக அவர்கள் நினைப்பதுபோல் அவர்களின் பார்வை எனக்குத் தோன்றியது. நான் பாண்டியன் காலில் விழுந்தால் கற்பகத்துக்குத் திருமணம்—இல்லையேல் அவள் காலமெல்லாம் கன்னிதான்! வணங்காமுடி மன்னனாக வளர்ந்துவந்த என்னுடைய தன்மானத்துக்கு இவ்வளவு பெரிய சோதனையா? இதற்கு நான் ஒத்துக்கொள்வதா?

தனி மனிதன் ஒருவனது தன்மானத்துக்காக ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழ்படுத்துவதா? பயனற்ற வரட்டு மதிப்பிற்காக ஒரு திருமணத்தைத் தடைசெய்வதா? யார் யாரோ யார் யாருக்கோ என்ன என்ன தியாகமோ செய்திருக்கும்போது ஒரு தங்கைக்காக ஓர் அண்ணன் இந்தத் தியாகத்தைச் செய்யக்

கூடாதா? பாரி தன் தேரை முல்லைக்கொடிக்கும், பேகன் தன் போர்வையை மயிலுக்கும், அதியமான் நீண்டநாள் வாழவைக்கும் நெல்லிக்கனியை ஔவைக்கும், சிபி என்னும் சோழன் தன்னையே ஒரு புருவிற்காகவும் ஆகத் தியாகம் செய்தார்களாம். நான் உயிரினும் இனிய ஒரே தங்கைக்காக எனது வீராப்பைத் தியாகஞ் செய்யக்கூடாதா?

இல்லையில்லை—நான் ஒருவன் காலில் விழமுடியாது. இது எனக்குப் பெருத்த மானக்கேடு! என் உடலிலுள்ள ஒவ்வோர் உயிர்அணுவுக்கும் மானக் குறைவு! இதற்காகவா இந்தத் தசை மூட்டையை இவ்வளவுநாள் வளர்த்தேன்? ஒருவன்காலில் விழுந்து கெஞ்சிவிட்டு உயிரோடு எப்படி உலாவுவது? காலில் விழுந்து பெண்ணைக் கட்டிக்கொடுத்தார்கள் என்ற மறையாத மறு—அழியாத களங்கம் ஆணி யறைந்தாற்போல் எங்கள் குடும்பத்தோடு பதிந்துவிடுமே? இந்தப் பழி இப்போது இருக்கின்ற எங்களுக்கு மட்டுமா? இனி வாழையடி வாழையாக வழி வழி வரவிருக்கின்ற எங்கள் மரபினர் அனைவருக்குமே இந்த வடு நீங்காதே! நான் ஒருகாலும் இதற்கு உடன்படேன். எவள் வாழ்ந்தால் என்ன—செத்தால் என்ன? எவள் கட்டிக்கொண்டால் என்ன—கன்னியாகவே காலங்கழித்தாலும் எனக்கென்ன? அண்ணனது மானத்தைப் பறிகொடுத்து, வழி வழிவந்த குடும்பத்தின் மாண்பினைக் காற்றில் பறக்க விட்டு, ஒரு பெண் மணந்துகொண்டு வாழ்வதைவிட, வாழா வெட்டியாக இருந்து மடிவதேமேல்!

இல்லையில்லை—என் தங்கை வாழத்தான் வேண்டும். பெண் என்றால் பேயும் இரங்கும் என்பார்களே—அண்ணன் இரங்கக்கூடாதா? மான உணர்வு முனைப்

புற்று என் அறிவைக் குழப்ப இனியும் இடங்கொடுக்க மாட்டேன். மானம் போவதாயின் உயிரே போக வேண்டும் என்பார்கள்—உண்மைதான்—ஒத்துக்கொள் கிறேன். என் மானத்தை யிழப்பதன் மூலம் தங்கையை மணக்கோலத்தில் கண்டு மகிழ்ந்து, பின்பு உயிரையே விட்டு அந்த மானத்தை மீட்பேன். இதுதான் சரி! இல்லாவிடின், தன்னலக்காரன்—தங்கையைப் புறக் கணிப்பவன் என்று தாய்தந்தையர் என்னைத் தூற்று வார்கள் அல்லவா? ஈரப்பசையற்றவன்—இருதயமே இல்லாதவன் என்று கற்பகமும் காய்ந்து என்னைக் கருக்கிக் கொட்டுவாள் அல்லவா? எனவே, மானத்தை விலையாகக் கொடுத்தாவது கற்பகத்தின் திருமணத்தைக் கண்டுகளிக்க வேண்டும்—

என்ற முடிவுக்கு வந்தவனாய், பாண்டியனுடைய கால்களில் விழுந்து மன்னிப்பு கேட்டுக்கொள்ள உடன் படுவதாகக் காளியப்பனிடம் நான் தெரிவித்தேன். என் முடிவை யறிந்து, அப்பாவும் அம்மாவும் கற்பகமும் மகிழ்ச்சியடைவதைக் கண்டு சுவைப்பதற்காக அவர் களின் முகங்களை மாறிமாறி நோக்கினேன். என் எண்ணத்திற்கு மாறாக அவர்களிடம் பெரிய மாறுதலைக் கண்டேன்.

"எங்கள் மகன் எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஒருவன் காலில்விழ ஒருபோதும் நாங்கள் ஒத்துக்கொள்ள மாட்டோம். அப்படிச் செய்வதால் ஆயிரம் காரியம் கூடிவருவதானாலும் சரி—செய்யாமற் போவதால் ஆயிரம் காரியம் கெட்டுப்போவதானாலும் சரி — ஒருகாலும் நாங்கள் உடன்பட முடியாது. இதனால் எங்கள் மகள் மணந்துகொள்ளாமல் மடிவதானாலும் எங்களுக்கு உடன்பாடே! அவளுக்காக, எங்கள் ஒரே செல்வனை—

அருந்தவ மகனை—ஆருயிரை, எங்கள் உயிர் இருக்கும் போதே, யாங்கள் அறிய ஒருவன் காலில் விழுவதற்கு விடவே மாட்டோம். ஐயா காளியப்பரே! உங்கள் மாப்பிள்ளையும் கெட்டான்—அவன் உறவும் கெட்டது, நீர் எழுந்து போகலாம்"

என்று அப்பாவும் அம்மாவும் கன்னத்தில் அறைவது போல் கடிந்து பேசிவிட்டனர். "சாமி வரங்கொடுத்தும் பூசாரி வரங்கொடாததைப் போல, அண்ணன் ஒத்துக் கொண்டும் அப்பாவும் அம்மாவும் உடன்படவில்லையே! இவர்கள் மனம் என்ன கல்லா? ஏன் என்னை இவர்கள் பெற்ருர்கள்? இவர்களை நோக்க அண்ணன் எவ்வளவோ மேல்" என்று கற்பகம் எண்ணிக்கொண் டிருப்பாள் என்று கருதி அவள் முகத்தை நோக்கினேன். அவளோ, என் காலில் வந்து விழுந்து கதறத் தொடங்கிவிட்டாள்.

"அண்ணு அண்ணு! எனக்காக நீ எவன் காலிலும் விழவேண்டியதில்லை—மன்னிப்பும் கேட்க வேண்டிய தில்லை—உன் மானத்தை வாங்கி நான் மணந்து கொள்ளவும் வேண்டியதில்லை. இந்தத் திருமணத்தையே நிறுத்திவிடுங்கள். எனக்கு அண்ணன் பெரிதே தவிர திருமணம் அன்று. என் உயிரினும் இனிய அண்ணனைக் காலில் விழச்சொல்லுகிற மாப்பிள்ளையும் எனக்கு வேண்டாம். நான் என் மனத்தை மாற்றிக்கொண்டேன். இனிஎவனை வேண்டுமானுலும் மணந்துகொள்ளத் தயாரா யிருக்கிறேன். என் அண்ணன் சீருஞ் சிறப்புமாய் வாழ்ந் தால் அதுவே எனக்குப் போதும்!"

என்று என் காலைக் கட்டிக் கொண்டு கற்பகம் கதறினுள். என்ன செய்வதென்றே எனக்குப் புரியவில்லை. பெற்று வளர்த்த பெரும் பற்று காரணமாக, யான் யார்

காலிலும் விழக்கூடாதென்று என் பெற்ருேர் நினைப்பதும் சரிதான்—என்னை உயர்ந்த நிலையில் வைத்துக்காண முயலுவதே அவர்கள் கடமை. அதேபோல, தன்ஞல் அண்ணனுக்கு எந்த இழிவும் ஏற்படாதபடிப் பார்த்துக் கொள்வது கற்பகத்தின் கடமை—அதுவும் சரிதான்! ஆனல் என்கடமை என்ன?

பெண்ணைக் கட்டிக்கொடுக்க வேண்டுமே என்று பேதுற்று மயங்கும் பெற்ருேரின் சுமையைக் குறைக்கவேண்டியது பிள்ளையின் கடமையல்லவா? தன் வாழ்வு என்ன ஆகுமோ என்று தவித்துத் தத்தளிக்கும் தங்கைக்கு நல் வாழ்வு தேடித்தருவது அண்ணன் கடமையல்லவா? ஆம்; கடமையாற்றப் புறப்பட்டேன்.

"நீ போய் அவன் காலில் விழுந்துவிட்டு வீட்டிற்குத் திரும்புவாயே யானல், எங்களை உயிரோடு இங்கே பார்க்கமுடியாது" என்று சொல்லி அப்பாவும் அம்மாவும் கற்பகமும் புரட்சி செய்தார்கள்.

"இப்படியே முட்டுக்கட்டை போட்டுக்கொண்டே போனல், கற்பகத்திற்கு எப்போது திருமணம் ஆவது? என் ஒரே ஒரு தங்கைக்கு—உயிரினும் மேலான தங்கைக்குக் காலத்தோடு திருமணஞ் செய்துவைத்துக் கண்குளிரப் பார்க்க எனக்கு உரிமையில்லையா? தன் மனத்துக்கு உகந்த மணவாளனேடு அவள் வாழ்வதைப் பார்த்துப் பூரிப்புகொள்வதற்கு நான் கொடுத்துவைக்க வில்லையா? உங்களுக்கு இது பொறுக்க வில்லையா? அப்படியென்ருல் என்னையும் யாரும் உயிரோடு பார்க்க முடியாது" என்று நான் அடித்துப்பேசி, அவர்கள் போட்ட அதிர்வேட்டுக்கு ஓர் எதிர்வேட்டு கிளப்பினேன். மூவரும் திகைத்துப்போனர்கள். வாய் திறக்கவில்லை.

அவர்களின் அமைதி, எனக்கு வழி விட்டதுபோல் ஆயிற்று—விடையளித்தது போல் பொருள் தந்தது. கையோடு காளியப்பனையும் அழைத்துக்கொண்டு, இன்சு பெக்டர் பாண்டியனது இருப்பிடம் ஏகினேன்.

இந்த உடலை எப்படி பாண்டியன் காலில் கிடத்துவது என்று தயங்கிக்கொண்டே சென்றேன். குறித்த இடத்தை யடைந்ததும், என்னை வெளியில் இருக்கச்செய்து, தான்போய்ப் பாண்டியனிடம் முன்னறிவிப்புச்செய்துவிட்டு வருவதாகச் சொல்லிக் காளியப்பன் உள்ளே போனார். அவர் திரும்பிவரச் சிறிது நேரம் பிடித்தது. அதற்குள் என் மனம் எண்ணில் கோடி எண்ணிற்று : "பாண்டியன் என்ன சொல்வாரோ? என்ன செய்வாரோ? என்னை ஏற்று மன்னிப்பாரோ—மாட்டாரோ? ஏசிப்பேசி அனுப்பி விடுவாரோ—அடித்து உதைத்து விரட்டி விடுவாரோ? வஞ்சினத்தை நிறை வேற்றுவதற்காக என்னைக் காலில் விழச்செய்து, பின்பு கற்பகத்தை மணந்துகொள்ள முடியாதென்று ஏமாற்றி விடுவாரோ-என்னவோ?" என்று எண்ணுதனவெல்லாம் எண்ணிக்கொண்டிருந்த போது, காளியப்பன் வந்து என்னை உள்ளே அழைத்துக்கொண்டு போனார்.

ஓர் அறையில் பாண்டியன் நாற்காலியில் அமர்ந் திருந்தார். நான் தயங்கித் தயங்கித் தடவிக்கொண்டே அறைக்குள் அடியெடுத்து வைத்தேன். எனக்கு உடம்பு இருப்பதாகவே தெரியவில்லை. கால்கள்மட்டும் காற்றில் மிதப்பதாகத் தெரிந்தது. என் உடம்புதான் நாணத் தால் நலிந்து மெலிந்து தேய்ந்து கரைந்துவிட்டதே! என்னைக் கண்டதும் பாண்டியன் எரிமலையாக எகிறிக் குமுறி வெடிப்பார் என்று எண்ணினேன். ஆனால் அவர் தலையைத் தாழ்த்திக்கொண்டார். பிறகு அவர் நிமிர்ந்த

போது நான் தலையை நட்டுக்கொண்டேன். 'உட்காரு தம்பி' என்று சொல்லிக் காளியப்பன் ஒரு நாற்காலியைக் காட்டினார். நான் உட்காரவில்லை. பிறகு பாண்டியனும் அதேபோல் கையால் சைகை காட்டினார். அப்பொழுதும் நான் உட்காரவில்லை. அவர் அவ்வளவு தூரம் இறங்கிவருவார் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை?

"நான் அன்றைக்கு உங்களை என் அறியாமை காரணமாக எதிர்த்துக்கொண்டேன். அப் பெரும்பிழையைத் தயவுசெய்து மன்னிக்க வேண்டுகிறேன். அதற்காக என்ன தண்டனை கொடுத்தாலும் இன்புடன் ஏற்றுக்கொள்கிறேன். உங்கள் காலில் விழவும் தயாராயிருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே நான் பாண்டியனை நெருங்கினேன்.

உடனே பாண்டியன் எழுந்து நின்று, "வேண்டாம் வேண்டாம்! என்காலில் நீங்கள் விழுந்து மன்னிப்பு கேட்கவேண்டாம்! நான்தான் உங்கள்காலில் விழுந்து மன்னிப்பு கேட்கவேண்டும். நீங்கள் என்காலில் விழுந்தால்தான் உங்கள் தங்கையை மணந்துகொள்வேன் என்று சொல்லியனுப்பியது என்னவோ உண்மைதான்! ஆனால், உங்களின் உயர்ந்த பண்பினை—தங்கைக்காக நீங்கள் செய்யத்துணிந்த தியாகத்தினை இப்போது காளியப்பன் வந்து சொன்னவுடன் என் மனம் முற்றிலும் மாறிவிட்டது. ஏமாற்றம் காரணமாக இடையிலே ஏற்பட்ட எனது அரக்க உணர்வு அடியோடு அழிந்துவிட்டது. உங்கள் உயர்குணம் அறியாது நான்தான் அன்று உங்களை வம்புக்கிழுத்து முதலில் தாக்கிவிட்டேன். அதற்காக நான்தான் உங்கள் காலில் விழுந்து மன்னிப்பு கேட்கவேண்டும். முதலில் பார்த்த

என்னையே மணந்துகொள்ள வேண்டும் என்ற நோன்பு கொண்டுள்ள கற்புக்கரசி கற்பகத்தை என் மனைவியாகவும், தியாகத்தின் திரு உருவமாகிய உங்களை என மைத்துனராகவும் பெறுவதற்கு நான் எவ்வளவோ தவம் செய்திருக்க வேண்டும்" - —என்று சொல்லிக் கொண்டே என்னை மார்போடு மார்பு ஆரக்கட்டித் தழுவிக்கொண்டார். நான் உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கித் தத்தளித்துப்போனேன். அந்த நேரம் பார்த்து வந்த காஃபியை அருந்தினோம். அந்தக் காஃபி திருமண விருந்தாகவே எனக்கு இனித்தது.

வெற்றியுடன் திருமண ஏற்பாடு வேகமாக நடக்கத் தொடங்கியது. மணமக்களின் பெற்றோர்கள் மகிழ்வுடன் கூடிப் பேசினர். ஆனால் இடையிலே ஒரு சிறு இடையூறு தலைகாட்டியது.

என்னைப் போலவே—கற்பகத்தைப் போலவே பாண்டியனும் தாய்மொழிப் பற்று மிக்கவர்—மறுமலர்ச்சி உள்ளம் உடையவர். எனவே, வடமொழிச் சடங்கு கொண்டு தம் திருமணத்தை நடத்தக்கூடாது; தமிழ் மணமாகவே தம் திருமணம் திகழவேண்டும் என்ற விண்ணப்பத்தைத் தம் தந்தையாரிடம் செலுத்தினார். அதேபோல் நானும் கற்பகமும் எங்கள் தந்தையாருக்கு விண்ணப்பம் போட்டோம். அவர்கள் இருவரும் எங்கள் விண்ணப்பங்களைக் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டார்கள். மொழிப்பகையோ—சாதிப் பகையோகூடாது என்று திருவாய் மலர்ந்து எங்களுக்குப் பல அறிவுரை வழங்கினார்கள். "நாங்கள் எந்தச் சாதியாரையும் வெறுக்கவில்லை. நமக்குப் புரியக்கூடிய நமது தாய்மொழியிலேயே நமது நிகழ்ச்சியை நடத்தவேண்டும் என்பதுதான் எங்கள் குறிக்கோள். எந்தச் சாதியார்

வேண்டுமானாலும் இந்தத் திருமணத்தை நடத்திவைக்கலாம்—ஆனால் தமிழ்மொழியில் நடத்தவேண்டும்" என்று எவ்வளவோ நாங்கள் எடுத்துச் சொன்னோம். அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. "தமிழ்த் திருமணம் செய்துகொண்டவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகளுக்குச் சொத்துரிமை இல்லாது போனாலும் போகலாம்" என்று கூறி அவர்கள் மிரட்டினார்கள். தம் அன்னைக்காக—அன்னைமொழி அருந்தமிழுக்காகச் சொத்துமட்டுமா—தம் உயிரையுமே விட்டுக் கொடுக்கலாமே! அன்னையை மாய்த்து அடையும் சொத்து ஒரு சொத்தா? பிறக்கப்போகும் பிள்ளைகள் என்ன பேடிகளா, தம் முன்னோர் சொத்தில் வாழ? தங்கள் சொந்த முயற்சியில் பொருள் ஈட்டிப் பிழைத்துக் கொள்வார்கள். எனவே, "தமிழ்த் திருமணமே தேவை" என்று எடுத்து மொழிந்தோம்.

எங்கள் முயற்சி விழலுக்கு இறைத்த நீராயிற்று. கிழவர்கள் இருவரும் விடாக்கண்டர்களாய் இருந்தார்கள். அவர்களது குரங்குப் பிடியால், கூடிவந்த திருமணம் தடைப்பட்டுவிடும் போல் தெரிந்தது. வெண்ணெய் திரண்டுவரும் நேரத்தில் தாழி உடையும்படி விட்டுவிடலாமா? எப்படியாவது விட்டுக் கொடுத்துப் பிள்ளைகளைச் சரிகட்டிப் பெரியவர்கள் காரியம் முடிப்பார்கள் என்று சொல்வது வழக்கம். ஆனால் இங்கேயோ, பெரியவர்களைச் சரிகட்டுவதற்காகப் பிள்ளைகள் விட்டுக்கொடுத்துக் காரியம் முடிக்க வேண்டிய இரங்கத்தக்க நிலை ஏற்பட்டிருக்கிறது.

இந்நிலையில் நானும் பாண்டியனும் மீண்டும் கலந்து பேசினோம். மூலை வாங்கும் முரட்டு மாடுகளைச் சற்று விட்டுக் கொடுத்துத்தான் திருப்புவது வழக்கம்.

எனவே, எங்கள் பெற்ருேர்களின் விருப்பப்படியே, வட மொழிச் சடங்கு கொண்டே திருமணத்தை நடத்து வதற்கு ஒத்துக்கொண்டோம்.

பரியம் நிறைவேறியது. அழைப்பிதழ் அச்சிட்டு உரியவர் அனைவருக்கும் அனுப்பினேம். திருமண நாளன்று உற்ருரும் உறவினரும் ஊரரும் நண்பர்களும் திரளாக வந்து குழுமினர். திருமணம் எங்கள் இல்லத் திலேதான்.

மணவேளை நெருங்கிற்று. அனைவரும் மணமக்களை எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர். ஆனல் அந்நேரம் பார்த்து மணமக்கள் இருவரும் மணப்பந்தலுக்கு வர மறுத்துவிட்டனர். என் தந்தையும் மணமகன் தந்தை யும் துடித்தார்கள்—காரணம் கேட்டார்கள். 'தமிழ்த் திருமணம் நடத்திஞல்தான் நாங்கள் மணப்பந்தலுக்கு வந்து மணந்துகொள்வோம்' என்று இருவரும் திடீர்ப் புரட்சி செய்தார்கள். மணமக்களின் பெற்ருேர்கள் தலையால் தண்ணீர் குடித்துப் பார்த்தார்கள்—ஒற்றைக் காலில் நின்று பார்த்தார்கள்—துள்ளிஞர்கள்—துடித் தார்கள்—தாண்டிக் குதித்தார்கள்—கூவிஞர்கள்—கொக்கரித்தார்கள்—'சாமதான பேத தண்டம்' என்னும் நால்வகை வழிகளையும் கையாண்டு பார்த்தார்கள்—ஒன்றும் நடக்கவில்லை. பக்கத்தில் இருந்தவர்கள் சிலர் நேரத்தின் நெருக்கடியை உணர்ந்து, 'பிள்ளைகளின் விருப்பப்படியே செய்யுங்கள்'' என்று பக்கச்சொல் சொன்ஞர்கள். பிறகுதான் அப்பாவும் முத்தைய முதலி யாரும் வழிக்கு வந்தார்கள். எல்லா ஏற்பாடும் ஆன பிறகு திருமணத்தை அவர்கள் எப்படி நிறுத்த முடியும்? எனவே எங்கள் நாடகம் அரங்கேறிவிட்டது—எடுத்த காரியத்தில் வெற்றி பெற்றுவிட்டோம்.

திடீரென்று தமிழ்த் திருமணம் எப்படி நடத்துவது என்று எல்லோரும் விழித்தார்கள். நான் இதற்கென்றே முன்கூட்டியே அழைப்பிதழ் அனுப்பி வருந்தி வேண்டி எங்கள் தமிழ்ப் பேராசிரியர் அவர்களையும் தத்துவப் பேராசிரியர் அவர்களையும் தருவித்திருந்தேன். தமிழ்ப் பேராசிரியர் தலைமை தாங்கித் திருமணத்தை நடத்தி வைத்தார். தத்துவப் பேராசிரியர் வாழ்த்துரை வழங்கினார். நிகழ்ச்சிகள் யாவும் தமிழிலேயே நடந்தன.

இந்தப் புரட்சியிலும் இன்னொரு புரட்சி! என்ன தெரியுமா? எங்கள் தமிழ்ப் பேராசிரியர், தாழ்ந்த குலம் எனப்படும் பறையர் வகுப்பைச் சேர்ந்தவர். தத்துவப் பேராசிரியரோ, உயர்ந்த குலம் எனப்படும் பார்ப்பன வகுப்பைச் சேர்ந்தவர். இருவருமே சிறந்த பண்பினர்—சீரிய நோக்கினர். தாழ்ந்த குலத்தினர் என்பதற்காக எவரையும் தாழ்த்துவதும் இல்லை—உயர்ந்த குலத்தினர் என்பதற்காக எவரையும் உயர்த்துவதும் இல்லை என்னும் எங்கள் நடுநிலைக் கொள்கைக்கு இந்நிகழ்ச்சி ஓர் எடுத்துக்காட்டு. "பெரியோரை வியத்தலும் இலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே" என்பது புறநானூறு அல்லவா?

பேராசிரியர்கள் இருவரும் வாழும்முறை விளக்கி வழங்கிய வாழ்த்துரைகள் பலவற்றுள், மணமகனுக்கு ஒன்றும் மணமகளுக்கு ஒன்றுமாக இரண்டே இரண்டு கருத்துக்கள் மட்டும் ஈண்டு வருமாறு:—

மணமகனுக்கு—"ஓர் ஆண்மகனுக்கு வாழ்க்கைத் துணைவியாக ஒரு நல்ல பெண்மகள் தேவை. அவளும் அவளது அன்பும்தான் தேவையே தவிர, அவளுடன் வரும் சீர்வரிசைகளில் கணவன் கவனம் செலுத்துவதோ

—அதுபற்றிக் கவலைப்படுவதோ கூடவே கூடாது. அவள் எவ்வளவு கொண்டுவந்தாலும் நிறைவுகொள்ளாமல், மேலும் அது கொண்டுவரவில்லை—இது கொண்டுவரவில்லை; எனக்கு என் மாமனுர் அது செய்யவில்லை—இது செய்யவில்லை என்று குறை கூறிக் கூறிப் புண்படுத்திக்கொண்டே யிருக்கக் கூடாது. ஒருவரென்ன நமக்குக் கொடுப்பது? அவர்களுக்கும் வசதியிருந்து அவர்களாக விரும்பிச் செய்தால் செய்யட்டும். மற்றபடி நாமாக ஒருவரிடம் ஒரு காலணுவும் எதிர்பார்க்கக் கூடாது. இந்த மனநிலை ஏற்படின், குடும்பங்களில் அடிக்கடி உண்டாகும் எத்தனையோ பிணக்குகளுக்கு இடமேயிராது."

மணமகளுக்கு—

ஒரு பெண்மகளுக்கு நல்ல கணவனும் அவனது அன்புமே அரும்பெருஞ் செல்வம். அவனிடமிருந்து உயர்தரமான ஆடையணிகலன்களைப் பெறப் போராடுவதிலிருந்து நீங்கி அவனது அன்பைப் பெறவே முயல வேண்டும். அவனுல்—அவன் உறவினரால் ஏற்படும் குற்றங்குறைகளைத் தாய் வீட்டில்வந்து தூற்றுவது பெரிய மடமை. அவனையோ—அவன் குடும்பத்தையோ பிறர் இழித்துப் பேச இடங்கொடுப்பது, தனக்குத் தானே கேடு செய்துகொள்வதாகும். இச்செயல்கள் கணவனது அன்பையும் முறித்துவிடும். இன்னும் கேட்டால், அவனைவிட, தன் அண்ணன் தம்பிகளையோ—தாய் தந்தையரையோ மிகவும் நேசிப்பதாகக் கூட அவனுக்குப் படக்கூடாது. இப்படி ஒரு பெண் குடும்பம் நடாத்தின், கணவனது அன்பு முழுதும் அவளுக்கே தான்!"

இவ்வாறு இன்னும் எத்தனையோ அறிவுரைகள் அளிக்கப் பெற்றன. தமிழ்த் திருமணத்திலன்றி, வேறு எம்முறைத் திருமணத்தில் இந்தக் கருத்துக்களை மண மக்கள் பெற்றுப் பயனெய்த முடியும்?

எல்லாம் இனிது நிகழ, திருமணம் சிறப்புற நடந் தேறியது. வாழ்க மணமக்கள்!

கற்பகமும் பாண்டியனும் தனி வீட்டில் தனிக் குடும்பம் நடத்திக்கொண்டிருந்தனர். நான் அப்பாவுக்குத் துணையாகக் குடும்ப வேலைகளைக் கவனித் துக்கொண்டு வந்தேன். ஒவ்வொரு சமயம் வீட்டில் என் திருமணப் பேச்சும் அடிபடும்—நான் பி. ஏ. தேர்வில் தேர்ந்து விட்டதாகத் தேர்தல் முடிவும் வெளியாயிற்று. பெண் தரகர் சிலர் வீட்டிற்கு வருவதும் போவதுமா யிருந்தனர்.

மதுரையில் என் கல்லூரி நண்பன் ஒருவனுக்குத் திருமணம். அதற்கு நான் போய்வர வேண்டும். ஒருநாள் நான் வைகறை நான்கு மணி வண்டியில் செல்வதற்காக மூன்று மணிக்கே புகைவண்டி நிலையம்நோக்கி நடந்தேன். இருட்டுதான்—இன்னும் பொழுது விடிய மூன்று மணி நேரம் இருக்கிறது. நடை பாதை புகைவண்டிப் பாதையை ஒட்டிச் சிறிது தூரம் செல்லும். புகைவண்டி நிலையம் கொஞ்சதூரம் இருக்கும்போது, ரயில்பாதையை ஒட்டி ஒரு பெண் முக்காடு போட்டுச் சென்றுகொண் டிருந்தது தெரிந்தது. சென்றவள், குறிப்பிட்ட ஓரி டத்தில் தண்டவாளத்தின் பக்கத்தில் அப்படியே நின்று விட்டாள். சுற்று முற்றும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தாள். எனக்கு மனத்தில் ஓர் ஐயம் ஏற் பட்டது. ஒரு பெண்பிள்ளை இருட்டு நேரத்தில் தனியே

தண்டவாளத்தின் பக்கத்தில் நிற்பது எதற்காக? அப்பொழுது தொலை தூரத்தில் ஒருவண்டி வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அது கூட்சு வண்டிதான். ஓகோ! என்னவோ செய்து கொள்வதற்காக இவள் வந்து நிற்கிறாள் என்று புரிந்து கொண்டேன். ஓடினேன் ஓடினேன் ஓட்டோடியும் ஓடினேன். அவள் தண்டவாளத்தின் குறுக்கே படுத்துக்கொண்டது தெரிந்தது. அவளை நானும் வண்டியும் நெருங்கிய நேரம் ஒன்றாக இருந்தது. வண்டிக்குமுன் வேகமாகத் தண்டவாளத்தில் பாய்ந்தேன். அவளை அப்படியே அலாக்காகத் தூக்கிக் கொண்டு அப்பால் தாவினேன். நான் அவளை அப்புறப்படுத்தியதும் வண்டி எங்களைக் கடந்ததும் மயிரிழை இடைவெளியில் நடந்திருப்பதை அறிந்த போது எனக்குத் தலை சுழன்றது.

நான் தண்டவாளத்தைத் தாண்டியபோது காலில் ஏதோ தடுக்கியதாக உணர்ந்தேன். அதனால் அவளை ஏந்தியபடியே கீழே விழுந்து விட்டேன். காலில் கடுமையாக வலித்தது. சிறிது நேரம் எனக்கு ஒன்றுமே தெரியாது. அந்த உருவமும் அதிர்ச்சியடைந்துதான் இருக்க வேண்டும். அது இன்னும் என் கைப்பிடியிலிருந்து நழுவி விடுபடவில்லை. இரண்டு உருவங்களும் எதிர்பாரா வியப்புடன் படுத்தபடியே உரையாடத் தொடங்கின :—

"ஆரது? அத்தானா?"

"ஆ, அல்லியா?"

"ஏன் அத்தான் என்னைக் காப்பாற்றினீர்கள்? சமூகம் என்னை வாழவிடவில்லை என்றாலும் சாகவாவது விடக்கூடாதா?"

"என்ன காரியம் செய்தாய் அல்லி! தற்கொலை செய்து கொள்வது அறியாமை—கோழைத்தனம் என்று நான் முன்பே ஒருமுறை உனக்குச் சொல்லி யிருக்கிறேனே. நமக்கு வாழத் தெரியவில்லை யென்றால், சமூகத்தின்மேல் குற்றங்குறை கூறுவதில் யாது பயன்?"

"சமூகத்தில் வாழ்வு பெறமுடியாத எனக்குத் தற்கொலை செய்து கொள்ளக்கூட உரிமையில்லையா?"

"இல்லை—உனக்கு உரிமை இல்லை—தற்கொலை செய்து கொள்ள உனக்கு உரிமையே இல்லை. சமூகத்தின் உதவியின்றி எந்தத் தனி மனிதரும் தாமாகவே உயிர் வாழ முடியாது. எனவே, சமூகத்தின் ஒத்துழைப்பால் வளர்ந்து வரும் உயிர் சமூகத்திற்கே சொந்தமானது. அது எந்தத் தனி மனிதருக்கும் சொந்தமானதன்று. சமூகத்தின் மாபெரும் நன்மைக்காக வேண்டுமானால் அந்த உயிரைத் தியாகம் செய்யலாமே தவிர, தம் சொந்த விருப்பு வெறுப்பு காரணமாக, சமூகத்தின் சொத்தாகிய அந்த உயிரைப் போக்கிக்கொள்ள எந்தத் தனி மனிதருக்கும் உரிமையில்லைதான். நீ செய்தது முற்றிலும் முட்டாள்தனம்."

"உண்மைதான் அத்தான்! சமூகத்தின் உழைப்பால் தான் உண்டு உடுத்து வளர்ந்து வந்தேன். ஆனால் அந்தச் சமூகம் இப்போது எனக்கு வாழ வழிகாட்டவில்லையே?"

"வாழ்க்கை ஒரு போராட்டம். சமூகத்தோடு சேர்ந்து நாமும் போரிட்டு வெற்றிபெற்றாக வேண்டும்."

"நானும் போராடித்தான் பார்த்தேன். வெற்றி கிட்டவில்லையே."

"ஏன், உனக்கு என்ன நேர்ந்தது? விளக்கமாகச் சொல்லு!"

"என்னை ஒன்றும் கேட்காதீர்கள் அத்தான்!"

"நீ சொல்லித்தான் ஆகவேண்டும். வாழப்பிறந்தவள் நீ—வாழ்ந்தே யாகவேண்டும். சொல்லு—விரைவில் சொல்லு!"

"எனக்கும் பாண்டியனுக்கும் திருமணம் ஏற்பாடாகி யிருந்ததாக நான் உங்களுக்குக் கடிதம் எழுதியிருந் தேனே—நல்ல வேளையாக அதை அப்பாவே நிறுத்தி விட்டார். அதிலிருந்தே வீட்டில் அமைதியோ—மகிழ்ச்சி யோ இல்லை. அப்பா நடைப்பிணம் போலவே இருந்து வந்தார். கற்பகத்திற்கும் பாண்டியனுக்கும் திருமணம் ஆனபின், தாம் ஏமாந்து விட்டதாக அப்பா மேலும் சோர்ந்து போனார். எல்லோரிடமும் எரிச்சலும் புகைச் சலுமாய் நடந்துவந்தார். நீ தொடக்கத்திலேயே 'தீநிமித்த'மாய்த் தடுத்ததால்தான் கடைசிவரையும் காரியம் கைகூடவேயில்லை என்று என்னை அடிக்கடிக் கருக்கிக் கொட்டினார். அவர் என்னைப் பார்க்கும் போதெல்லாம் கொன்று விடுவார்போல் தெரிந்தது. அவர் குரலைக் கேட்டாலேயே நான் நடுங்கிச் சாவேன். அவர் கண்முன் நான் தலைகாட்டுவதே கிடையாது. இந்த நிலையில் நான் எப்படி உயிர்வாழ்வது? ஒரு பெண் மனம் என்ன பாடு பட்டிருக்கும் என்று நீங்களே எண்ணிப் பாருங்கள் அத்தான்!"

"ஊம், அப்புறம் என்ன ஆயிற்று?"

"வாழ்வதா—சாவதா? என்று நான் தத்தளித்துக் கொண்டிருந்தேன். இந்த நிலையிலும் அப்பா எங் கெங்கோ மாப்பிள்ளை பார்த்துக்கொண் டிருந்தார். ஒருவனுக்கு உறுதியாகித் தவறிவிட்ட பெண் எங்களுக்கு வேண்டாம் என்று எல்லா மாப்பிள்ளை வீட்டுக்காரர்களும்

மறுத்துவிட் டிருக்கின்றனர். கடைசியாக ஒருவன் கட்டிக்கொள்வதாக வந்திருக்கிறுன். அவன் முதல் மனைவியை இழந்தவனும்—பிள்ளைகளும் இருக்கிருர் களாம்—ஆனுல் பெரிய பணக்காரனும். அப்பா ஒத்துக் கொள்வாரோ—மாட்டாரோ—எனக்குத் தெரியாது. அத்தானைத்தவிர வேறு எந்த மாப்பிள்ளை இனி ஏற்பாடானுலும் இறந்துவிடவேண்டும் என்ற முடிவுக்கு நான் எப்பொழுதோ வந்துவிட்டேன். காலத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்த நான், இப்போது இங்கே இந்த நிலைக்கு ஆளானேன். என் உயிரைக் காப்பாற்றிய அத்தானே இனி என் உயிருக்குப் பொறுப்பாளி! என்னை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்."

என்று சொல்லிக்கொண்டே அல்லி என் மார்பிலே தலையைப் புதைத்துக் கொண்டாள். "ஏற்றுக் கொள் கிறேன் அல்லி! இனி யாரும் நம்மைப் பிரிக்க முடியாது; இயற்கையே நம்மை ஒன்றுசேர்த்து விட்டது" என்று சொல்லி, நான் அவளைக் கட்டித் தழுவிக்கொண்டேன். உணர்ச்சி வயப்பட்ட எங்களுக்குச் சிறிது நேரம் ஒன்றுமே தெரியாதுதான்!

திடீரெனப் பக்கத்தில் பேச்சுக்குரல் கேட்டது—திரும்பிப்பார்த்தேன். மாமா மலைபோல் நின்றுகொண் டிருந்தார். அத்தையும் அவரருகில் காணப்பட்டார்கள். அல்லி வீட்டில் இல்லாததை எப்படியோ தெரிந்து தேடிக்கொண்டு வந்திருக்கிருர்கள். அவர்களைக் கண்டதும், அல்லி புள்ளிமான் போல் துள்ளி எழுந்து ஒருபுறம் ஒதுங்கி நாணத்தால் தலைகவிழ்ந்து நின்ருள். வாரியடித்துக் கொண்டு நானும் எழுந்திருக்க முயன் றேன்—ஆனுல் முடியவில்லை. எனது உள்ளங்கால் ஒன்றை ஏதோ இரும்போ—கருங்கல் சக்கையோ

கிழித்துவிட்டதால் குருதி பீரிட்டு ஓடிக்கொண்டிருப்பதை அப்போதுதான் உணர்ந்தேன். என்னால் எழுந்து உட்காரவே முடியாதபோது எப்படி நிற்க முடியும்?

மாமா மிகவும் சினந்து என்னைக் கையாலும் கடுஞ் சொல்லாலும் தாக்குவாரென அஞ்சி நடுங்கினேன். எழுந்திருக்கவும் என்னால் முடியாதே — என்ன செய்வேன்!

"என்ன நடந்தது? காலில் ஏன் குருதி கொட்டுகிறது? என்று அத்தை பரிவுடன் கேட்டார்கள். நான் நடந்தவற்றை விளக்கினேன். எதிர்பார்த்ததற்கு மாறாக மாமாவும் மனம் திரும்பிவிட்டார். என்மேல் மிகவும் இரக்கப்பட்டார். தம் மேல்துணியால் என் கால் காயத்தைக் கட்டினார். அல்லியைக் காப்பாற்றியதற்காக நன்றி தெரிவித்தார். இதற்குமுன் வீட்டில் என்னைத் தாக்கியதற்காக மன்னிப்புக் கேட்டார். அவரும் அத்தையுமாக என் இரு தோள்களிலும் கைகொடுத்துத் தூக்கி நிறுத்தினார்கள். அண்மையில் பாதையில் விடப்பட்டிருந்த அவர்களது மாட்டு வண்டிக்குக் கொண்டு செல்லப்பட்டேன்.

எல்லோரும் வண்டியில் ஏறிக்கொண்டோம். வண்டி எங்கள் ஊர் நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. நேரே யார் வீட்டுக்குச் செல்வது? மாமாவும் அத்தையும் அல்லியும் தங்கள் வீட்டில் இறங்கிக்கொண்டு, என்னை எங்கள் வீட்டில் இறக்கிவிட்டு வரும்படி வண்டிக்காரனுக்கு ஆணையிடுவார்கள் என்று எண்ணிக்கொண்டு போனேன். ஆனால் மாமா என்ன செய்ய இருக்கிறாரோ! என்னையும் தங்கள் வீட்டிலேயே இறக்கிக் கொள்வாரோ என்னவோ!

மாமா வீட்டிற்கு நேரே வந்ததும், வண்டியோட்டி வண்டியை நிறுத்தினன். "நிறுத்தாதே—நேரே நம் மைத்துனர் அம்பலவாண முதலியார் வீட்டிற்கு ஓட்டு!" என்று மாமா ஆணையிட்டார். எங்கள் வீட்டுக்கு மாமாவும் அத்தையும் அல்லியுடன் வரப்போவதை அறிந்ததும் எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. அந்த மகிழ்ச்சியில் என் கால்வலி பறந்துவிட்டது. ஆனல், அந்த அற்ப மகிழ்ச்சியும் நிலைக்கவில்லை. ஒருவேளை, மாமாவைக் கண்டதும் அப்பா வம்புக்கு இழுப்பாரோ—என்னவோ! "நல்லபடியாக அனுப்பிய எங்கள் பிள்ளையை இந்த நிலையில் கொண்டுவந்து இறக்கி விட்டாயே என்று மாமாவோடு அப்பா மல்லுக்கு நிற்பாரோ—என்னவோ என்று கலங்கினேன். இருக்கட்டும் எப்படியாவது எல்லோரும் எங்கள் வீட்டுக்கு வந்தால் அதுவே போதும்!

இதற்குள்ளேயே எனக்கு இவ்வளவு மனக் கோட்டையா? மாமா அல்லியையும் அத்தையையும் அழைத்துக் கொண்டு எங்கள் வீட்டிற்குள் நுழைவார் என்பது என்ன உறுதி! என்னை மட்டும் எங்கள் வீட்டு வாயிற்படியில் இறக்கிவிட்டு, தாங்கள் அதே வண்டியில் அந்தக்கணமே தங்கள் வீட்டிற்குத் திரும்பிவிட்டாலும் திரும்பிவிடலாம் அல்லவா? அதுதான் நடக்கப்போகிறது என்று எண்ணியபடியே சென்றேன்.

வண்டி எங்கள் வீட்டு வாயிற்படியில் வந்து நின்றது. இன்னும் பொழுது விடியவில்லை. கதவு சாத்தியே இருந்தது. மாமா வண்டிக்காரனைவிட்டுக் கதவைத் தட்டச் செய்தார். அப்பா கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தார். மாமாவும் வண்டியோட்டியும்

என்னைத் தாங்கிப் பிடித்தபடி வண்டியிலிருந்து அழைத்து வந்தார்கள். அப்பா என்னைக் கண்டதும், "அழகா! உனக்கு என்னடா வந்தது? அன்றைக்கு அடித்து அனுப்பியதுபோல் இன்றைக்கும் ஏதாவது செய்துவிட்டார்களோ?" என்று அலறினர். "அண்ணா; அழகனுக்கு ஒன்றும் நேர்ந்துவிடவில்லை. பதறுதீர்கள். உள்ளே வாருங்கள், எல்லாம் சொல்லுகிறேன்" என்று கூறி, அத்தை அப்பாவின் கையைப் பிடித்து உள்ளே அழைத்துக்கொண்டு போனார்கள். மாமா உட்பட எல்லோருமே உள்ளே நுழைந்தோம். அதற்குள் அம்மாவும் கற்பகமும் ஓடிவந்து அப்பாவின் அலறலோடு போட்டி போட்டார்கள். இந்தக் குழப்பத்திலும் வரவேற்பு நிற்கவில்லை. அப்பா அத்தையையும், அம்மா மாமாவையும், கற்பகம் அல்லியையும் சிறப்பாகவும், எல்லாருமே எல்லாரையுமே பொதுவாகவும் வரவேற்றது என் கண்ணுக்கும் காதுக்கும் எட்டியது. நீண்டநாள் வராதிருந்து வந்தவர்கள் அல்லவா! குருதித் தொடர்பு—இரத்தபாசம் விடுமா?

புகைவண்டித் தடத்தில் நடந்தவற்றையெல்லாம் அத்தை அப்பாவுக்கும் அம்மாவுக்கும் சொன்னார்கள். இதுவரை நடந்தவற்றை மறந்து, இனி நடக்கவேண்டியதைக் கவனிக்கும்படி அத்தை (தன் அண்ணாவாகிய) அப்பாவுக்கும், அம்மா (தன் அண்ணாவாகிய) மாமாவுக்கும் வேண்டுகோள் விடுத்தார்கள். அவர்களின் முயற்சி வீண்போகவில்லை. மைத்துனரும் மைத்துனரும் கூடிக்கொண்டார்கள். ஒருவரையொருவர் மன்னித்து உறவு கொண்டாடினார்கள்.

பிறகு மாமா தம் வீட்டிற்குப் புறப்பட்டார். அப்பாவும் அம்மாவும் விடவில்லை. சிற்றுண்டி அருந்தியே செல்லவேண்டும் என்று தங்கவைத்து விட்டார்கள். காலைச் சிற்றுண்டியுடன் திருமணப் பேச்சும் கலந்து கொண்டது. எனக்கும் அல்லிக்கும் திருமணம் நடத்தி விடுவதாக உறுதி எடுத்துக்கொண்டார்கள். எதிர் பாராத இந்த மகிழ்ச்சியில், என் கால்புண் விரைவில் குணமாகாமல் இருக்குமா? தாய் வீட்டிற்கு வந்திருக்கும் என் தங்கையின் மகிழ்ச்சிக்கோ எல்லையே யில்லை.

மாமா தங்கள் வீட்டில் திருமணத்தை நடத்த விரும் பினார். அப்பாவும் அம்மாவும் ஒத்துக்கொள்வார்கள் போல் தெரிந்தது. எனக்கு அதில் விருப்பம் இல்லை. பிறர் வீட்டில்போய்த் திருமணம் செய்துகொண்டால் நாம் விரும்புகிறபடி நிகழ்ச்சிகள் நடவாமற் போகலாம்—நாம் எல்லாவற்றுக்கும் இன்னொருவரை எதிர்பார்த்தாக வேண்டும். அதுவுமன்றி, தாங்கள் என்னவோ பெரி தாகத் திருமணம் செய்துவைத்து விட்டதாகக் கால மெல்லாம் நம் தலையில் மொத்திக்கொண் டிருப்பார்கள். இவைமட்டுமல்ல—நம்மால் இன்னொருவருக்கு எந்தத் தொல்லையும் ஏற்படக்கூடாது என்ற எண்ணமும் சேர்ந்துகொண்டதால், நான் எங்கள் வீட்டிலேயே திரு மணம் நடத்த ஏற்பாடு செய்துகொண்டேன். என் விருப்பப்படி, ஆடம்பரம் இன்றி மிகவும் அடக்கமான முறையிலேயே திருமண ஆயத்தங்கள் நடைபெற்றன. என் தந்தையாரோ ஆடம்பரப் பிரியர்—புகழ் விரும்பி யுங்கூட! அவருக்குப் புகழ் தேடித்தந்து அவரை நிறைவு செய்வதற்காக, என் திருமணத்தின் நினைவாக, எங்கள் ஊர் உயர்நிலைப்பள்ளியின் திருக்குறள் நிதிக்காக மூவாயிரம் ரூபாய் நன்கொடையளிக்க ஏற்பாடு

செய்தேன். திருமணக் கூட்டத்தில் இச்செய்தியைத் தெரிவித்தால் அனைவரும் கை தட்டுவார்கள். அப்பாவின் பெருமிதத்தை அப்பொழுது பார்க்கவேண்டுமே! எல்லாச் செல்வர்களுமே இவ்வாறு நல்லதற்குச் செய்தால் எவ்வளவு பயனுள்ளதாக இருக்கும்!

நான் இதற்குமுன்பு என் திருமணத்தைப் பற்றி எவ்வளவோ கனவு கண்டிருக்கிறேன். திருமணநாள் அன்று புதுப்பெண் நம் பக்கத்தில் வந்து அமருவாள்—முதல் முதல் நாம் அவளைப் பார்த்துப் பூரித்துப் போவோம்—அவளது அழகை அப்படியே அள்ளி அள்ளிப் பருகுவோம்—அவள் தலையொடித்துக் கண் சாய்த்துப் பார்ப்பாள்—நாம் அப்படியே சொக்கி விடுவோம்—என்றெல்லாம் எவ்வளவோ பகற்கனவுகள் கண்டிருக்கிறேன். ஆனால், அந்த இன்பத்துக்கு இப்போது இடமில்லாது போய்விட்டதே என்று ஏங்கினேன். ஏன்? எனக்கு வாய்த்துள்ள மணப்பெண்ணோ, என் அத்தை மகள் அல்லி—இதற்கு முன்பே நன்கு பழக்கப்பட்டவள்—அவள் மணக்கோலத்தில் வந்து எவ்வாறு மனங்கவரப் போகிறாள்? பழக்கப்பட்ட சுவையாயிற்றே!—என்று சலித்துக்கொண்டே மணவறையில் அமர்ந்திருந்தேன்.

மணமகளை நன்கு அணி செய்து—அலங்கரித்து என் பக்கத்தில் அமர்த்தினார்கள். என் கனவு வீண்போகவில்லை. நான் பெண்ணை ஏறிட்டு நோக்கினேன். திடுக்கிட்டேன். அவள் அல்லி அல்லள்—எங்கள் அல்லி இவ்வளவு அழகாக இருக்கமாட்டாள்—அல்லியின் கண்நோக்கும் புன்முறுவலும் இவ்வளவு நயமாக இருந்ததில்லை. இவள் யாரோ? உற்று நோக்கினேன். அல்லிதான்!

ஆனால் அந்த அல்லி வேறு—இந்த அல்லி வேறு! இளமைதொட்டு என்னுடன் ஆடிப்பாடி மகிழ்ந்த அந்த

அல்லி வேறு—இந்த அல்லி வேறு! புகைவண்டித் தடத்தில் என்னைக் கட்டிப் புரண்ட அந்த அல்லி வேறு—இந்த அல்லி வேறு! அந்த அல்லிகள் ஆயிரவர் வரினும் இந்த அல்லிக்கு இணையாகார். அந்த அல்லியின் புதுப் பிறவி இந்த அல்லி! எங்கிருந்துதான் அவள் இந்தப் புதுத்தோற்றம்—புத்துணர்வு பெற்றாளோ? இது இயற்கையோ—அல்லது அவளாகச் செய்துகொண்ட செயற்கையோ? இதற்கு முன்பு அவள் என்னோடு பழகியவள் என்பதை யாராலும் நம்ப முடியாது—ஏன், என்னாலேயே நம்பமுடியவில்லையே. "இந்தப் பூனையும் பால் குடிக்குமா? இது தேவ உலகமோ பூவுலகமோ?" என்று சொல்கிற முறையில், ஒன்றும் அறியாதவள்போல் நாணிக் கோணி என் பக்கத்தில் அமர்ந்திருந்தாள். அப்பப்பா! இந்தப் பெண்களின் பொடி வேலைத் திறத்தை யாரால் புரிந்துகொள்ள முடியும்?

இன்னியம் கறங்க மங்கல வாழ்த்துக்களுடன் எங்கள் தமிழ்த் திருமணம் இனிது நிறைவெய்தியது. இனி நானும் அல்லியும் வெறும் மைத்துன-மைத்துனி முறையினர் அல்லர்; கணவன் மனைவியாகிவிட்டோம். அவள் எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவளாகி விட்டாள்.

இதற்குமுன் தனித்திருந்த நானும் அல்லியும் இப்பொழுது கட்டுண்டு விட்டதால், எங்கள் வாழ்க்கையில்—நடையுடை போக்கில் பெரிய மாறுதல் ஏற்படலாம் என்று எண்ணியிருந்தேன். ஒருத்தி ஒருவனுக்கு வாழ்க்கைப் பட்டுவிட்டால், அவள் அவனுக்கு அடிமையாகி விட்டதாகவும், அவளது உரிமை பறிபோய் விட்டதாகவும் உரைப்பது உலக இயல்பு. நான் 'இன்டர்மெடியட்' வகுப்பில் படித்த "தி லேடி வித் எ லாம்ப்" (The Lady with A Lamp) என்னும் ஆங்கில

நூல் இங்கே நினைவிற்கு வருகிறது. ஐரோப்பியப் போர் ஒன்றில் காயம்பட்ட வீரர்களுக்கு அரும்பெருந் தொண்டாற்றிய ஃபிளாரன்ஸ் நைட்டிங்கேல் (Florence Nightingale) என்னும் பெண்மணியின் வரலாற்றைக் கூறும் நூல் அது. அந்நூலில் ஒரு காட்சி: நைட்டிங்கேலும் அவள் காதலன்—ஃஎன்றி ட்ரமாயின் (Henry Tremayne) என்பவனும் ஒரு நீர் ஊற்றின்முன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கின்றனர். "நீ என்னை மணந்துகொள்ள மாட்டாயா?" என்று காதலன் கேட்கிறான். "திருமணம் என்பது அடிமை வாணிகச் சந்தையில் செய்யும் ஒருவகைக் கொள்முதல் அல்லவா?" என்று காதலி கேட்கிறாள். "திருமணம் செய்துகொண்ட பின்புதான், பெண்கள் இந்த உலகில் தாங்கள் விரும்பும் எந்தப் பொருளையும் பெறமுடியும்" என்று காதலன் சொல்லுகிறான். "உரிமை (சுதந்திரம்) நீங்கலாக, வேறு எதனையும் பெறமுடியும் அல்லவா?" என்று காதலி குத்தலாகக் கேட்கிறாள். அவள் கருத்தை அவன் மறுக்கிறான்—என் நினைவிற்கு வந்தது இந்தக் காட்சிதான்.

என்னைக் கேட்டால்—நானும் ட்ரமாயின் பக்கத்தைச் சேர்ந்தவன்தான். "திருமணம் ஆவதற்குமுன் ஆண்கள் உரிமையுடன் இருக்கிறார்கள்—ஆனபின் உரிமையிழந்து விடுகிறார்கள். பெண்களோ, திருமணத்திற்குமுன் உரிமையின்றிக் கிடக்கிறார்கள்—ஆனபின்போ, உரிமைபெற்று விடுகிறார்கள்"—என்பது எனது சொந்தக் கருத்து. அந்த ஆங்கில நூலில், ட்ரமாயின் சொல்வதாக, நூலாசிரியர் 'ரெஜினல்டு பெர்கெலி' (Reginald Berkeley) என்பவர் எழுதி வைத்திருப்பதைப் படித்ததனால் நான் இந்த முடிவுக்கு வரவில்லை. எனது சொந்த முடிவுக்கு ஒத்திருந்ததனால் அவர்

கருத்தை எடுத்து இங்கே குறிப்பிட்டேன். கூர்ந்து நோக்கின் எனது கூற்றிலுள்ள உண்மை புலனாகும். சில விதிவிலக்குகளை உரைகல்லாகக் கொண்டு எனது கருத்தை உரைத்துப் பார்க்கக் கூடாது.

திருமணத்திற்குமுன் விருப்பம்போல் ஓடியாடித் திரிந்த ஆண்மகன், திருமணம் ஆனபின், விதியே என்று சில கட்டுதிட்டங்களுக்கு ஆளாகிறான்; வீட்டோடு தங்குகிறான்; குறித்த நேரத்தில் வீட்டுக்கு வந்துவிடுகிறான்; தன் கையால் பொருளீட்டவேண்டும்—மனைவி மக்களைக் காப்பற்றவேண்டும் என்னும் பெரும் பொறுப்புக்கு உட்படுகிறான். இதற்குமுன் உயிரைத் துரும்பென எண்ணியிருந்தவன், இப்போது அதனை வெல்லக் கட்டியாக மதித்து, எங்கே கரைந்து விடுமோ என அஞ்சிப் பாதுகாக்கிறான். சில ஆண்கள் மனைவியரின் கைகளில் குடுமியைக் கொடுத்துவிட்டு மாட்டிக்கொண்டு விழிக்கிறார்கள். அவர்களோ உலுக்கு–உலுக்கு என்று உலுக்குகிறார்கள். இதனால்தான், மனைவியைக் கால் கட்டு அல்லது கால்விலங்கு என்று சொல்கிறார்கள் போலும்!

பெண்கள் நிலையோ இதற்கு நேர் எதிர்மாறு. திருமணம் ஆவதற்குமுன் உள்ளேயே புகுந்துகொண்டு கிடக்கிறார்கள். நினைத்த இடத்திற்குச் செல்ல முடியாது—கண்டவரோடு பேசவோ பழகவோ முடியாது—எண்ணியதைச் செய்ய முடியாது—விரும்பியதை வாங்கமுடியாது—சுருங்கச் சொல்லின், 'சிறை வாழ்க்கை' என்றே சொல்லலாம். திருமணம் ஆனபின்போ, விடுதலை விடுதலை! உரிமை உரிமை! எங்கும் செல்லலாம்—யாருடனும் பேசலாம்—கணவனை நெருக்கி எதையும் செய்யலாம்—எதையும் வாங்கலாம். இதனால்தான்,

பெண் வைத்துக்கொண் டிருப்பவர்கள், எப்படியாவது நாள் கடத்தாமல் கட்டிக்கொடுத்து விடவேண்டும் என்று பறக்கிருர்கள் போலும்!

சில பெண்கள் தாலி கட்டிக்கொண்டு கணவன் வீடு வந்ததும் பெருமையடித்துக் கொள்வார்கள்-பேயாட்டம் ஆடுவார்கள். இந்நிலையில், என்னையும் எங்கள் குடும்பத்தையும் அல்லி என்ன பாடு படுத்த இருக்கிருளோ என்று எண்ணியிருந்தேன். ஆனல் அவள் எந்த உரிமையும் எடுத்துக்கொண்டவளாகக் காணப்படவில்லை. நாங்களாக வலிய அவளுக்கு எவ்வளவோ உரிமைகள் கொடுத்தும், அவள் அடங்கியே--அமைதியாகவே நடந்து கொண்டாள். வள்ளுவர் கூறிய வாழ்க்கைத் துணை நலப் பண்புகள் அனைத்தும் அவளிடம் அப்படியே படிந்திருக்கக் கண்டு செருக்குற்றேன். இது எனது நற்பேறே!

கற்பகம் கணவன் வீடு சென்றதிலிருந்து அம்மா தனியே உழன்றுகொண் டிருந்தார்கள். இப்போது அல்லி வந்தது அவர்களுக்கு எவ்வளவோ துணையாயிற்று. அப்பாவுக்கும் அம்மாவுக்கும் வேண்டிய பணிவிடைகளெல்லாம் அவள் தட்டாது செய்துவந்தாள். ஆனல் ஒருவகையில் என்னைத்தான் ஏய்க்கத் தொடங்கிளுள்.

திருமணம் ஆவதற்கு முன்பு என்னிடம் உரிமை கொண்டாடிஞள்--எனக்குக் கடிதமும் எழுதிஞள்-- என்னையே மணந்து கொள்ளவேண்டும் என்று வெளிப்படையாகப் போராடியும் வந்தாள். 'திருமணத்துக்கு முந்தியே நம்மிடம் இவ்வளவு தெளிவாகப் பழகுபவள், திருமணம் ஆனபின் இன்னும் தெளிவாக--வெளிப்படையாக நெருங்கிப் பழகுவாள்' என்று அப்போதெல்லாம்

நான் எண்ணிக்கொண் டிருந்தேன். அதுதான் இப்போது நடக்கவில்லை. அல்லி என் கண்முன்னலே அகப்பட மாட்டேன் என்கிருள். அடுப்பங்கரையில் இருப்பாள்—அல்லது, அம்மாகூட இருப்பாள். நாளுக ஏதாவது வலியப் பேச்சு கொடுத்தால், அதற்குமட்டும் அளவோடு பதில் சொல்லிவிட்டு அப்பால் நகர்வாள். நான் கையைப் பிடித்துக்கொள்வேன்—'அத்தை வருகிருர்கள்—மாமா வருகிருர்கள்' என்று ஏதாவது சொல்லிக் கையை விடுவித்துக்கொண்டு நழுவி விடுவாள். என்ன செய்வேன்!

அல்லி பின்பற்றி வந்த இந்த முறை, அவள்மேல் எனக்கிருந்த அன்பையும் அவாவையும் மிகுதிப்படுத்தியது. இதற்காகவே அவள் இப்படி நடந்துகொள்கிருளோ? 'காசுக்கு இரண்டு, பிசுக்கு மூன்று' என்ற முறையில் கணவனேடு காம விளையாட்டு விளையாடினல், அவனுக்கு மனைவி வெகுவிரைவில் புளித்துப் போவாள்; அதனல் எதுவும் அளவோடு இருக்க வேண்டும் என்று அவளுக்கு யாரேனும் அறிவுரை நல்கினர்களோ? அல்லது எந்த நூலிலிருந்தாவது படித்துத் தெரிந்து கொண்டாளோ? அல்லது தானுகவே இவ்வளவு திறமையாக நடந்து கொள்கிருளோ?

ஆனல் என் அல்லி ஒன்றும் தெரியாத அப்பாவி அல்லள், உலகில், கணவரைக் கவரும் திறமையின்மையால், கோவலர்களை மாதவிகளின் வீடுகளுக்குப் போகக் கொடுத்துவிட்டு, ஏங்கி ஏமாந்து மக்கி மயங்கிக் கொண்டிருக்கும் அப்பாவிக் கண்ணகிகளைப் போன்றவள் அல்லள் என் அல்லி. பேசவேண்டிய நேரத்தில்

பேசி, சிரிக்கவேண்டியதற்குச் சிரித்து, இன்பம் அளிக்க வேண்டிய இடத்தில் அளித்துக் களிப்பூட்டி மகிழ்வித்து என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு வந்தாள் என் அழகு அல்லி!

"வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை" என்றார் வள்ளுவர். அல்லி அதை வாழ்க்கையில் கடைப்பிடித்தவள் போல் காணப்பட்டாள். நகைகளைப் போட்டுக்கொண்டே யிருக்கும்படி அம்மா சொல்லு வார்கள். அதற்கு அவள், "நான் என்ன அலங்காரப் பதுமையா? கணவனது செல்வத்தின் அளவை அறிவிக்கும் விளம்பர சாதனமா நான்? கண்ணில் குறை உள்ளவரே கண்ணாடி அணிவர்; அதுபோல, தம் தகுதி திறமையில் குறையுடையவரே நகை அணிந்து ஈடுகட்ட வேண்டும்" என்று கூறுவாள்.

நாங்கள் இருவரும், என் பெற்றோர்க்கு நல்ல மகனாகவும் நல்ல மருமகளாகவும் நடந்து கொண்டு வாழ்வாங்கு வாழ்ந்து வந்தோம். என் படிப்பறிவை, அலுவலகத்துக் கணக்கு வேலைக்குப் பயன்படுத்தாமல், எங்கள் பண்ணை வேலைக்கே பயன்படுத்தி வந்தேன். பயிர்த்தொழிலிலும் நல்ல வருவாய்! குடும்பத்திலும் பெரிய மகிழ்ச்சி!

திருமணத்தைப் போலவே பிள்ளைப் பேற்றிலும் கற்பகமும் பாண்டியனும் எங்களை முந்திக்கொண் டார்கள். திருமணம் ஆன மறு ஆண்டே கற்பகத்துக்கு மகன் பிறந்தான். பாண்டியன் தம் மகனுக்கு மாறன் என்று பெயர் சூட்டினார். வரலாற்றின்படி பார்த்தாலும் பாண்டியன் மகன் மாறன் தானே!

அவர்களுக்குக் குழந்தை பிறந்ததும், உறவினர்களும் நண்பர்களும் என்னையும் அல்லியையும் கேலி செய்தார்கள். அவர்கள் கெட்டிக்காரர்களாம் — பிள்ளை பெற்று விட்டார்களாம்! நாங்கள் அப்படி இல்லையாம். யாராவது எங்களை இப்படிக் கிண்டல் செய்யும்போது, அல்லியின் முகத்தைப் பார்க்க வேண்டுமே! இன்னும் எங்களுக்குப் பிள்ளை பிறக்கவில்லையே என்று அப்பாவும் அம்மாவுங்கூட இறக்கை கட்டிப் பறந்தார்கள்.

இரண்டு ஆண்டுகள் கழித்து அல்லி கருவுற்றாள். எங்கள் குடும்ப வழக்கப்படி ஒன்பதாவது மாதத்தில் 'சூல்' விழாவிற்கு ஏற்பாடு செய்தார்கள். விழா புக்ககத்தில் நடைபெறும். பிறந்தகத்திலிருந்து பெண்ணுக்கு ஏராளமான சீர் வரிசைகள் வருவது வழக்கம். சிற்றுண்டி வகைகள்—பழவகைகள்—காப்பரிசி—தேங்காய் — வெற்றிலை பாக்கு—கற்கண்டு—மலர்வகைகள்— ஆடைகள்—அணிகலன்கள் — பல்வகைப் பாத்திரங்கள் முதலியன பெண்ணின் பெற்றோரால் கொண்டு வரப்படும். பிள்ளை வீட்டிலும் எண்ணிறந்த பொருள்கள் தயாரித்து வைத்திருப்பார்கள்.

சூல் விழாவிற்கு முதல் நாளே எங்கள் வீட்டில் ஒரே கொண்டாட்டமாய் இருந்தது. வெளியூர்களிலிருந்து உறவினர் பலர் வந்திருந்தனர். வீடு அமர்க்களப்பட்டது.

அன்றிரவு நானும் அல்லியும் வெகு நேரம்வரை தூங்காமல் மகிழ்வுடன் பேசிக்கொண்டிருந்தோம். ஏனெனில் நாங்கள் மீண்டும் இதுபோல் கலந்து உரையாட இன்னும் ஐந்தாறு மாதம் ஆகக் கூடும். மறுநாள் காலை சூல்விழா —நண்பகல் விருந்து—பிறகு மாலையில் அல்லியை அவள்

பெற்றோர் தங்கள் வீட்டிற்கு அழைத்துச் சென்று விடுவர். முதல் பிள்ளைப் பேறு தாய் வீட்டில்தான். குழந்தை பிறந்து மூன்று மாதமோ அல்லது ஐந்து மாதமோ ஆகும் போதுதான் நாங்கள் தாயையும் சேயையும் எங்கள் வீட்டிற்கு அழைத்து வருவோம். எனவே, இப்போது எங்கள் பேச்சு நீள்வதில் வியப்பில்லையே!

"நாளை மாலை அப்பா என்னை வீட்டிற்கு அழைத்துச் செல்லும்போது நீங்களும் வருவீர்கள் அல்லவா அத்தான்? அப்பா உங்களையும்தானே அழைப்பார்?"

"என்னை ஏன் அழைக்கிறார்? நான்கூடவா பிள்ளை பெறப் போகிறேன்?"

"போங்கள் அத்தான்! சரி, உங்களுக்கு என்ன பிள்ளை வேண்டும்?"

"நீ என்ன பிள்ளை பெறப் போகிறாய்? அணில் பிள்ளையா? தென்னம்பிள்ளையா?"

"உங்களுக்கு ஆண்பிள்ளை வேண்டுமா—அல்லது பெண்பிள்ளை வேண்டுமா—என்று கேட்டால், என்னென்னவோ சொல்லுகிறீர்களே அத்தான்!"

"ஏன் அல்லி! உன் வயிற்றுக்குள் இருக்கும் பிள்ளையை இனி மாற்றமுடியுமா? நான் ஆண்பிள்ளை கேட்கிறேன் என்று வைத்துக்கொள்வோம் — உன் வயிற்றில் இருப்பது பெண்பிள்ளை என்றால், நீ எனக்கு எப்படி ஆண்பிள்ளை பெற்றுத்தருவாய்? ஒருவேளை, ஆண் ஒன்றும் பெண் ஒன்றுமாக இரட்டைப்பிள்ளை பெறப் போகிறாயோ? அப்படி யென்றால் நான் எது கேட்டாலும் நீ கொடுக்கலாம் அல்லவா?"

"விளையாடாதீர்கள் அத்தான்! உங்களுக்கு எந்தப் பிள்ளை பிறந்தால் மிகவும் விருப்பம் என்று சொல்லுங்கள்!"

"உனக்கு எந்தப் பிள்ளை பிறந்தால் விருப்பமோ—எனக்கும் அதேதான்!"

"எனக்குப் பெண்பிள்ளை பிறந்தால் மிகவும் விருப்பம்!"

"எனக்கும் அப்படித்தான்? எப்போதுமே நம் இருவர் விருப்பமும் ஒன்றுதானே!"

"அத்தான்! நம் பெண்ணை நன்ருகப் படிக்கவைக்க வேண்டும். நம் பெற்ருேர்கள் நமக்குத் தொடக்கத்தில் இடையூருக இருந்ததுபோல் இல்லாமல், அவள் விருப்பப்படி திருமணம் செய்துவைக்க வேண்டும். அவளுடைய அத்தான் மாறனையே — கற்பகத்தின் மகனைத்தான் சொல்கிறேன்—கட்டிக்கொள்ள வேண்டும் என்று விரும்பிஞல், அவளை அவனுக்கே மணம் செய்து வைக்கவேண்டும், தெரியுமா?"

"அல்லி அல்லி, நிறுத்து! யாராவது கேட்டால் சிரிக்கப் போகிருர்கள்! பெண் பிறக்கட்டும்—பிறகு பேசிக்கொள்வோம்".

"அத்தான்! நான் என் வீட்டுக்குப்போன பிற்பாடு, நீங்கள் அடிக்கடி வந்து பார்ப்பீர்களா அத்தான்?"

"என்ன! உன் வீடா! இதுதான் உன் வீடு! அது உன் தாய் வீடு. இன்னுமா உனக்குப் பழைய பற்று நீங்கவில்லை?"

"சொல்லுங்கள் அத்தான், நான் போனவுடனே வந்து பார்ப்பீர்கள் அல்லவா?"

“உடனே வந்து பார்த்தாலும், அடிக்கடி வந்து பார்த்தாலும், இவன் ஒரு பெண்டாட்டிதாசன்—பெண்டாட்டியைப் பிரிந்திருக்க இவனால் முடியவில்லை—என்று எல்லோரும் என்னைக் கேலிசெய்வார்களே அல்லி! அதனால், உடனே வரமாட்டேன். உனக்குக் குழந்தை பிறந்த பிறகுதான் வருவேன்—அதுவும் எப்பொழுதோ ஒருமுறைதான் வருவேன்”.

“எனக்காக வரமாட்டீர்கள்—உங்கள் குழந்தைக்காகத்தான் வருவீர்கள் போலும்! உங்கள் பிள்ளைமேல் இருக்கும் அன்பு என்மேல் இருக்குமா? நான் என்ன, உங்கள் பிள்ளையைவிட உங்களுக்கு உயர்ந்தவளா?”

“பிறப்பதற்கு முன்பே, பிள்ளைமேல் பொறாமை கொண்டு போட்டிக்கு வந்து விட்டாயே அல்லி! இதோ பார் அல்லி — இப்போதே சொல்லி விடுகிறேன்—இனிமேல் எனக்கும் உனக்கும் என்ன கிடக்கிறது? இனி எனக்குப் பிள்ளைதான் பெரிது! இனிமேல் நான் உன்னைக் கவனிக்க மாட்டேன்—என் பிள்ளையைத்தான் கவனிப்பேன்”.

“அத்தான்! நீங்கள் விளையாட்டுக்குச் சொல்லுகிறீர்கள் என்றுதான் நினைக்கிறேன்—அதே நேரத்தில், அது பலித்துவிடுமோ என்று அஞ்சுகிறேன் அத்தான்!”

“பைத்தியமே! நான் இருக்கும்போது எதற்காக நீ அஞ்ச வேண்டும்?”

“என்னவோ அத்தான்? எனக்கு ஒரே திகிலாக இருக்கிறது. நான் வாயும் வயிறுமாக உங்களை விட்டுப் பிரிந்துபோகிறேன். மீண்டும் நல்லபடியாக உயிரோடு வந்து உங்களை அடைய வேண்டுமே! — உங்கள்

குழந்தையை உங்களிடம் கொண்டுவந்து ஒப்படைக்க வேண்டுமே! எனக்கு அச்சமாக இருக்கிறது".

"இதில் என்ன அச்சம்! நீ திரும்பவும் வந்து என்னை அடையாமல் எங்கே போய்விடப் போகிறாய்? எந்தக் காரணத்தாலும் நாம் எப்போதும் பிரியவே மாட்டோம். இந்த ஐந்தாறு மாதப் பொழுதைமட்டும் எப்படியாவது கழித்துவிட்டு வந்துவிடு!"

"சிறிது காலம்கூட உங்களை விட்டுப் பிரிந்திருக்க என்னால் முடியவே முடியாது அத்தான்! நீங்களும் என் கூடவே வந்து என் பக்கத்திலேயே இருங்கள்! இல்லாவிட்டால், நான் தாய்வீட்டிற்குச் செல்லாமல் இங்கேயே தங்கிவிடுகிறேன்—இங்கேயே குழந்தை பிறக்கட்டும்!"

"ஐயோ அல்லி அல்லி! பெண்மனம் என்று சொல்லுகிறார்களே, சரியாகத்தான் இருக்கிறது. நான் உன்னுடன் வந்து இருக்க முடியுமா? வேண்டுமானால், நீ இங்கேயே தங்கிப் பிள்ளைப்பேறு பார்த்துக்கொள்ளலாம். அதில் எனக்கு இரட்டை மகிழ்ச்சி. ஆனால் நம் பெற்றோர்கள் ஒத்துக்கொள்ள மாட்டார்களே! நம் குடும்ப வழக்கப்படி, முதல் பிள்ளைப்பேறு தாய்வீட்டில் ஆனால்தான் குடும்பம் வளர்ச்சியடையும் என்ற குருட்டு நம்பிக்கை அவர்களை விட்டுப் போகுமா? எனவே, நீ தயங்காமல் மயங்காமல் போய்வா! உள்ளூர்தானே! நானும் நடு நடுவே வந்து பார்க்கிறேன்".

"சரி, போகிறேன் அத்தான்!"

"போகிறேன் என்று சொல்லாதே! போய் வருகிறேன் என்று சொல்லு!"

"ஆகட்டும் அத்தான்!"

இவ்வாறு பேசியபடியே அல்லி கண்ணயர்ந்தாள். இரவில் தூங்கும் நேரம் தவிர மற்ற நேரமெல்லாம் அம்மா பக்கத்திலேயே இருந்துகொண்டிருந்த அல்லி — பகல் நேரத்தில், மாடிக்கு வா, பேசிக்கொண் டிருக்கலாம் என்று நாளுகை வலிய வம்புக்கிழுத்தாலும் வராமல், எனக்குக் காட்சிக்கு அரியளாகி அடுப்பங்கரையிலேயே உழன்று கொண்டிருந்த அல்லி—கணவனோடு அடிக்கடி பேசிச் சிரித்து விளையாடிக்கொண்டிருந்தால் பெரியவர்கள் ஏதாவது நினைப்பார்கள் என்று கூசி, என்னை ஏங்கச்செய்து, பெரும்பாலான நேரங்களில் என்னிடமிருந்து ஒதுங்கியே இருந்த அல்லி—இப்போது என்னை விட்டுப் பிரியமுடியவில்லை என்கிறாள்; உள்ளூரிலேயே— பக்கத்துத் தெருவிலே பிரிந்து இருக்கவே பின்வாங்குகிறாள். அவளுக்கு என்மேல் உள்ள அளவு கடந்த அன்பைப் புரிந்துகொள்ள இது எனக்கு ஒரு பெரிய வாய்ப்பாயிற்று.

அவள் கண்ணுறங்கியும் என் கண்கள் மூடவில்லை. இவ்வளவு பற்றுடைய மனைவியை நான்மட்டும் எப்படி ஆறுமாத காலம் பிரிந்திருக்க முடியும்? மேலும், பிள்ளை பெற்று, தான் நல்லபடியாகத் திரும்ப முடியுமோ— என்னவோ என்று அவள் அஞ்சியதை எண்ணியபோது எனக்கும் அத்தகையதோர் அச்சம் ஏற்பட்டது. இந்நிலையில், அவள்மேல் எனக்குக் கட்டுக்கடங்காத பரிவும் பற்றும் உண்டாயின. தாய் தன் குழந்தையின் தலையை நீவுவதுபோல், என்னையும் அறியாமல் வெகுநேரம் நான் அவள் தலையைத் தடவிக்கொடுத்துக் கொண்டிருந்ததை பிறகுதான் உணர்ந்தேன்—நள்ளிரவுக்குப்பின் நானும் உறங்கிவிட்டிருக்கிறேன்.

மறுநாள் காலை சூல் விழா மிகவும் சிறப்பாக நடை பெற்றது. வந்தவர்கள் நன்கு வரவேற்கப்பட்டனர். வழக்கம்போல் வாழ்த்துகளுக்கும் குறைவில்லை. நண்பகல் விருந்து ஆரம்பமாயிற்று.

வந்திருந்த உறவினரும் நண்பர்களும் விருந்துக்கு அமர்ந்தனர். ஆனால் ஒருவரைக் காணவில்லை. அவர் மிகவும் முக்கியமானவர்—அவரில்லாமல் விருந்தே நடை பெறமுடியாது. அவர்தான் என் மாமா—மாமனார்—மாயாண்டி முதலியார்.

மாமா மாடியில் இருப்பதாக அறிந்து, அப்பா போய் அழைத்திருக்கிறார்—வரவில்லை. அது தெரிந்து, அம்மாவும் போய் அழைத்திருக்கிறார்கள்—வரவில்லை. அது தெரிந்து, நானும் போய் அழைத்தேன்—வரவில்லை. என்ன காரணம் என்று எல்லோரும் வினவினோம்—பசி இல்லை யாம். மேலும் மேலும் நச்சரித்தோம். வெகுநேரம் சென்று உண்மையைக் கக்கினார்—இல்லை நஞ்சு கக்கினார்.

கற்பகத்தின் மாமனார் முத்தைய முதலியாரும் சூல் கொண்டாட்டத்திற்கு வந்திருந்தார். அவரை மாமாவுக்குப் பிடிக்கவில்லை போலும். அதை மனத்தில் வைத்துக்கொண்டு என்னென்னவோ சொன்னார். அப்பா தன்னை (மாமாவை) மதிக்கவில்லையாம்; முத்தைய முதலியாரைத்தான் அதிகமாக மதித்து வரவேற்பு செய் தார்களாம். தான் பழைய சம்பந்தியாம்—நேர் மைத்துன ராம்; முத்தைய முதலியாரோ நேற்று வந்தவராம்—சாதி கெட்டவராம். விழாவில் தான் சொன்னபடி அப்பா நடக்கவில்லையாம்; முத்தைய முதலியார் சொன்னபடி யெல்லாம் நடந்து, நிகழ்ச்சிகளைச் செய்தார்களாம்.

தனக்கு முதல் மதிப்பு (மரியாதை) கிடைக்கவில்லையாம்; முத்தைய முதலியாருக்குத்தான் முதல் மதிப்பு கொடுக்கப்பட்டதாம். இவ்வளவும் மாமாவின் குற்றச் சாட்டு.

"நீ உன் பெண்ணுக்கு என்ன பெரிய சீர் செய்து விட்டாய்? நீ உன் தங்கைக்கு என்ன செய்திருக் கிறாய்? நீ உன் தங்கைக்குச் செய்திருப்பதைவிட நான் என் தங்கைக்குச் செய்திருப்பது ஒன்றும் குறைந்து விடவில்லை" என்றெல்லாம் அப்பாவும் மாமாவும் குறை கூறிக்கொள்ளும் அளவுக்கு நிலைமை முற்றிவிட்டது.

நானும் அம்மாவும் எத்தனையோ காரணங்காட்டி எவ்வளவோ அமைதி செய்தும், எவ்வளவோ கெஞ்சிக் குழைந்து கூத்தாடியும் மாமா ஒத்துக்கொள்ளவேயில்லை; விருந்துக்கு வர மறுத்தவர் மறுத்தவர்தான். அவர் இல்லாமலேயே விருந்து முடிந்தது. அவர் உண்ணாத தால், அப்பாவும் உண்ணவில்லை—அம்மாவும் உண்ண வில்லை. அல்லியை அழைத்துக்கொண்டு போவது என்ற ஒரு கடமை இருந்ததால் அவர் இங்கே தங்கினார்— இல்லாவிட்டால் எப்பொழுதோ தம் வீட்டுக்கு ஓடிப் போயிருப்பார்.

"எங்கள் வீட்டு நிகழ்ச்சியில்மட்டுமா இந்தப்பிணக்கு ஏற்பட்டது? இதுபோல் எண்ணற்ற இல்லங்களில் நல்ல காரியம் நடக்கும்போது இத்தகைய கோணல்கள் குறுக்கிட்டிருக்கின்றன. அப்பப்பா! இந்த மனிதமந்தை என்றுதான் திருந்துமோ?"

உரிய நேரம் வந்ததும் உருக்கத்துடன் அல்லி பயணம் சொல்லிக்கொண்டாள். அவளை அழைத்துக் கொண்டு அத்தையும் மாமாவும் தம் இல்லம் ஏகினர்.

# 11

சில நாட்கள் சென்றதும் அல்லியைக் காணவேண்டும் என்ற ஆவல் மிக்கது. ஒருநாள் மாமா வீட்டிற்குச் சென்றேன். மாமா நடுக்கூடத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் என்னை வரவேற்கவே இல்லை—பேசவும் இல்லை. நான் தயங்கித் தயங்கி நின்றுகொண்டிருந்தேன். என்னைக் கண்ட அத்தையின் தலை ஆடியதே தவிர வாய் பேசவேயில்லை. இது மாமாவின் கண்டிப்பான ஆணையின் விளைவு எனப் புரிந்துகொண்டேன். நான் கையில் கொண்டு வந்திருந்த மலர்களையும் பழங்களையும் மேசைமேல் வைத்தேன். மாமா எழுந்து வந்து அவற்றை வாசலிலே தூக்கி எறிந்துவிட்டார். மருமகப்பிள்ளைக்கு மாமனார் வீட்டில் இவ்வளவு சீரும் சிறப்பும் போதாவா? இனியும் அங்கு நிற்க மனமில்லை. நான் புறப்படத் திரும்பியபொழுது, கலங்கிய கண்களுடன் நடுக்கட்டில் நின்று என்னையே பார்த்துக்கொண்டிருந்த அல்லியைக் கண்டு தத்தளித்தேன். மேலும் அங்கே நிற்க மறுத்துக் கால்கள் வெளியேறிவிட்டன.

வீட்டிற்கு வந்து நடந்ததைச் சொன்னேன். இனி மேல் எக்காரணத்தைக் கொண்டும் எப்போதுமே அங்கே போகவேண்டாம் என்று அப்பா எச்சரிக்கை செய்தார்.

அம்மாவுக்குமட்டும் மனம் கேட்கவில்லை. ஒருநாள் அல்லியைப் பார்த்துவரச் சென்றார்கள். எனக்கு நடந்ததுபோலவே அவர்களுக்கும் நடந்தது. மேற்கொண்டு இன்னும் ஒன்று கூடுதலாகவும் அம்மாவுக்கு நடந்திருக்கிறது. என்னிடம் வாய் திறவாதிருந்த மாமா, அம்மாவை நோக்கி, "இனி நீங்கள் யாரும் இந்தப் பக்கமே அடி எடுத்து வைக்கக்கூடாது; உங்கள் மருமகளை வேண்டுமானால் இப்பொழுதே அழைத்துக் கொண்டு போய்விடலாம்" என்று கண்டித்துப்பேசி அனுப்பிவிட்டார். அழாத குறையாய் அம்மா வந்து சேர்ந்தார்கள்.

மாமா திருந்திவிட்டார் என்று எண்ணியிருந்தேன். மறுபடியும் 'பழைய குருடி கதவைத் திறடி' என்ற கதை தான். நாய் வால் நிமிருமா?

மேலும் சிலநாள் சென்றதும், அல்லிக்குக் குழந்தை பிறந்திருப்பதாக அறிந்தோம். அவள் விரும்பியபடியே பெண் குழந்தைதான். இந்த முறை உரிய பொருள்களுடன், அம்மாவும் நானும் சேர்ந்தாற்போல் குழந்தையைப் பார்க்கச் சென்றோம். முன்பு நடந்ததற்கும் இப்பொழுது நடந்ததற்கும் அணுவளவும் வேற்றுமையில்லை—அதே வரவேற்புதான்—வாய் பேசா வரவேற்புதான் நடந்தது. வீட்டிற்குத் திரும்பிய போதும், முன்போலவே, இனி யாரும் வரவேண்டாம் என்ற மங்கலச் சொற்கள் காதில் விழுந்தன. ஆனால்

ஒரே ஒரு வேற்றுமை! முன் தடவையில், மாமா உங்கள் மருமகளை அழைத்துக்கொண்டு போய்விடலாம் என்று சொன்னார். இந்தத் தடவையோ, உங்கள் குழந்தையை எடுத்துக்கொண்டு போய்விடலாம் என்று சொன்னார். கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளவில்லை—அவ்வளவு தான்!. அப்பா சொன்னது சரியாய்ப் போயிற்று. இனி அங்கே என்ன வேலை?

உள்ளத்திலே ஒருவகைத் திகில் உணர்வு எழுந்தது. 'மீண்டும் நல்லபடியாக வந்து உங்களை அடைவேனோ' என்று அல்லி அன்றைக்கு அஞ்சியது அடிக்கடி நினைவிற்கு வந்து என்னையும் அச்சுறுத்தியது.

பிள்ளை பிறந்த ஐந்தாவது மாதத்தில், தாயையும் சேயையும் அழைத்துக்கொண்டு வருவதற்காக, அப்பாவும் அம்மாவும் மாமா வீட்டிற்குச் சீர்வரிசைகளுடன் சென்றார்கள். மாமா அனுப்ப மறுத்து விட்டார். 'இனி யாருமே வரவேண்டாம்—என்றைக்குமே அனுப்ப முடியாது' என்று அடித்துப் பேசி விட்டார். ஒரு பெரிய போரே நடத்திவிட்டு என் பெற்றோர் திரும்பி விட்டனர்.

"கடன் பட்டும் பட்டினி—கல்யாணம் பண்ணியும் பிரம்மசாரி" என்று சொல்லுவார்கள். நானோ, பிள்ளை பெற்றும் பிரம்மசாரியாகவே காலம் கடத்தி வந்தேன். எத்தனையோ பேர்கள் குழந்தைக்காக அருந்தவம் கிடக்கிறார்கள். குழந்தை பிறந்தும், அதை ஆர்வத்தோடு வாரியணைத்து உச்சி மோந்து முத்தம் இட்டு, குதலை மொழி கேட்டுக் கொஞ்சிக் குலவுவதற்கு நான் கொடுத்து வைக்கவில்லை. இதை எண்ணிய போதெல்லாம், என் நெஞ்சம் எரிமலையாகக் குமுறிக் குழம்பியது. இந்த நேரத்தில், என் மருமகன்—கற்பகத்தின் மகன்—மாறன்

தான் எனக்கு ஆறுதல் அளித்து வந்தான். உள்ளூரிலேயே இருந்ததால், மாறன் பெரும்பாலும் எங்கள் வீட்டிலேயே வளர்ந்து வந்தான். என் மலரும் என்னுடன் இருந்திருந்தால் இன்னும் எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா? எங்கள் குழந்தைக்கு 'மலர்' என்று அல்லி பெயர் வைத்திருக்கிறாளாம். அழகான பெயர்! மலரை எண்ணி எண்ணி மாழ்குவேன். என்னை நினைத்து அல்லி என்ன பாடு பட்டிருப்பாளோ! இப்படியே இரண்டாண்டுகள் கழிந்தன.

குழந்தையின் ஏக்கம் பெரிய ஏக்கமா யிருந்தது. ஒருநாள், மாமாவுக்குத் தெரியாமல் கொஞ்ச நேரம் குழந்தையை அனுப்பி வைக்கும்படி அல்லிக்குச் சொல்லியனுப்பினேன். அல்லியோடும் குழந்தையோடும் தொடர்பு கொள்ள எடுத்துக்கொண்ட முதல் முயற்சி தான் இது!

மாமா வெளியே சென்றிருந்த நேரம் பார்த்து அல்லி குழந்தையைக் கொடுத்தனுப்பினாள். மலர் என்றால் மலர்தான்! இது என்ன மலரோ! முல்லையோ—மல்லிகையோ! செந்தாமரையோ—செம்பருத்தியோ! இல்லையில்லை—என் அழகு மலர் அல்லி மலர்தான்!—அல்லி பெற்றெடுத்த அல்லி மலரேதான்!

என் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை. நான் தூக்கி முத்தம் கொடுப்பதற்குமுந்தியே வீட்டிற்கு வந்திருந்த கற்பகம், என் அணைப்பிலிருந்து மலரைப் பறித்துக்கொண்டாள்—இல்லையில்லை—கல்லில் நார் உரிப்பதுபோல, என் வச்சிரப் பிடியிலிருந்து மலரைப் பிய்த்து இழுத்தாள். அவள் கையிலிருந்து அம்மா கொய்து கொண்டார்கள். அம்மா கையிலிருந்து அப்பா

தட்டிப் பறித்துக் கொண்டார். அடுத்த சுற்று என்னுடையது. இப்படியாக மலர் அடுத்தடுத்துக் கைக்குக் கை மாறிக் கசங்கியே போயிற்று. இறுதியாக இந்தச் சுற்றுமுறை நீடிக்கவில்லை. எங்கள் நால்வருடைய எட்டுக் கைகளும், ஒரே சமயத்தில், மலரை இதழ் இதழாகப் பிய்க்கத் தொடங்கின. முகத்தில் மட்டுமல்ல —உடம்பு முழுவதும் முத்த மாரிகள் பொழியப்பட்டன. கண்ணே—கரும்பே—கற்கண்டே—கனிச்சாறே முதலிய உருவக விளிகள், கவிஞர்களின் கற்பனைகளைக் கடந்து சென்றன.

"பாம்பு பசியை நினைக்கிறதாம்—தேரை விதியை நினைக்கிறதாம்!" பலநாள் பசித்தவன் பால் சோற்றைக் கண்டதுபோல, நாங்கள் மலரைச் சுவைத்து மகிழ்ந்து கொண்டிருந்தோம். ஆனால் மலரோ, 'திருதிரு' என விழித்தாள். ஒவ்வொருவரையும் ஏற இறங்க முறைத்துப் பார்த்தாள். இறுதியில் 'அம்மாகிட்டே போறேன்—அம்மாகிட்டே போறேன்' என்று அடம்பிடித்து அழத் தொடங்கி விட்டாள். என்ன சொல்லியும்—என்ன செய்தும் ஓயவில்லை. மிட்டாய் கொடுத்துப் பார்த்தோம் —பிஸ்கட் கொடுத்துப் பார்த்தோம்—ஒன்றும் நடக்கவில்லை. கைகால்களை உதறிக்கொண்டு, என் அம்மாவின் இடுப்பிலிருந்து கீழே குதித்து, தெருப்பக்கம் ஓடத் தொடங்கினாள். கதவைச் சாத்தித் தாள் இட்டுவிட்டோம். 'நரிக்குக் கொண்டாட்டமாம்—நண்டுக்குத் திண்டாட்டமாம்' என்பது போல, எங்கள் இன்பம் அவளுக்குத் துன்பமாயிற்று.

அந்த நேரத்தில், ஒரு சின்ன விளையாட்டுச் சைகிள் வண்டியில் அமர்ந்து, அதனைச் சுற்றியபடி வாசலில் வட்டமிட்டுக் கொண்டிருந்த மாறனை மலர் பார்த்தாள்.

அழுகையை நிறுத்திவிட்டு அவனை நெருங்கினாள். சைக்கிளைத் தொட்டுப் பார்த்தாள். மாறனுக்குப் பின்னால் அவளையும் ஏற்றி உட்காரவைத்தோம். சிறிது நேரம் 'சைக்கிள் சவாரி' நடந்தது. குழந்தைகள், விளையாட்டுப் பொருள்களின்மூலம் விரைவில் பிற குழந்தைகளோடு தொடர்பு கொள்வார்கள்—என்று உளநூலில் படித்தறிந்த செய்தியை அப்பொழுது நான் நேரில் கண்டேன். திடீரென்று ஏதோ தடுக்கியதால் சைகிள் கவிழ்ந்தது. மலரும் மாறனும் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து கட்டிக்கொண்டார்கள். குழந்தைகளைத் தூக்கி விட்டோம். மலர் மீண்டும் அழ ஆரம்பித்துவிட்டாள். அந்த அழுகை கடைசிவரை நிற்கவேயில்லை.

அப்பொழுது அல்லியிட மிருந்து ஆள் வந்தான். மாமா வீட்டிற்குத் திரும்பும் நேரமாயிற்றும்; அதற்குள் மலரை விரைவில் கொடுத்தனுப்பி விடவேண்டுமாம்; இல்லாவிட்டால் ஏதாவது வினை நேர்ந்துவிடுமாம்.—இது வந்தவன் தந்த விளக்கம். இதைக் கேட்டதும், அப்பா சீறி விழுந்தார். "அவன் கிடக்கிறான் சடையன்; குழந்தையைக் கொடுத்தனுப்ப வேண்டாம்; இங்கேயே இருக்கட்டும். அவன் வீட்டுப்பெண்ணை (அல்லியை) வேண்டுமானால் அவனே வைத்துக்கொள்ளட்டும். நம் வீட்டுப் பெண்ணை (மலரை) நாமே வைத்துக் கொள்வோம்" என்று அப்பா பொரிந்துதள்ளினார். அது முறையாகுமா? அம்மாவும் நானும் ஒத்துக்கொள்ள வில்லை. மேலும், தாயைப் பிரிந்து சேய் எப்படி யிருக்க முடியும்? எனவே, மழையென முத்தங்களைப் பொழிந்து, மனமின்றியே மலரைக் கொடுத்தனுப்பினோம். என்னையும் அறியாது என் கண்களில் நீர் மல்கியது. உலக வழக்கில், மகளைக் கணவன் வீட்டுக்கு

அனுப்பும்போது, பெற்ருேர்கள் கதறிக் கண்ணீர் வடித்ததைச் சில இடங்களில் நான் கண்டு வியந்திருக்கிறேன். அதிலுள்ள உண்மை (இரகசியம்) இப்போதுதான் எனக்குப் புலப்பட்டது. அரைமணி நேரம் வந்து உடனிருந்த மகளையே என்ஞல் பிரிய முடியவில்லையே! பதினைந்து இருபதாண்டுகள் வளர்த்துக் கட்டிக் கொடுத்த பிறகு எப்படித்தான் பிரிந்திருப்பேனே, எனக்கே தெரியவில்லை!

ஆனல், மலர் வந்திருந்தபொழுது, இன்னும் அரை மணி நேரத்தில் பிரிந்து போய்விடுவாள் என்ற எண்ணமே எனக்கு வரவில்லை; அவள் என்னவோ காலமெல்லாம் என்னுடன் கழிக்க இருப்பதுபோலவே எனக்குத் தோன்றியது. இது பிள்ளைப்பற்றின் ஒரு கூறு போலும்!, என் மலர் நாடகத்தில் வந்து போவது போல், முகத்தைக் காட்டிவிட்டு ஓடிவிட்டாளே!

இதே ஏக்கமாய் இருந்த என்னை நோக்கி, "சாப்பிட வா தம்பி! மலரையே நினைத்துக்கொண்டிருக்காதே! அவள் இன்னொருமுறை வருவாள். நம் குழந்தை நம்மிடம் வராமல் வேறு எங்கே போய்விடப் போகிருள்? எழுந்து வா!" என்று அம்மா என்னை உணவருந்த அழைத்தார்கள். நானும் எழுந்தேன். அப்பொழுது தெரு வாயிற்படியில் மலர் அழுங்குரல் கேட்டது. அம்மா வாய்க்குச் சர்க்கரை கொட்டவேண்டும். அதே ஆள் மலரைத் தூக்கிக்கொண்டு வீட்டிற்குள் நுழைந்தான். 'மலர் வருவாள்' என்று அம்மா சொன்னது அப்பொழுதே பலித்துவிட்டது. வந்தவன் விவரம் சொன்ஞன் :—

மலர் இங்கே வந்திருந்தபொழுது, அங்கே மாமா வெளியிலிருந்து வீட்டிற்குத் திரும்பிவிட்டாராம். மலர்

எங்கே என்று கேட்டாராம். அல்லியும் அத்தையும் ஏதோ 'சாக்கு போக்கு' சொன்னார்களாம். ஆனால், வீட்டிலிருந்த சிறு பிள்ளைகள் உண்மையைச் சொல்லி விட்டார்களாம். மாமா 'நரசிம்ம அவதாரம்' எடுத்தாராம். அந்த நேரத்தில்தான் இவன் மலரை இங்கிருந்து அழைத்துக்கொண்டு போயிருக்கிறான். அவர் மலரைக் கண்டதும், 'அந்த வீட்டுக்குப் போய்வந்த குழந்தை இனி இந்த வீட்டில் இருக்கவே கூடாது; அங்கேயே கொண்டுபோய் விட்டுவிடுங்கள்' என்று ஆணையிட்டாராம். அத்தையும் அல்லியும் மறுத்தார்களாம். அப்படியென்றால், 'குழந்தையையே கொன்று விடுவேன்—அல்லது, நான் தற்கொலை பண்ணிக்கொள்வேன்—இரண்டில் எது வேண்டும் உங்களுக்கு?' என்று மாமா குதியாய்க் குதித்தாராம். அத்தையும் அல்லியும் அஞ்சிக் குலை நடுங்கி, குழந்தையை இங்கே அனுப்பி வைத்து விட்டார்களாம்—

—என்று வந்தவன் சொல்லி, குழந்தையை எங்கள் வீட்டில் விட்டுச் சென்றான். குழந்தை வந்தவரைக்கும் எங்கள் எல்லோருக்கும் மகிழ்ச்சிதான். ஆனால் இந்த முறையிலா வருவது? தாயைப் பிரிந்து தனியாகக் குழந்தை எப்படியிருக்கும்? அல்லிதான் எவ்வாறு குழந்தையைப் பிரிந்திருக்க முடியும்? இது மிகக் கொடுமை. ஏன்தான் அந்த மாயாண்டி முதலிக்கு இத்தனை கேடுகெட்ட எண்ணமோ? பெரியவர்களின் மனக்கோணலால் உலகில் எத்தனையோ குழந்தைகள் பலியாகி உள்ளனவே!

மலர் வந்தால் போதும் என்று இருந்தது போக, அவள் போய்ச் சேர்ந்தால் போதும் என்று ஆகிவிட்டது எங்களுக்கு! அம்மாவிடம் கொண்டுபோய் விடுங்கள்—

அம்மாவிடம் கொண்டுபோய் விடுங்கள் என்று சொல்லி எங்கள் உயிரையே வாங்கிவிட்டாள். குழந்தையைத் தணிவுசெய்து எங்கள் வழிக்குத் திருப்பிக் கொண்டுவர ஒரு மாதத்துக்குமேல் ஆயிற்று.

இப்பொழுது மலர் எங்கள் வீட்டுப் பெண். எப்போதும் என்னுடனேயே இருப்பாள். நான் எங்கே சென்றாலும் என்கூட வருவதற்கு அடம்பிடிப்பாள். அவளை அவ்வளவு செல்வமாக வளர்த்து வந்தேன். அவள்மகிழ்ச்சியிலே அல்லியின் பிரிவுத் துன்பத்தை ஒருவாறு மறந்திருந்தேன். அப்பாவும் அம்மாவுங்கூட, பேரக்குழந்தையோடு பொழுது போக்கி மெய்ம்மறந்து போவார்கள். இப்போது நாங்கள் புதுவாழ்வு தொடங்கியுள்ளோம் என்றே சொல்லலாம்.

"மனிதர் நூறாண்டு வாழவேண்டும்.—இன்னின்ன முறைகளைப் பின்பற்றினால், அதற்குமேலும் வாழலாம்" —என்று சிலர் பேசக் கேட்டிருக்கிறேன்—எழுதியதைப் படித்திருக்கிறேன்—அதற்காகச் சிலர் முயலுவதையும் கண்டிருக்கிறேன். நான் அப்பொழுதெல்லாம் பின்வருமாறு நினைப்பதுண்டு: — மனிதன் ஏன் நூறாண்டு வாழவேண்டும்? ஐம்பது அறுபது ஆண்டுகள் வாழ்ந்தால்தான் போதாதா? அதற்கும் குறைவாக இருந்தால்தான் என்ன? நெடுநாள் இருந்து என்ன செய்யப்போகிறான். நேற்று உண்ட உணவுதான் இன்றைக்கும்—நேற்று உடுத்ததுதான் இன்றும்—அதே உறக்கம்தான்—அதே ஆண்பெண் இன்பம்தான்—அதே உழைப்புதான்—அதே அநுபவம்தான். புதிதாக என்ன அநுபவித்துவிடப் போகிறான்? ஓரளவு வாழ்ந்து அநுபவித்துப் பார்த்துவிட்டவன் இன்னும் எந்த

இன்பத்திற்காக இருக்கவேண்டும்? இளைஞர்கள் வேண்டுமானால் இன்னும் எத்துணையோ இன்பங்களை அநுபவிக்க வேண்டும்—அதனால் அவர்கள் இன்னும் உயிர்வாழ வேண்டும் என்று விரும்புவதில் பொருள் உண்டு. எல்லாம் அநுபவித்து விட்ட—ஐந்தடியும் அடித்துப் போரிலே போட்டு விட்ட கிழவர்களுக்கு இன்னும் ஏன் வாழ்க்கை சலிக்கவில்லை? இவ்வுலகத்திலேயே இருக்கவேண்டும் என ஏன் விரும்புகிறார்கள்? இறப்பதற்கு ஏன் அஞ்சுகிறார்கள்?—என்றெல்லாம் நான் பலமுறை எண்ணியதுண்டு–பலரிடம் சொன்னதும் உண்டு.

ஆனால் இப்பொழுதுதான் உண்மை உணர்ந்தேன். வயதாக வயதாக வாழ்க்கை சலிக்காதிருப்பதில் உள்ள இரகசியம் இப்போதுதான் எனக்குப் புலனாயிற்று. அது சரியோ, தவறோ—சொல்லிவிடுகிறேன்.

நூறாண்டு காலமாக வாழ்ந்து வரும் ஒரு மனிதன், வாழ்க்கையில் ஒருமுறைமட்டும் பிறக்கவில்லை—திரும்பத் திரும்பப் பலமுறை பிறக்கிறான்; ஒருமுறை மட்டும் குழந்தைப் பருவத்தில்—குமரப் பருவத்தில்—கட்டிளங் காளைப்பருவத்தில் திகழ்வதில்லை—அவ்வாறு பலமுறை திகழ்கிறான். இன்னும் தெளிவாகச் சொல்லவேண்டுமானால், ஒருவன் தன் நூறுவது வயதில்கூட, புதிதாகப் பிறக்கிறான்—குமரனாக—கட்டிளங் காளையாக உலகில் உலவி வாழ்கிறான். இதனால்தான் மனிதன் எவ்வளவு காலம் வாழ்ந்தாலும் அவனுக்கு வாழ்க்கை சலிப்பதில்லை—என்ற பேருண்மையைப் புரிந்துகொண்டேன்.

நான் இவ்வளவுநேரம் குறிப்பிட்டு வந்ததெல்லாம் பிள்ளைப் பேற்றைப் பற்றித்தான்! ஒருவன் தன் இருபத்

தைந்தாவது வயதில் மணம் செய்துகொண்டு பிள்ளையும் பெற்று விடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். அவன் அப்பொழுது ஒருமுறை பிறந்து குழந்தையாகிறான்; அதாவது, அந்தக் குழந்தையோடு குழந்தையாய்க் கொஞ்சி விளையாடிக் குழந்தை வாழ்க்கை வாழ்ந்து, அதில் ஒரு தனி இன்பம்—புது இன்பம் காண்கிறான். குழந்தை பள்ளிக்கூடம் படிக்கத் தொடங்கியதும் தானும் புதிதாகப் படிப்பு தொடங்குகிறான்; அதாவது, பிள்ளையோடு பிள்ளையாய், அரிச்சுவடியும் ஆரம்பக் கணக்கும் பார்த்து அதிலொரு மகிழ்ச்சி காண்கிறான். இவ்வாறு தன்பிள்ளை வளருந்தோறும் தானும் பிள்ளையாக—அப்பிள்ளையின் கூடவே — அப்பிள்ளைக்காகவே வாழ்ந்து வருகிறான். இவனுடைய பேச்சு மூச்சு செயல்கள் யாவும் பிள்ளையின் பெருநலத்துக்காகவே இயங்குகின்றன. ஒவ்வொரு குழந்தையும் பிறக்குந் தோறும் மனிதன் இவ்வாறே புதுவாழ்வு தொடங்குகிறான். மேலும், ஐம்பது அறுபது ஆண்டுகள் ஆகிவிட்டால் பேரக் குழந்தைகளின் மூலம் புதுவாழ்வு தொடங்குகிறான். தொண்ணூறு அல்லது நூறு வயது ஆகிவிட்டால், கொள்ளுப்பேரக் குழந்தைகள் மூலம் புதுவாழ்வு தொடங்குகிறான். தன் விரிந்து பரந்த குடும்பத்தின் பல கிளைகளையும் கண்டு கண்டு களிப்பதிலேயே காலம் கழிக்கிறான். அந்தக் குடும்பத்தை விட்டுப்பிரிய மனம் துணிய மாட்டாமல் தத்தளிக்கிறான். இதனால்தான் வயதானாலும் வாழ்க்கை சலிப்பதில்லை.

திருமணமாகியும் பிள்ளை பிறக்காதவர்களுக்கு, நாற்பது வயதுக்குள்ளாகவே வாழ்க்கை சலித்து விடுவதின் இரகசியமும் இப்போது விளங்குமே! பிள்ளையில்லாதவர்கள், வாழ்க்கை சலிக்காதிருப்பதற்காகவே,

பிறர் பிள்ளையைத் தத்து எடுத்து வளர்க்கிறார்கள் என்ற உண்மையும் ஈண்டு நினைவுகூரத்தக்கது.

எனவே, என்மகள் மலர் எங்கள் வீட்டிற்கு வந்ததிலிருந்து, நானும் என்பெற்றோரும் புதுவாழ்வு தொடங்கியிருப்பதில் வியப்பொன்றும் இல்லையல்லவா?

எங்களுக்குப் புதுவாழ்வு தொடங்கியிருக்கலாம்; ஆனால் அல்லிக்கு இருண்டவாழ்வு தானே? சூல்விழாவின் முதல்நாள் இரவு நான் அல்லியிடம் சொன்னது நினைவிற்கு வந்தது:— "இனிமேல் நான் உன்னைக் கவனிக்கமாட்டேன்; என் பிள்ளையைத்தான் கவனிப்பேன்" என்று நான் சொன்னதும், "நீங்கள் விளையாட்டுக்குச் சொல்வது பலித்துவிடக் கூடாது அத்தான்!" என்று சொல்லி அல்லி அஞ்சியதும் என் நினைவிற்கு வரவே நிலைகலங்கினேன். இப்படியே சிறிது காலம் ஓடிற்று.

இப்பொழுதெல்லாம் நான் மாமாவீட்டுத் தெருப் பக்கமே போவதில்லை. எங்கேபோய் வருவதானாலும் வேறு தெருவழியாகவே போய்வந்துகொண் டிருந்தேன். அதனால், அல்லியை எவ்வகையிலும் காணமுடியாதவனாய் இருந்தேன். ஒருநாள் முன்னிரவு உலாத்திவிட்டு, அல்லியைப் பற்றியும், அவளோடு வாழ்ந்த சிறிதுகால வாழ்க்கையைப் பற்றியும் நினைத்துக் கொண்டே வீட்டிற்குள் நுழைந்தேன். எதிர்பாரா விதமாய் வீட்டிற்குள் ஓர் எலும்புக்கூடு நிற்கக்கண்டு வியப்புற்றேன்! ஆம் அல்லிதான் அந்த உருவம். கணவனைப் பிரிந்தமையால் காரைக்காலம்மையார் எலும்புருவம் ஆனார்களாம்! அல்லியோ கணவனுடன் இப்போது மகளையும் பிரிந்திருக்கிறாளே! இப்படியில்லாமல் பின்னே எப்படி யிருப்பாள்? இங்கேவந்திருப்பதின் நோக்கம் யாதோ?

ஒருவேளை, ஏதாவது குற்றம் கண்டுபிடித்து மாமா ஏசிப் பேசி விரட்டி விட்டாரா? அல்லது, குழந்தையைப் பிரிந்துவாழ மனமில்லாமல், தானாகவே தந்தையைப் பகைத்துக்கொண்டு அல்லி வந்துவிட்டாளா? என்று ஊகம் பண்ணிப்பார்த்தேன். அப்படி யில்லையாம். குழந்தையைக் கொஞ்சநேரம் பார்த்துவிட்டுப் போய் விடலாம் என்று மாமாவுக்குத் தெரியாமல் வந்திருப்ப தாக அறிந்தேன். அவள் குழந்தையோடு கொஞ்சி விட்டுப்போக வந்ததாகத் தெரியவில்லை. அழுது விட்டுப் போகவே வந்தாள் போலும்! ஒரே விக்கலும் விம்மலும் அழுகையும் அலறலும்தான்.

குழந்தையைக் கண்டதும், அவள் தன் முடிவை மாற்றிக்கொண்டு விட்டாள்.. பார்த்துவிட்டுப் போய்விட வேண்டும் என்று வந்தவள், "என்ன வந்தாலும் வரட்டும்; இனி நான் தாய்வீட்டுக்குப் போக மாட்டேன்— இங்கேயே தங்கிவிடுகிறேன்" என்று சொல்லி அம்மாவின் காலைக் கட்டிக்கொண்டாள். அம்மாவும் நானும் ஒத்துக் கொண்டோம். ஆனால் அப்பா உடன்படவில்லை. "நாங்கள் அழைக்க வந்தபோது உன் அப்பன் அனுப்ப மாட்டேன் என்று சொன்னான் அல்லவா? அவன் அனுப்பு வதாக ஒத்துக்கொண்டு என்னிடம் மன்னிப்பு கேட்டால் தான் நான் உன்னை இங்கே தங்கவிடுவேன். நீ வேண்டு மானால் போய் அவன் கருத்தைக் கேட்டறிந்து சொல்லி அனுப்பு! அதன்பிறகு நான் வந்து அழைத்துக்கொண்டு வருகிறேன். அதுவரையும் நீ அங்கேயேதான் இருக்க வேண்டும்" என்று அப்பா தீர்த்துச் சொல்லிவிட்டார். இதைக்கேட்ட அல்லி, என்ன நினைத்தாளோ! அடுத்த விநாடியே, குழந்தையையும் கண்ணெடுத்துப் பார்க்க விரும்பாதவளாய், 'விர்' என நடையைக் கட்டிவிட்டாள்.

பெண்ணுயிருந்தாலும் அவளுக்கு மானம் இருக்காதா என்ன?

பெண்கொடுத்துக் கொள்ளும் பெரியவர்கள்—இல்லை யில்லை—தன்மையினால் மிக மிகச் சிறியவர்கள்—தங்களுக்குள் வீம்பு பண்ணிக்கொண்டு இப்படியா இளையோரின் வாழ்க்கையைக் கெடுப்பது? அப்பாவிகளின்மேல் போடுவதற்காகவா அணுகுண்டுகள் இருக்கின்றன? ஏன், என் அப்பாவையும் மாமாவையும் இரோம்சிமாவாகவும் நாகசாகியாகவும் ஆக்கிக் கொள்ளலாமே!

பெரியவர்கள் இவ்வாறு பிணங்கி, இளம் உள்ளங்களைப் பிரிக்கின்றனர். ஆனால் அந்த இளம் உள்ளங்களோ வாழத்துடிக்கின்றன—பெரியவர்களை விட்டுப் பிரிந்து தனிக்குடும்பம் நடத்துகின்றன. உடனே, பிள்ளைகள் தங்களைக் கைவிட்டு விட்டதாக அந்தப் பெரியவர்கள் ஒப்பாரி வைக்கின்றனர். இது யார் குற்றம்?



# 12

இனியும் உள்ளூரில் இருக்க எனக்குப் பிடிக்கவில்லை. எங்கேனும் வெளியூர் சென்று வேலை பார்க்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். மேலும் எனக்கு இன்னொரு பெரிய குறிக்கோள் உண்டு. நான் விஞ்ஞானத்தை விருப்பப் பாடமாக எடுத்துப் படித்தவன் ஆதலால், எப்பொழுதுமே எனக்கு அந்தக் கலையில் ஒருகண் உண்டு. உலகின் மாபெரும் விஞ்ஞானிகள் சிலரைப்போல, நாமும் நம் வாழ்க்கையில் சில அரிய பெரிய விஞ்ஞான சாதனைகளைச் செய்து முடிக்கவேண்டும் என்ற பேராசை எனக்கு எப்போதுமே உண்டு. அதற்கேற்ற வாய்ப்பு வசதிகட்காகக் காத்திருந்தேன்.

வேலைக்காக ஏதேனும் விளம்பரம் வருகிறதா என நாடோறும் செய்தித்தாள்களை ஊன்றி நோக்கிவந்தேன். அலுவலக எழுத்தர் வேலைக்கு நிறைய விளம்பரங்கள் வந்தன. அதில் என்நாட்டம் செல்லவில்லை. "திட்ட மிட்டால் உயர்ந்ததாகத் திட்டமிடு—அது தவறிப் போனாலும் வெற்றி பெற்றதாகவே பொருள்" என்று குறள் கூறுகிறதல்லவா? உயர்ந்த கற்பனை யுலகத் திலேயே நான் உலவிக்கொண் டிருந்தேன். சிலர், கற்பனையைப் பகற்கனவு என்றும், கைகூடாத மனக் கோட்டை யென்றும் சாடுவது சரியாகாது. எண்ணெய்க் குடம் தூக்கிச்சென்றவன், "இதை விற்றுப் படிப்படி யாகப் பணக்காரனாகி, பின்னர் குதிரை வாங்கி, டாக்—டாக் என்று சவாரி செய்வேன்" என்று குதித்துக் குடத்தைக் கீழே போட்டு இருந்த எண்ணெயையும் இழந்துவிட்ட கதையைக் குறிப்பிட்டு, கற்பனை செய்பவர் களைக் கிண்டல் பண்ணுவதும் பொருந்தாது. உலகில் முன்னுக்கு வந்துள்ள அத்தனைபேரும் எண்ணெய்க் குடம் தூக்கிச்சென்றவர்களே — அதாவது கற்பனை யுலகில் பகற்கனவு கண்டு மனக்கோட்டை கட்டியவர்களே! அவர்களுள் சிலர் வெற்றி பெறுகிறார்கள் —சிலர் குடத்தை உடைத்துவிடுகிறார்கள். முன்னவரை உலகம் உயர்த்துகிறது—பின்னவரைத் தாழ்த்துகிறது. எனவே, என் பேராசை எனக்குச் சரியாகவே தோன்றியது. ஆனால், கற்பனைக்கும் ஓர் எல்லை உண்டு என்பது எனக்கும் தெரியும்!

ஒருநாள், 'சென்னையில் உள்ள விஞ்ஞான ஆய்வுக் கூடம் ஒன்றிற்கு ஓர் எழுத்தர் தேவை' என்ற விளம் பரம் வந்தது. விஞ்ஞான ஆய்வுக்கூடம் என்ற தலைப்பைக் கண்டதும் ஆவலுடன் படித்தேன். எழுத்தர்

வேலை என்று அறிந்ததும் அயர்ந்து போனேன். அப்போது எனக்கு, ஒரு பேரறிஞரின் பொன்னெழுத்துக்கள் நினைவிற்கு வந்தன :—" நீ வாழ்க்கையில் முன்னேற வேண்டுமானால், அதற்காகக் காலத்தை எதிர்பார்த்து எதிர்பார்த்துக் காலத்தையே வீணாக்கி விடாதே! இன்றைக்கே — இப்பொழுதே — இந்த விநாடியே தொடங்கிவிடு! அந்தவேலை—இந்தவேலை என்று பாராமல், முதலில் கிடைக்க இருப்பதையே முதல்படியாகக் கொண்டு உன் முன்னேற்றத்திற்கு ஆரம்பவிழா செய்துகொள். பின்னர் அதிலிருந்தபடியே உயர்ந்த குறிகோளுக்குத் தாவலாம்" என்ற அறிவுரையைக் கடைப்பிடித்தேன். விஞ்ஞான ஆய்வுக்கூடத்தில் எழுத்தர்வேலை செய்துகொண்டே விஞ்ஞானியாக மாறலாம் என்ற முடிவுக்கு வந்தேன். எழுதிப் போட்டேன். வெற்றியே! பெற்றோருக்கும் மகள் மலருக்கும் ஆறுதல் சொல்லி, சென்னை சென்றடைந்தேன்.

சென்னை எனக்குப் புதியது அன்று. கல்லூரிப் படிப்பிற்காக நான்கு ஆண்டுகள் அங்கு வதிந்திருக்கிறேன். ஆனால் அப்போது கல்லூரி விடுதியில் உண்டு உறைந்துவந்தேன். இப்போது வெளியில் வாழ வேண்டும். எங்கள் ஆய்வுக்கூடத் தலைவர் மிகவும் நல்லவர். வெளியில் இடம் கிடைக்கும்வரை சில நாட்கள் ஆய்வுக் கூடத்திலேயே தங்கியிருக்க அன்புடன் ஒப்புதல் அளித்தார். அவருடைய அருள் கூர்ந்த ஒத்துழைப்பின் பேரில், எழுத்து வேலைபோக மீதி நேரங்களில் விஞ்ஞான ஆராய்ச்சியில் கவனஞ் செலுத்தி வந்தேன். பல விஞ்ஞான நுணுக்கங்களையும் தலைவரிடம் தெரிந்து கொண்டேன்.

இன்னும் எனக்கு வெளியில் இடம் கிடைக்கவில்லை. என்னுடன் எழுத்துவேலை பார்த்து வந்த இளம்பெண் கமலா என்பவள் சொந்த வீட்டுக்காரி. அவள், தங்கள் வீட்டில் மாடியில் இடம் காலி யிருப்பதாகவும் அங்கு வந்துவிடலாம் என்றும் அறிவித்தாள். அவள் என்னிடம் பழகிக்கொண்டு வந்தமுறை, எனக்கு ஐயத்தையும் அச்சத்தையும் ஊட்டியதால், அந்தச் சனியனை விலைக்கு வாங்கிக்கொள்ளாமல் ஒதுங்கிக் கொண்டேன். அப்படியும் அந்த ஏழரை ஆட்டையான் விடுவதாகத் தெரியவில்லை.

அலுவலகத்திலேயே தொடர்ந்து குடியிருப்பது முறையாகாது. ஊரிலுள்ள சொந்த வீட்டையும் இங்கே கொண்டுவர முடியாது. எத்தனையோ வீடுகள் ஏறி இறங்கினேன்—இடம் கிடைக்கவில்லை. என்ன செய்வது? "உலகில் ஒருவருக்காவது சொந்த வீடே கிடையாது; ஒவ்வொருவரும் இருப்பது இரவல் வீடுதான்" என்று வள்ளுவர் ஓரிடத்தில் கூறியுள்ளார். உயிர் உடம்பில் குடியிருப்பதைத்தான் அவ்வாறு குறிப்பிடுகிறார். உடம்பில் உயிர் எப்போதும் இருக்கும் என்று சொல்ல முடியுமா? உடம்பு என்றைக்குத் திடீர் என்று உயிரைக் கிளப்பிவிடுமோ? சொந்த வீடா யிருந்தால் எப்போதும் நிலையாக இருக்கலாம். வாடகை வீடானால், வீட்டுக்காரன் எப்பொழுது வேண்டுமானாலும் ஒத்துழையாமை இயக்கம் செய்து குடியிருப்பவனைக் கிளப்பிவிடலா மல்லவா? உடம்பிலே இரவல் குடி இருந்துகொண் டிருக்கும் நான், சென்னையில் அந்த உடம்புக்கு ஓர் இரவல் வீடு தேடிக்கொண்டிருந்தேன். வீட்டுத் தரகர் ஒருவர் ஓர் இடத்தை அமர்த்திவிட்டு வந்து, என்னை அழைத்துக்கொண்டுபோய் அங்கே குடி

யேற்றினர். என் குடி மாடியில்தான். குடியேறிய பிறகு பார்த்தேன் கீழே கமலா இருப்பதை! ஏழரை ஆட்டை யான் சனி எப்படியோ பிடித்துக்கொண்டதே! ஐயோ தலைவலியே! ஏழரை மாதமாவது அங்கே இல்லாமல் முடியுமா? காலைச் சுற்றிய பாம்பு கடிக்காமல் இருக்க வேண்டும்!

நான் ஊரைவிட்டு வந்ததும், என் மகள் மலர் என்னைக் கேட்டுக்கேட்டு முதலில் சில நாட்கள் அழுது அடம்பிடித்ததாகவும், இப்போது அமைதியாய் விளை யாடி வருவதாகவும் அப்பா கடிதம் எழுதியிருந்தார். நானும் அலுவலகத்தில் என் கடமைகளைச் செவ்வனே செய்துவந்தேன்.

கமலாவின் கட்டாயக் காதல் முயற்சியைத் தவிர, வேறு எந்தத் தொல்லையும் இல்லாது கடமையாற்றி வந்த எனக்குத் திடீரென ஒரு விபத்து நேர்ந்தது. ஆய்வுக் கூடத்தில் தவறான முறையில் ஒரு சோதனையில் ஈடுபட்ட தால் எனக்கு வெடி விபத்து ஏற்பட்டது. உடம்பெல் லாம் காயம். நான் உணர்விழந்தேன். பின்னர் உணர்வு வந்து விழித்துப் பார்த்தபோது, மருத்துவமனையில் படுக்கையில் கிடப்பதை அறிந்தேன். என் பெற்றோர்க்குச் செய்தி அனுப்பியிருப்பதாகத் தலைவர் சொன்னார்.

மறுநாள் மாலை, அப்பா, அம்மா, கற்பகம், மலர், மாறன் ஆகிய ஐவருடன் அல்லியும் என் கட்டிலின் அருகில் நின்றுகொண்டிருந்ததைக் கண்டபோது நான் என் கண்களை நம்பவேயில்லை. ஊருக்குச் செய்தி போனதும், அல்லிக்கும் தெரிவித்தார்களாம். அப்போது மாமா ஊரில் இல்லையாம். வந்தது வரட்டும் என்று

அல்லியும் இவர்களுடன் புறப்பட்டு வந்துவிட்டாளாம். மைத்துனர் பாண்டியனும் ஊரில் இல்லையாம். அதனால் கற்பகம்மட்டும் மாறனை அழைத்துக்கொண்டு வந்திருந்தாள். எல்லோரும் என்னைக் கண்டு நெஞ்சம் உருகினர். கண்களில் நீர் கசிய நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். தந்தையில்லாத நேரத்தில் வந்ததால் அல்லியையும், கணவன் இல்லாத நேரத்தில் வந்ததால் கற்பகத்தையும் சீக்கிரம் ஊருக்கு அனுப்பிவிட வேண்டும் என்று அப்பா துடித்தார். அவருடைய வற்புறுத்தலினால் இருவரும் பிரிய மனமின்றிச் சென்றார்கள். அவர்களை வண்டியேற்றி அனுப்பிவிட்டு, அப்பாவும் அம்மாவும் மலருடன் சென்னையிலேயே சில நாட்கள் தங்கினர். எனக்கு உடல்நலம் திரும்பியதும், விடுமுறை எடுக்கச்செய்து ஓய்வுக்காக ஊருக்கு அழைத்து வந்தனர்.



# 13

ஊர் திரும்பியதும், திடுக்கிடும் செய்தி ஒன்று கேட்டு அதிர்ந்து இடிந்துபோனேன். அல்லி சென்னை யிலிருந்து ஊர் திரும்பி வீட்டிற்குச் சென்றபோது, வெளியூர் சென்றிருந்த மாமா வீட்டிற்கு வந்திருந்தாராம். அல்லியைக் கண்டதும், "நீ யாரைக் கேட்டுக்கொண்டு அங்கே போனாய்? இனி நீ இங்கே இருக்கக் கூடாது. அவர்களுடனேயே போய்ச் சேர்ந்துகொள்" என்று சொல்லி, கன்னா பின்னா என்று வாய்க்கு வரக்கூடாத வசை மொழிகளால் வைதாராம்—கன்னத்தில் அறைந் தாராம்—கழுத்தை நெட்டினாராம். அன்று இரவிலிருந்து அல்லியைக் காணவில்லையாம்.

இச்செய்தி கேட்டு, இடியுண்ட நாகம்போல் ஆகி உள்ளம் உளைந்தே போனேன். என் அல்லியை நான் எங்கு கண்டு தேடுவேன்? என் இன்ப வாழ்வை—என் இன்னுயிரை நான் எங்குகண்டு தேடுவேன்? என் குணக்குன்றை—என் குடும்ப விளக்கை நான் எங்கு கண்டு தேடுவேன்? என் அன்பை—என் அரும்பெறல் செல்வத்தை நான் எங்குகண்டு தேடுவேன்?

உயிரோடு இருந்தால் அல்லவா தேடிக் கண்டுபிடிக்கலாம்? ஒருவேளை தற்கொலை செய்துகொண்டிருந்தால்...? அப்படியிருக்க முடியாது. எனக்காக இல்லாவிட்டாலும், தன் மகள் மலருக்காகவாவது எங்கேயாவது உயிரோடு இருக்கத்தான் செய்வாள். இம்முறை நான் கண்டுபிடித்து விட்டால், இனி என் அல்லி எனக்குத்தான்! அவள் தந்தை இனி எப்போதுமே அழைத்துக்கொண்டு போகமுடியாது. அந்தப் பேர்வழி போன மகளை இதுவரை தேடவே யில்லையாம். என்ன தான் இரும்பு நெஞ்சமோ! ஆனல், அத்தைமட்டும் அழுது புலம்பிக்கொண் டிருக்கிறுர்களாம்.

அல்லி எங்கே போயிருப்பாள்? முன்பின் வெளியூர் சென்றறியாத ஒரு பெண்பிள்ளை திடீரென்று எங்கே போக முடியும்? வெளியூரில் தனியாக எப்படி வாழ முடியும்? ஏன் முடியாது? அன்போ, சினமோ, இன்பமோ, துன்பமோ, இன்ன பிற மனவெழுச்சிகளோ தோன்றிவிட்டால், இதற்குமுன் செய்தறியாத—செய்ய முடியாது என்று சோர்ந்து கைவிட்ட—செய்யக் கூடாது என்று அஞ்சிய செயல்களைக்கூட மக்கள் துணிந்து செய்து முடிப்பர். வேறு வழியில்லை என்று தெரிந்த போது விரைவில் ஒரு முடிவுக்கு வந்து செயலாற்றுவது உயிர்களின் இயல்பு. எனவே, என் இன்ப அல்லியும்

எங்கேயாவது போய்த் தங்கியிருக்கக் கூடாதா? அவள் படித்தவளாயிற்றே—எப்படியாவது பிழைத்துக்கொள்ள முடியாதா?

நானும் அப்பாவும் எங்கெங்கோ தேடினேம். எந்த எந்த ஊருக்கோ ஆட்களை அனுப்பினேம். போலீசுக்குத் தெரியப்படுத்தினேம். செய்தித்தாள்களில் விளம்பரப் படுத்தினேம். அல்லி கிடைக்கவேயில்லை. மலர் தாயை மறந்துவிட்டாள். ஆனல் என்னல் இயலுமா? அம்மா எவ்வளவோ ஆறுதல் சொன்னர்கள்—ஆறவில்லை. எந்தத் துயரமும் உடனே ஆறிவிடுவதில்லை. அது தனக்கு வேண்டிய நாட்களை எடுத்துக்கொள்ளத்தான் செய்கிறது. "யார் ஆற்றுவார்—நாள் ஆற்றும்" என்பது எவ்வளவு அநுபவமொழி!

மீண்டும் எனது வேலையை ஒப்புக்கொள்ளச் சென்னைக்குப் புறப்பட்டேன். "உயிருக்குத் தீம்பான அந்த வேலை இனி வேண்டவே வேண்டாம்" என்று என் பெற்றேர்கள் எவ்வளவோ தடுத்தார்கள். நான் கேட்பேனு? "கோழைக்கு எது தடைக்கல்லாக இருக்கிறதோ, அதனையே தன்னை முன்னேற்றும் படிக்கல்லாகக் கொண்டு ஏறி வீரன் மேலே சென்றுகொண்டிருப்பான்" என்று ஓரறிஞர் கூறியிருக்கிறர். "செய்துகொண்டிருக்கும் வேலையை ஒருவன் வெறுத்தால், அவனது வாழ்க்கையின் கடைசி அத்தியாயம் முடிந்துவிட்டதாகவே பொருள்" என்றும், "அத்தகையவன் இப்பொழுதே தன் சவக்குழியில் ஒரு காலை விட்டுக் கொண்டவனவான்" என்றும் அறிஞர்கள் எழுதிவைத்துள்ள புரட்சிக் கருத்துக்களை நான் அறிந்து வைத்துள்ளேன். வேறு வேலைக்குப் போகவும் செய்யலாம்; ஆனல் அதுவரையும், செய்யும் வேலையை மனம் ஒப்பிச் செய்ய

வேண்டும். இத்தகைய உறுதியுடைய என்னை, இடையிலே ஏற்பட்ட சிறு தீங்கு என்ன செய்துவிட முடியும்? தாய்தந்தையரைத் தேற்றி, சென்னைக்குப் புறப்பட்டேன். வேண்டுமானல் சில ஆண்டுகள் என்னுடன் வந்து வதியும்படி அவர்களைக் கேட்டுக்கொண்டு சென்னை சேர்ந்தேன்.

மீண்டும் வழக்கம்போல் என் அலுவலக வேலைகளைக் கவனித்து வந்தேன். விஞ்ஞான அறிவிலும் ஆராய்ச்சியிலும் மேலும் முன்னேறிக்கொண்டிருந்தேன். சென்னைக்கு அல்லி வந்து என்னைப் பார்த்துவிட்டுப் போனதைக் கொண்டு, எனக்குத் திருமணம் ஆகிவிட்டது என அறிந்துகொண்டதால், கமலா தன் காதல் முயற்சிகளைக் கைவிட்டு, என்னை அண்ணன் முறைபோட்டு அழைக்கத் தொடங்கினள். இதனல், எவ்வளவோ வேதனை குறைந்தது. சனி பெயர்ந்து விட்டதல்லவா?

சில வாரங்கள் சென்றதும், ஊரிலிருந்து கடிதம் வந்தது. பாண்டியனை வேற்றூர் ஒன்றிற்கு மாற்றிவிட்டார்களாம். நானும் இல்லாமையால், அப்பாவுக்கும் அம்மாவுக்கும் தனியாக ஊரிலே யிருக்கப் பிடிக்கவில்லையாம். மலரும் அப்பா—அப்பா என அடிக்கடி அழுகிருளாம். உணவுக் கடையில் சாப்பிடுவதால் என்னுடம்பும் கெட்டுப் போகுமாம். அப்பாவாலும் அம்மாவாலும் என்னைவிட்டுப் பிரிந்திருக்க முடியவில்லையாம். எனவே, நான் முன்பு வேண்டிக் கொண்டபடி, தாங்களும் சென்னைக்கு வந்து சில ஆண்டுகள் தங்கலாம் என்று விரும்புவதாக அப்பா கடிதம் எழுதியிருந்தார். உடனே புறப்பட்டு வரும்படி நானும் வலியுறுத்திக் கடிதம் எழுதினேன். அதன்படி, நிலங்களைக் குத்தகைக்காரர்களிடம் ஒப்படைத்து, வீட்டில்ஒருவரைக் குடிவைத்து, கொடுக்கல்

வாங்கலை ஒழுங்கு செய்து, இன்னும் ஊரில் செய்ய வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் செய்து முடித்து, அப்பாவும் அம்மாவும் மலருடன் சென்னைக்கு வந்து குடியேறினார்கள். இனி எனக்கு உணவு முதற்கொண்டு எல்லாம் வசதிதான்! இப்படி வந்து குடியேறுபவர்களால் தானே சென்னை நிரம்பி வழிகிறது!

நான் இன்னும் அல்லியைத் துருவித்தேடும் முயற்சியைக் கைவிடவும் இல்லை—அவள் கிடைக்கவும் இல்லை. அவள் எந்த உலகத்தில் இருக்கிறாளோ? யார் கண்டார்? காலம் கடந்துகொண்டிருந்தது.



## 14

மலருக்கு ஐந்து வயது நிரம்பியதும், ஒரு நல்ல பெண்பள்ளிக்கூடத்தைத் தேர்ந்தெடுத்து, கொண்டு போய்ச் சேர்த்தேன். நான் குடியிருக்கும் இடத்திலிருந்து பள்ளிக்கூடம் சுமார் ஒரு கல் தொலைவு இருக்கும். மலரால் நடந்து போய்வர முடியாது. பள்ளிக்கூடத் தாரே காலையில் வந்து தம் வண்டியில் குழந்தையை அழைத்துப் போவார்கள்; மதியம் உணவு அவர்களே தருவார்கள்; மாலையில் வீட்டிற்குக் கொண்டுவந்து விடுவார்கள். அதற்குரிய கட்டணத்தை நான் செலுத்தி விடுவேன். இந்த வசதி இருந்ததனாலேயே அந்தப் பள்ளியை நான் தேர்ந்தெடுத்தேன். என் பெற்றோர் எனக்காக வாழ, நான் மலருக்காக வாழ்வதுபோல் காணப்பட்டது எங்கள் குடும்பத்தின் நடைமுறை.

பள்ளிக்கூடத்தின் நடைமுறையைப் பற்றி ஆரம்பத்தில் மலருக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. போகப் போக அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளை ஒன்று விடாது என்னிடம் விவரிக்கத் தொடங்கினாள். அவளது பள்ளி வாழ்க்கையைப் பற்றி அவள் வாயால் நாடோறும் கேட்டுக் கொண்டிருப்பதுதான் எனக்கு இனிய பொழுது போக்கு. ஆசிரிய அக்காமார்களைப் பற்றி அடிக்கடி சொல்லுவாள்—நிரம்பச் சொல்லுவாள். ஆசிரியைகள் எல்லாரும் அவளுக்கு அக்கா முறைதான். அக்காமார்களை அவளுக்கு நன்றாகப் பிடிக்குமாம். அவர்கள் அவளை நன்றாகக் கவனித்து வந்தார்களாம். உனக்கு எந்த அக்காமேல் மிகுந்த விருப்பம்? என்று நான் அவள் வாயைக் கிண்டுவேன். குறிப்பாக, மங்களம் அக்காவைத்தான் தனக்கு மிகவும் பிடிக்கும் என்று சொல்வாள். அந்த அம்மா, மலருக்குத் தலைவாரி விடுவாளாம். மதியம் உணவு பரிமாறும்போது, சில சமயம் ஊட்டியும் விடுவாளாம். நல்ல ஆசிரியைமார்கள்! நல்ல பள்ளிக்கூடம்! வீட்டிற்கும் பள்ளிக்கும் வேற்றுமை தெரியாமல் மலர் நன்கு படித்து வளர்ந்து வந்தாள்.

இப்பொழுது மலர் ஐந்தாவது வகுப்பு படித்துக் கொண்டிருக்கிறாள். முன்னிலும் பன்மடங்கு பள்ளிக்கூட நிகழ்ச்சிகளைப்பற்றிச் சொல்லுவாள். ஒருநாள் வியத்தகு செய்தியொன்று வெளியிட்டாள். அன்று விடுமுறை நாள். ஆனாலும் ஏதோ விழா நடந்ததால் மலர் பள்ளிக்கூடம் சென்றிருந்தாள். அப்படியே இன்னும் சில சிறுமியருடன் சேர்ந்துகொண்டு, அண்மையில் உள்ள மங்களம் அக்கா வீட்டிற்குச் சென்றாளாம். அங்கே மங்களத்தின் படுக்கை அறையில் ஒரு படம் மாட்டியிருக்கக் கண்டாளாம். என் படுக்கை

அறையிலுள்ள படம்போலவே அதுவும் இருக்கிறதாம். எனவே, நம் வீட்டுப் படம் அந்த வீட்டுக்கு எப்படிப் போயிற்று? என்று என்னிடம் ஒரு கேள்வி கேட்டாள். அவளையும் அழைத்துக்கொண்டு என் படுக்கையறைக்குப் போனேன். மாட்டிய படம் மாட்டியபடியே இருந்தது. "நான் இந்தப் படத்தைக் கடையில் வாங்கினேன்— இதேபோல் மங்களம் அக்காவும் கடையில் வாங்கி யிருக்கலாம்" என்று சொல்லி நான் அந்நேரத்துக்கு அவளை அமைதி பண்ணிவைத்தேன்.

நான் புரிந்துகொண்டேன்—மங்களம் யார் என்று! என் திருமணத்தன்று எடுத்த புகைப்படம்தான் அது! அதன் இன்னொரு படி மாமாவீட்டில் இருந்தது. அதுதான் இப்பொழுது மலரின் மங்களம் அக்காவீட்டில் இருப்பது. அந்த மங்களம் யார்? அவள்தான் என் அல்லி! நாங்கள் இருவரும் திருமணக் கோலத்தோடு படம் எடுத்துக் கொண்டோம். எனவே, அல்லி இருக்கும் இடம் இப்போது தெரிந்து விட்டது. இந்த உண்மையை மலருக்கோ, என் பெற்றோருக்கோ நான் தெரிவிக்க வில்லை. மங்களம் அக்கா என்னும் மறு பெயரிலேயே அல்லி இன்னும் சில நாளைக்கு இருக்கட்டும்!

மலர் தன் மகள்தான் என்று அல்லிக்குத் தெரிந்து தான் இருக்கும். மலருக்காகவே அவள் அங்கே வேலை பார்க்கிறாள் போலும்! மலர் அங்கே படிப்பது அவளுக்கு எப்படி தெரியுமோ? எவ்வாறு அங்கேவந்து சேர்ந்தா ளோ? எவ்விதமோ, எனக்கு இருந்த இரண்டு குறைகள் குறைந்துவிட்டன. ஒரு குறை, மலர் தன் தாய் கையால் வளர்வதற்கு இல்லையே, என்பது. மற்றொரு குறை, மலரோடு கொஞ்சிக் குலவ அல்லி கொடுத்துவைக்க

வில்லையே, என்பது. இந்த இரண்டு குறைகளுக்குமே இடமில்லைபோல் தெரிகிறதே!

எப்படியாவது அல்லியைப் போய்க் காணவேண்டும் —அவள் உடன்பாட்டையும் தெரிந்துகொள்ளவேண்டும் —அதன் பிறகு அப்பாவுக்கும் அம்மாவுக்கும் தெரிவித்து விட்டு அவளை அழைத்துக்கொண்டு வரவேண்டும்— என்று எண்ணினேன்.

அல்லி ஏன் எங்களிடம் வந்து சேர்ந்துகொண் டிருக்கக் கூடாது? ஒருவேளை, என் தந்தையார் ஏற்றுக் கொள்ளமாட்டார் என்று அஞ்சியிருக்கலாம். முன்பு ஒருமுறை அவர் ஏற்றுக்கொள்ளாமல் விரட்டிவிட்டார் அல்லவா? எனக்கு மனைவி வேண்டும் என்பது அவருக்குப் புரிந்தால்தானே? நான் என்ன, உணர்ச்சி யற்ற மரக்கட்டையா? அல்லது, தள்ளாத கிழவனாகி விட்டேனா? என்னை மட்டும் காமநோய் சும்மா விட்டு விடுமா?

வாழ்க்கையில், மற்ற நோய்களைவிட மிக்க ஆண்டுகள் நீடித்திருப்பதால் எல்லாவற்றினும் காம நோய் கொடியதென்றும், பிறந்ததுமுதல் இறக்கும் வரையும் நீடித்திருப்பதால் பசிநோய் அதனினும் கொடியதென்றும் கூறுவது வழக்கம். என்னைக் கேட்டால், பசிநோயினும் காமநோயே கொடியது என்பேன். நான் ஒரு கோணத்தில் நின்று காமநோயின் கொடுமையைக் காண்கிறேன். உணவு இல்லாதவன் தான் இன்னொருவருடைய உணவை விரும்புகிறான்— கெஞ்சுகிறான்—கேட்கிறான். இருப்பவன் அவ்வாறு செய்வதில்லை. கெஞ்சிக்கேட்ட ஏழையேகூட திடீர்ப் பணக்காரனாகிவிட்டால், ஒருவர் உண்ணுவதற்கு வருந்தி

அழைத்தாலும், அவர் வீட்டில் சென்று உண்ண ஏழு முறுக்கு—எட்டுக் கிறுக்கு பண்ணுகிறுன். காமம் அத்தகையதன்று. மனைவி இருப்பவன், இல்லாதவன் எல்லோருமே வேறொருவர் பெண்ணை விரும்பும் இழிநிலைக்கு ஆளாவதைக் காணலாம். இதிலிருந்து காமநோயின் கடுங்கொடுமை புரியவில்லையா? நான் மட்டும் இதற்கு விதிவிலக்கா? ஆனல், நான் போராடி என் உள்ளத்தைக் கட்டுப்படுத்த முயன்றேன். இல்லாவிடின், கண்ட கண்ட போரிலே மேயும் மாட்டுக்கும் மனிதனுக்கும் என்ன வேற்றுமை?

அல்லியின் இருப்பிடத்தை அறிந்ததும், அன்பு ஒரு புறம் இருக்க, அவளை எப்படியாவது விரைவில் அடைய வேண்டும் என்ற துடிப்பில் காமத்தீயும் ஒரு புறம் கொழுந்து விட்டு எரிந்தது. மறுநாள் மாலை, மலர் சொன்ன அடையாளத்தைக் கொண்டு அல்லியின் இருப்பிடம் நோக்கிச் சென்றேன். ஆசிரியைகள் தங்குவதற்கு என்று, பள்ளிக்கூடத்தை ஒட்டி விடுதிகள் கட்டித்தரப் பட்டிருந்தன. அப்பகுதிக்குள் சென்று, மங்களம் என்னும் ஆசிரியை வீடு எது? என்று வினவினேன். ஒரு வீட்டைக் காட்டினூர்கள். நான் அடக்கமுடியாத ஆவலுடன் அங்கு சென்றேன். அந்த வீட்டு வாயிற் படியில் பெண்ணுருவத்தில் ஒரு பெருங் கரும்பூதம் நின்று கொண்டு, என்னை வரவேற்கும் முறையில், யாரைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறீர்கள்? என்று கேட்டது. மங்களம் அம்மாவைப் பார்க்கவேண்டும் என்றேன். நான்தான் மங்களம்—என்ன வேண்டும்? என்று அப்பூதம் வினவியது. எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. என் அல்லி எங்கே? இந்தக் கரிய பெரிய பூதம்போன்ற பெண் எங்கே? குழந்தை மலர் உளறியதை நம்பி. இந்த

அம்மாவை அல்லி என்று நினைத்துக்கொண்டு வந்து விட்டோமே என்று வெட்கப்பட்டு வெல வெலத்துப் போனேன்.

இதுவும் ஒருவகையில் நல்லதுதான். மலரை அன்போடு ஆதரித்து வருவதற்காக அந்த அம்மாவுக்கு நான் நன்றி செலுத்த வேண்டு மல்லவா? "என் மகள் மலர் என்ற சிறுமி உங்களைப்பற்றி அடிக்கடி சொல்லு வாள். அவளை அன்போடு கவனித்து வருவதற்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்த மிகவும் கடமைப் பட்டுள்ளேன். என் நன்றியைத் தெரிவித்துப் போவதற் காகவே வந்தேன். நான் போய் வருகிறேன். வணக்கம்!" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். "யாரு—மலரா—சிறுமியா? அவளை எனக்குத் தெரியாதே. நான் பெரிய வகுப்பு ஆசிரியை. சிறுமிகளைக் கவனிக்கும் சின்ன வகுப்பு ஆசிரியை—மங்களம் என்னும் பெய ருடைய வேறு ஓர் அம்மா அதோ அந்த வீட்டில் வசிக் கிறார்கள். என்னிலும் இளைய அம்மா—சிவப்பாயிருப் பார்கள். அங்கே போய்ப் பாருங்கள்!" என்று கறுப்பு மங்களம் சொன்னார்கள். என் வயிற்றில் பால் வார்த் தாற்போல் இருந்தது. அந்த மங்களம் அல்லியாகத் தான் இருக்கவேண்டும் என்ற நன்னம்பிக்கை முனைக்கு வந்தேன். உடனே என் சிவப்பு மங்களத்தின் இருப் பிடம் நோக்கிச் சென்றேன்.

நீண்டநாள் பிரிவுக்குப்பின் ஏற்படும் முதல் சந்திப்பு இது. என்னைக் கண்டதும் அல்லி மெய்ம் மறந்து போவாள். நானோ நிலைதடுமாறுவேன். இரு வரும் ஆரக்கட்டித்தழுவிக் கொள்வோம். அப்போது, இன்ப உணர்வின் எக்களிப்பிலே என் இதயம்வெடித்து

விடாமல் இருக்கவேண்டும். உணர்ச்சியால் உந்தப்பட்டு, அந்த வீட்டை அடைந்து மெள்ளக் கதவைத் தட்டினேன்.

'யாரது?' என்ற இனிய மெல்லிய குரலுக்குப்பின் கதவு திறக்கப்பட்டது. எதிர்பாராது என்னைக் கண்டதும், 'நீங்களா?' என்று மருண்டு வெருண்டாள் அல்லி.

"ஏன், நான்தான்! இங்கே வரக்கூடாதா?"

"நான் இங்கே இருப்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"மலர் இங்கே படிப்பது உனக்கு எப்படித் தெரிந்ததோ, அப்படித்தான் நீ இங்கே இருப்பதும் எனக்குத் தெரிந்தது."

"நீங்கள் சொல்வது புரியவில்லையே."

"மலர் இந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்திருப்பதை நீ எப்படியோ தெரிந்துகொண்டுதான் இங்கேயே ஆசிரியையாக வந்திருக்கிறாய். தாயும் சேயும் சேர்ந்தது பற்றி எனக்கு மகிழ்ச்சியே! நம் திருமணப் புகைப்படம் ஒன்றை உன் படுக்கையறையில் மலர் கண்டிருக்கிறாள். அதே படம் ஒன்று என் படுக்கையறையிலும் இருப்பது அவளுக்குத் தெரியும். 'இதேபோல் மங்களம் அக்கா வீட்டிலும் ஒரு படம் இருக்கிறது' என்று மலர் சொன்னாள். அதைக்கொண்டு நான் உன்னைக் கண்டு பிடித்தேன். நீ எப்படி மலரைத் தெரிந்துகொண்டாய்? ஊரிலிருந்து வெளியேறியதிலிருந்து உன் வரலாற்றைச் சொல்லு!"

“ நான் முன்பு சென்னைக்கு வந்து உங்களை மருத்துவ மனையில் பார்த்துவிட்டு ஊர் திரும்பியதும், அப்பா என்னைக் கடுமையாகத் தாக்கினர். வையக்கூடாத வார்த்தைகளால் வைதார். அவற்றுள் ஒன்று, என் அடி உள்ளத்தில் ஆணியென ஆழப் பதிந்துவிட்டது. “ நீ பொல்லாத காமுகி; கணவனேடு சேர்ந்துகொண்டு பிள்ளை பெறவேண்டும் என்ற காமவெறியினுல்தான் நீ அவனைப் பார்க்கச் சென்ருய் ” என்று அப்பா சொல்லிய பழிச்சொல் என் உள்ளத்தில் ஆழத் தைத்தது. “ இனி இங்கே இருக்காதே—வெளியேறிவிடு ” என்றும் விரட்டினர். மலரை விட்டுவிட்டுத் தற்கொலை செய்து கொள்ள விரும்பாததால் அன்றிரவே ஆருக்கும் தெரி யாமல் சென்னைக்குப் புறப்பட்டுவிட்டேன். உங்களைப் பார்க்கச் சென்னைக்கு வந்திருந்தபொழுது, அங்கே ஒரு தெருவில், ‘ திக்கற்ற மகளிர் இல்லம்’ என்ற பலகை மாட்டிய ஒரு கட்டிடத்தைத் தற்செயலாகக் கண்டிருந் தேன். அது நினைவிற்கு வந்ததால், அந்த இடத்தையே அடைந்து அடைக்கலம் வேண்டினேன். ஆதரவு கிடைத்தது. அந்த இல்லத்தின் தலைவி மிகவும் நல்லவர். என் வரலாற்றை அவர்களிடம் விளக்கி, “ என்னைப்பற்றி எப்போதும் எவரிடமும் எதுவும் வெளியிடக்கூடாது; அப்படி வெளியிட்டால் நான் உலகத்தில் வாழமுடியாது உயிரை மாய்த்துக்கொள்வேன் ” என்று சொல்லி அவர் களிடம் உறுதி வாங்கிக் கொண்டேன். எனக்காக நீங்கள் செய்திருந்த விளம்பரமும் எங்களுக்குத் தெரியும். பேசாமல் இருந்துவிட்டோம். பிறகு என் விருப்பப்படி, என்னை ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்த்துப் படிக்கவைத்து ஆசிரியை ஆக்கினர்கள். நீங்கள் விஞ்ஞானக் கூடத்தில் வேலை பார்ப்பதை எங்கள் தலைவிக்குத் தெரிவித்தேன். அவர்கள் மூலமாக,

நீங்கள் குடியிருக்கும் இடமும், மலர் படிக்கும் இடமும் கண்டு பிடிக்கப்பட்டன. என் வேண்டுகோளின்படி, அந்தப் பள்ளிக்கூடத்தில் என்னை ஆசிரியையாக எங்கள் தலைவி அமர்த்திஞர்கள். நான் உங்களைக்கூட இரண்டு மூன்று முறை எங்கெங்கோ கண்டு ஒளிந்துகொண்டிருக் கிறேன். உங்களுக்குப் பணிவிடை செய்ய முடியாது போனமைக்கு மிகவும் வருந்துகிறேன். இதுதான் என் வரலாறு!"

"என்ன காரியம் செய்தாய் அல்லி! சென்னைக்கு வந்தவள் நேரே ஏன் என்னிடம் வந்திருக்கக் கூடாது?"

"உங்களிடம் வந்தால் உங்கள் அப்பா ஏற்றுக் கொள்ளமாட்டாரே. முன்பு ஒருமுறை நம் ஊரில் மலரைப் பார்ப்பதற்காக நான் உங்கள் வீட்டிற்கு வந்த போது, அங்கேயே தங்கிவிடுவதாகச் சொன்னேன் அல்லவா? என் தந்தையார் மன்னிப்பு கேட்டுக்கொண் டால்தான் என்னை ஏற்றுக்கொள்ள முடியும் என்று உங்கள் தந்தையார் உரைத்துவிட்டாரே! எனவே, என் தந்தையார் மன்னிப்பு கேட்கப்போவதும் இல்லை— உங்கள் தந்தையார் என்னை ஏற்றுக்கொள்ளப் போவது மில்லை."

"என் தந்தையார் முன்பு அப்படி மொழிந்தது உண்மைதான்—நினைவு இருக்கிறது. ஆனல் இப் பொழுது அவர் அடியோடு மாறிவிட்டார். நீ கிடைத் தால் போதும் என்றிருக்கிருர். அதனல்தான் எனக்கு இரண்டாவது திருமணம் செய்துவைக்க வேண்டுமென்ற பேச்சே எடுக்கவில்லை. உன்னைத் தேடுவதற்காக என்னேடு சேர்ந்துகொண்டு எவ்வளவோ பாடுபட்டார் தெரியுமா? அந்த முயற்சியை அவர் இன்னும் கைவிட

வில்லை. முழுமனத்தோடு உன்னை வரவேற்கக் காத்துத் தவங்கிடக்கிறார். எனவே உடனே என்னுடன் புறப்படு.''

"உங்கள் தந்தை ஒத்துக்கொண்டால் போதுமா? என் தந்தையால் எனக்கு ஏற்பட்டுள்ள களங்கம் என்ன ஆவது? கணவனோடு சேர்ந்து பிள்ளை பெறவேண்டும் என்று நான் காமவெறி பிடித்து அலைவதாக என் தந்தை சொன்னாரே, அந்தக் களங்கத்தை அறவே அகற்ற விரும்புகிறேன். நான் காமவெறி பிடித்த கயமையள் அல்லள் என்பதை என் தந்தைக்கு மட்டுமல்ல—உலகத்திற்கே உணர்த்தவேண்டும் என்ற உறுதியான நோன்பு எடுத்துக்கொண்டுள்ளேன். எனவே நான் உங்களுடன் வருவதற்கில்லை. அருள்கூர்ந்து என்னை மன்னித்து விடுங்கள்!''

"உன் தந்தையின் அறியாமைக்காக—முரட்டுப் பிடிவாதத்திற்காக, நீ உன் வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளலாமா? உன் கணவன் வாழ்வு என்ன ஆவது? உன் கண்மணி மலரின் வாழ்வு என்ன ஆவது? மலரை நன்கு வளர்த்துத் திருமணம் செய்துபார்க்க வேண்டாமா? மலர்மணத்தை உன் கண் குளிரக் கண்டு களிக்க வேண்டாமா?''

"நான் எங்கிருந்தாலும், மலர்மணம் நடக்கும் போது வாழ்த்துகூற வந்துவிடுவேன். தயவுசெய்து இப்பொழுது என்னை இம்மட்டோடு விட்டுவிடுங்கள்! உங்களுக்கு மனைவியாக வாய்த்தும், உங்களுக்கு உறுதுணையாக இருக்க முடியாமைக்கு மன்னிக்கவேண்டுகிறேன். எப்போதுமே உங்கள் நல்வாழ்வில் எனக்கு அக்கரை உண்டு. வேறொரு பெண்ணை மணந்து மனை

யறம் நடத்தும்படி உங்களை மன்றாடி வேண்டிக்கொள்கிறேன்.”

“அப்படி சொல்லக்கூடாது அல்லி! உன்னை அழைத்துப் போகலாம் என்று நான் எவ்வளவு ஆவலாக வந்திருக்கிறேன் தெரியுமா?”

என்று சொல்லிக்கொண்டே ஆர்வத்துடன் நான் அல்லியின் கையைப் பற்றினேன். “விடுங்கள் என் கையை! என் உடன்பாடின்றி என்னைத் தொடாதீர்கள்! இப்பொழுதே இந்த இடத்தைவிட்டு அகன்று விடுங்கள்!” என்று எரிந்து காய்ந்து அல்லி என்னை எச்சரித்தாள். காமவெறி பிடித்தவள் என்று தன்னைத் தன் தந்தை வைதது தன் உள்ளத்திலே தைத்தது என்று அவள் சொன்னாளே, அதைவிட இப்பொழுது அவள் என்னை எச்சரித்தது மிகவும் என் உள்ளத்திலே தைத்தது. ‘எம்மைத் தீண்டாதீர்!’ என்று சொன்ன மனைவியாரை நோக்கி, “இனி உன்னைமட்டுமல்ல—உன் பெண் இனத்தையே, உடம்பால் மட்டுமல்ல—உள்ளத்தாலும் தீண்டவே மாட்டேன்” என்று சூள் உரைத்து அதன்படியே நடந்துகாட்டிய திருநீலகண்டரின் வரலாறு என் நினைவிற்கு வந்தது. அவ்விதமே நடந்து கொள்ளவேண்டும் என்ற முடிவுக்கு நானும் வந்தேன். இந்த முடிவை அல்லியிடம் தெரிவித்தேன். “இனி நான் உன்னைத் தொடக்கூட மாட்டேன். நீ என் மனைவியாக இல்லாமல், என் உடன்பிறந்தவள் போலவே என்னுடன் வந்து இருக்கலாம். எனக்காக இல்லாவிட்டாலும், மலருக்காகவாவது வா” என்று கெஞ்சினேன். அதற்கும் அவள் மறுத்துவிட்டாள். இஞ்சி தின்ற குரங்கானேன்—இலவங் காத்த கிளி ஆனேன். வறிதே வீடு திரும்பினேன். இதை எவரிடமும் சொல்லவில்லை.

மேலும். இடையிடையே சில நாட்கள் விட்டுவிட்டு அல்லியிடம் சிலமுறை சென்று முயன்று பார்த்தேன்— முடியவில்லை. நான் அங்கே செல்வதால், அண்டை பக்கத்தில் உள்ளவர்கள் அவளைப்பற்றி ஏதேதோ தாறு மாருகப் பேசிக்கொள்வதாகக் கூறி அழுவாள். இனி வரவேண்டாம் என்றும் கேட்டுக்கொள்வாள். நான் திரும்பிவிடுவேன்.

இறுதியாக ஒருமுறை நான் அங்கே சென்றபோது அல்லியைக் காணவில்லை. அவள் அந்தப் பள்ளிக் கூடத்தைவிட்டு அகன்றுவிட்டாள் என்றும், எங்கே போயிருக்கிருள் என்பது தங்களுக்குத் தெரியா தென்றும் அங்குள்ளவர்கள் சொன்னுர்கள். எல்லோரும் ஒரு மாதிரியாக என்னை ஏற இறங்கப் பார்த்தார்கள். நான் அல்லிக்குக் கணவன் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்?

எனது நடமாட்டத்தால் தனக்குப் பழி நேர்வதற்கு அஞ்சியே அல்லி அவ்விடத்தைவிட்டு அகன்றிருக்கிருள் என்பதை உணர்ந்தபோது, வெய்யிலில் அகப்பட்ட புழுப்போல் நான் துடித்தேன். நான் அவள் வாழ்க்கை யில் குறுக்கிட் டிராவிட்டால், அவள் இன்னும் சில் லாண்டுகள் அங்கேயே இருந்து மலரைக் கவனித்துக் கொண்டிருந்திருப்பாள். அதையும் கெடுத்து விட்டேனே. இனி எங்கு கண்டு தேடுவேன்?

ஒருநாள் திக்கற்ற மகளிர் இல்லம் சென்று தேடினேன். "அப்படியொருவரும் இங்கு இல்லை. இது பெண்கள் விடுதியாதலால் இனி இங்கே வரவேண்டாம்" என்று அந்த விடுதியின் தலைவியம்மா சொல்லி என்னை வழியனுப்பி விட்டார்கள். இனி அல்லியை மறந்துவிட

வேண்டியதுதானே? இதன் பிறகுதான் நடந்ததை என் பெற்றோர்க்குத் தெரிவித்தேன். தெரிவித்து என்ன செய்வது! எல்லோருமாகச் சேர்ந்து வருத்தப் பட்டதுதான் மிச்சம்! இப்படியே சில்லாண்டுகள் கழிந்தன.

மலர் இப்பொழுது ஓரளவு வளர்ந்துவிட்டாள். உயர்நிலைப்பள்ளியில் படித்துக்கொண் டிருக்கிறாள். என் மைத்துனர் பாண்டியன் சென்னைக்கு மாற்றிக் கொண்டு வந்துவிட்டார். தங்கை கற்பகம் இப்போது சென்னையில்தான் குடித்தனம் நடத்துகிறாள். இன்சு பெக்டர் மனைவியல்லவா? அவர்களுடைய மகன் மாறன் சென்னைக் கல்லூரி ஒன்றில் படித்துக்கொண் டிருக்கிறான். எங்கள் இரு குடும்பங்களும் வெவ்வேறு இடத்தில் இருந்தாலுங்கூட, அடிக்கடி ஒன்றுசேர்ந்து கொள்ளும்.



## 15

இளமையில் நானும் அல்லியும் கூடிக் குலவிக் கொக்கரித்து விளையாடியது போலவே, இப்பொழுது மலரும் மாறனும் விளையாடி வந்தார்கள். அவர்கள் இன்புறக்கண்டு இன்புறுவதே எங்கள் பொழுதுபோக்கு. சிற்சில சமயங்களில் மாறன் மலரை அழைத்துக் கொண்டு சிற்றுண்டிக் கடைக்குச் செல்வான்—திரைப் படம் காண்பிப்பான்—கடற்கரைக்கோ பூங்காவிற்கோ இட்டுச் செல்வான். சிலசமயம் அவர்களுடன் பெரியவர்களும் கலந்து கொள்வதுண்டு.

மலர் இப்பொழுது பருவமங்கை; எஸ். எஸ். எல். சி. படிப்பு முடித்திருந்தாள். மாறனோ கட்டிளங் காளை; கல்லூரிப் படிப்பு முடித்திருந்தான். கட்டின்றி விளையாடிக் கொண்டிருந்த இருவரும், இப்பொழுது தாங்களாகவே தங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக் கின்றனர். இது பருவத்தின் விளைவு போலும்!

எங்கள் இரு குடும்பத்தாரும் சேர்ந்து, மலருக்கும் மாறனுக்கும் மணம் செய்துவைப்பதென முடிவு செய் தோம். எங்களுக்குள் எந்தத் தகராறும் எழவில்லை. யார் வேண்டுமானாலும் நகை போட்டாலும் போடலாம் —விட்டாலும் விடலாம்; சீர் செய்தாலும் செய்யலாம்— செய்யாவிட்டாலும் விடலாம். அந்த அளவுக்கு, நாங்கள் வேறு—அவர்கள் வேறு என்ற பிரிவினை சிறிதும் இன்றி, இரு குடும்பத்தினரும் இரண்டறக் கலந்து ஒன்றியிருந் தோம். நாங்கள் எங்கள் பெறலருஞ் செல்வமாகிய மலரை அவர்களுக்குக் கொடுக்கிறோம்—அவர்கள் தங்கள் அரும்பெருஞ் செல்வமாகிய மாறனை எங் களுக்குக் கொடுக்கிறார்கள். இதைவிட இன்னும் வேறு எந்தச் சிறந்த செல்வத்தைக் கொடுத்து வாங்குவது? சங்க நிதி, பதும நிதி என இரு நிதியங்கள் தேவ உல கத்தில் இருப்பதாகக் கூறுகிறார்கள். மலரும் மாறனும் தான் எங்களுக்கு அந்த இருபெரு நிதியங்கள்! மேலும், என்னையும் அல்லியையும் எங்கள் பெற்றோர்கள் படுத்தி யதைப்போல, நாங்கள் யாரும் மலர்—மாறன் வாழ்க்கை யில் குறுக்கிட மாட்டோம். அவர்தம் இன்பவாழ்விற்கு எங்களால் இயன்றவரை ஒத்துழைப்போம்.

அல்லி தவிர மற்ற அனைவருக்கும் திருமண அழைப்பு விடுத்தோம். நேரில் சென்று அழைக்கவேண் டியவர்களை நேரில் சென்று அழைத்தோம். எல்லா

உறவினர்களும் நண்பர்களும் திருமணத்திற்கு வந்தனர். ஆனால் முரட்டு மாமாமட்டும் வரவேயில்லை. அத்தையை மட்டும் அனுப்பி வைத்திருந்தார். அதுவரைக்கும் மேல் அல்லவா ?

திருமணத்தைத் திருத்தணிகையில் வைத்துக் கொண்டோம். திருவிழா சமயம் அது. ஊரில் பெருங் கூட்டம். ஒரு திறந்தவெளி அரங்கில், தமிழவேள் தணிகைநாதன் அவர்கள் தலைமையில் திருமணம் ஆரம்ப மாயிற்று. தமிழ்த்திருமண மாதலின், திருவிழாவிற்கு வந்தவர் பலர் திருமணத்தை வேடிக்கை பார்க்கப் பெருந்திரளாய்க் குழுமியிருந்தனர். திருமண நிகழ்ச்சிகள் மிகவும் சிறப்பாக நடந்துகொண்டிருந்தன. நான் என் மகள் மலர்மணத்தைக் கண்குளிரக் கண்டு கொண்டிருந்தேன். "மலரும் மணமும் போல மலரும் மாறனும் மகிழ்ந்து வாழ்க" என்று நண்பர்கள் எழுப்பிய வாழ்த்தொலிகள் வானைப் பிளந்தன.

"திருமண மக்கள் நீடூழி வாழ்க! இந்நாள் போலவே எந்நாளும் நன்னாள் ஆகுக ! எல்லா நலங்களும் பெற்று இனிது திகழ்க !"

என்று வாழ்த்திய குரல் ஒன்று, தாலிகட்டும் வேளையில் என் காதுக்கு எட்டியது. ஆம்! "திருமண மக்கள் நீண்டகாலம் வாழவேண்டும். அவர்கள் இப்பொழுது மகிழ்ச்சியாய் இருப்பது போலவே எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இணைபிரியாது வாழ வேண்டும்." அவர்களுக்கு எல்லா நலங்களும் வளங்களும் இனிது பெருகவேண்டும்.—என்று நான் என் மனத் திற்குள் வாழ்த்திக்கொண் டிருந்தபோது, அதே கருத் துடைய அந்த வாழ்த்துக்குரல் அதே நேரத்தில் என்

காதில் விழுந்தது. இருவர் வாழ்த்துக்களிலும் எவ்வளவு ஒற்றுமை! இருவருக்கும் எவ்வளவு ஆர்வம்—எவ்வளவு அக்கரை! எத்துணை பரிவு—எத்துணை பற்று!

அந்த வாழ்த்துக்குரல் யாருடையது என்று திரும்பிப் பார்த்தேன்—தெரியவில்லை. குரல் வந்த திக்கு நோக்கிச் சென்றேன் — தெரியவேயில்லை. பெண்கள் நின்று கொண்டிருக்கும் பகுதியிலிருந்துதான் அந்தக் குரல் வந்திருக்கிறது—என்பது மட்டும் நன்ருகத் தெரிகிறது. அது ஒரு பெண்ணின் குரல்தான்—என்பதும் தெளிவாகப் புரிகிறது. யார் அந்தப் பெண்? என் நினைவு அலைகள் அடுக்கடுக்காக எழுந்து எங்கெங்கோ ஓடித்திரும்பின.

அந்தக்குரல், இதற்குமுன் கேட்டறிந்ததாக—பழகியறிந்ததாகவே தென்பட்டது. சற்று சிந்தித்துப் பார்த்தேன். ஆம், அது அல்லியின் குரல்தான்! "நான் எங்கிருந்தாலும், மலர்மணம் நடக்கும்போது வாழ்த்து கூற வந்துவிடுவேன்" என்று முன்பு ஒருமுறை அவள் சொல்லியிருந்தாள். அதன்படியே இப்போது அவள் வந்துவிட்டாள். அதுவுமன்றி, அவள் திருத்தணிகைப் பக்கம் இருப்பதாகக் காற்று வாட்டத்தில் சில திங்களுக்கு முன்பு யாரோ சொல்லக் கேள்விப்பட்டிருந்ததனுல்தான், நான் திருத்தணிகையில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தேன். அவள் இந்தப்பக்கம் இருப்பது உண்மையானுல், மலர்மணம் காண வந்தாலும் வரலாம் என்ற அவாதான் என்னை இவ்வாறுசெய்யத்தூண்டியது என் எண்ணப்படியே அவள் வந்தும் இருக்கிருள். ஆனுல் கண்ணெதிரில் காணவில்லையே!

அந்தப் பக்கம் நின்றிருந்த பெண்கள் அனைவரும் எனக்கு முன்பின் தெரியாதவர்கள் — திருவிழாவிற்கு வந்தவர்கள்—இப்பொழுது திருமணத்தை வேடிக்கை பார்ப்பதற்காக இங்கேவந்து நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களை நோக்கி, "இங்கு நின்றுகொண்டு வாழ்த்துக் குரல் எழுப்பிய பெண் எங்கே?" என்று கேட்டேன். "இந்நேரம்வரை இங்கே தான் நின்றுகொண்டிருந் தார்கள். இப்பொழுதுதான் இந்தப் பக்கமாகப் போய் விட்டார்கள்"—என்று அவர்கள் சொன்னார்கள். "அந்த அம்மா எப்படியிருந்தார்கள்" என்று கேட்டேன். "அந்த அம்மாவுக்குக் கிட்டத்தட்ட நாற்பது வயது நெருங்கியிருக்கும்—நல்ல சிவப்பு நிறம்—முக்காடு போட்டுக்கொண்டிருந்தார்கள்—திருமணத்தை மிகவும் முகமலர்ச்சியோடு பார்த்துச் சுவைத்துக்கொண்டு இருந்தார்கள்—நீங்கள் இந்தப் பக்கம் வரத்தொடங்கி யதும் அவர்களும் புறப்பட்டு விட்டார்கள்—குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், இந்த மணப் பெண்ணின் முகச் சாயல் அந்த அம்மாவுக்கும் இருக்கிறது—இதோ இந்தப் பக்கம்தான் போனார்கள்—வேண்டுமானால் போய்ப் பாருங்கள்!" என்று அந்தப் பெண்கள் சொன்னார்கள்.

"அல்லி அல்லி" என்று அழைத்துக்கொண்டே அவர்கள் காட்டிய பக்கமாக ஓடினேன்; தேடினேன்; சுற்றிச் சுற்றி அலைந்தேன். என் அல்லி கிடைக்கவே யில்லை. என்றைக்கிருந்தாலும் எங்களுடன் வந்து சேர்ந்துகொள்வாள் என்று நானாக வலிய என்னைத் தேற்றிக் கொண்டேன். வேறுவழி? பின்னர், என்னைத் தேடுவார்கள் என்ற நினைவு வரவே, திருமண அரங் கிற்குத் திரும்பினேன். அனைவரும் திருமண ஆர வாரத்தில் ஈடுபட்டிருந்தார்கள். என்னை எவரும்

கவனித்ததாகத் தெரியவில்லை. அல்லி கிடைக்கா விட்டாலும், மலர்மணத்தை அவள் கண்டுகளித்த ஒன்றே எனக்குப் போதும்! அப்பொழுது, மணவறையில் அமர்ந்திருந்த மணமக்கள் இருவரும், ஒருவரையொருவர் கண்சாய்த்து நோக்கிப் புன்முறுவல் பூத்துக்கொண் டிருந்ததை நோக்கி நான் பூரித்துப்போனேன். அந்தப் பூரிப்பில் அல்லியைப் பற்றிய கவலையை மறந்தேன். ஆனால் நான் அல்லியை மறந்தேனே தவிர, அவள் மணமக்களுக்குக் கூறிய வாழ்த்தைத் திரும்பத் திரும்ப உருவேற்ற என் நாக்கு மறக்கவேயில்லை. இதோ :—

"திருமண மக்கள் நீடூழி வாழ்க! இந்நாள் போலவே எந்நாளும் நன்னாள் ஆகுக! எல்லா நலங்களும் பெற்று இனிது திகழ்க!"

